# சிவபாத சேகரனின்
# தஞ்சைக் கல்வெட்டுக்கள்



வே. மகாதேவன் எம்.ஏ.

# சிவபாதசேகரனின்
# தஞ்சைக் கல்வெட்டுக்கள்



முதல் இராஜராஜசோழன் தஞ்சைப் பெரியகோவிலுக்கு அளித்த
நிவந்தக் கல்வெட்டுக்கள் மூலமும் விளக்கமும்



பதிப்பாசிரியர்

வித்துவான் வே. மகாதேவன் எம்.ஏ.

ஆடுதுறை.



வெளியிட்டோர்

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்
பொன்விழாக் கமிட்டி

ஸ்ரீ சங்கரா மேனிலைப்பள்ளி

9, வசந்தாபிரஸ் தெரு, அடையாறு

சென்னை—20.

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள்
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்
பொன்விழாக் கமிட்டி வெளியீடு.

முதல் பதிப்பு: பிப்ரவரி 1985 1000 பிரதிகள்

சிவபாதசேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள்

முதல் இராஜராஜசோழன் தஞ்சாவூர்ப் பெரிய கோவிலுக்களித்த கல்வெட்டுக்கள் (மூலமும் செய்திச் சுருக்கமும்)

பதிப்பாசிரியர்: **வித்துவான் வே. மகாதேவன், எம்.ஏ.**

**விலை: ரூபாய் 75** (எழுபத்தைந்துமட்டும்)

தக்க சான்றிதழ்களுடன் விண்ணப்பிக்கும் தமிழாசிரியர், [illegible] சிரியர், வரலாற்றுய்வாளர், ஆய்வு மாணவர், கல்லூரிப் பேராசி[illegible] மட்டும் சலுகை விலை ரூபாய் 25 (இருபத்தைந்து)க்கு ஒரு பிர[illegible] வழங்கப்பெறும்.



நூல் கிடைக்குமிடம்:
காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள்
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்
பொன்விழாக் கமிட்டி
சங்கரா மேனிலைப்பள்ளி,
9, வசந்தா பிரஸ் சாலை,
அடையாறு, சென்னை-20.

அச்சிட்டோர்: ராஜன் & கோ. பிரிண்டர்ஸ், 1, கூம்ஸ்தெரு, சென்னை—1.

# நூலில் நுழையுமுன்

சிவபாதசேகரன் முதல் இராஜராஜ சோழன் கி.பி. 985-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 18-ஆம் (ஆடிமாதம் புனர்வசு) நாளில் அரியணை ஏறியவன்; கி.பி. 1014 வரை அரசோச்சியவன். இவன் திருமுறைகண்டசோழன்; நிலமளந்த நிகரிலி சோழன்; களம்பல கண்ட சண்ட பராக்ரமன்; ஜெயங்கொண்ட சோழன். முத்தமிழ் வளர்த்த நித்தவிநோதன்.

இப்பெருமன்னன் இராஜராஜனின் முடிசூடிய ஆயிரமாவதாண்டு 1984-ஜூலை மீ 27 ஆம் நாள் முதல் 1985 ஆகஸ்டு மீ 13-ஆம் நாள் வரையிலான காலப்பகுதியாகும்.

முதல் இராஜராஜசோழனின் ஆயிரமாவது ஆட்சியாண்டு விழாவினை ஒட்டி 'முப்பெரும்பணி' களை ஆற்ற ஸ்ரீகாஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் திருவுளம் பாலித்தார்கள்.

பூஜ்யஸ்ரீ பெரியவாள் அருளுளப் பாங்கின் வண்ணம் இராஜராஜனின் ஆயிர மாவது ஆண்டு விழாவில் மும்முடிசோழனுக்கு 'முடிசூட்டும் விழா' நிகழ்வுற்றது. காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள் சமஸ்த்தானத் தினரால் 'அழகிய சோழ'னுக்குச் சூட்ட அருமையானதொரு கிரீடம் உருவாக்கப் பட்டது. நவமணிகள் பதிக்கப்பெற்ற இப்பொற்கிரீடம் 253-கிராம் எடையினது. 49000 ரூபாய் விலைமதிப்புடையது. இக்கிரீடத்தைத் தஞ்சைப் பெரியகோயிலினுள்ளே எழுந்தருளியுள்ளதும் 'ஸ்ரீராஜராஜன்' எனப்படுவதுமான தொன்மையான திருவுரு விற்கு, மறைந்த பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திராகாந்தி அவர்கள் 16-9-84 அன்று சூட்டினார்கள்.

இரண்டாவது பணியாகத் தஞ்சைப் பிரஹதீஸ்வரராலயத்தில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள 'ஸ்ரீ ராஜராஜேச்வரமுடைய பரமஸ்வாமி'க்கு நித்தியவழி பாடுகள் நிகழ்வதற்பொருட்டாகத் 'தஞ்சை பிரஹ்தீஸ்வரர் நித்யபடி பூஜாடிரஸ்ட்' துவக்கப் பெற்றது.

பூஜ்யஸ்ரீ பெரியவாள், 'சோழகுலசுந்தரன்' தான் எடுப்பித்த பெரிய கோவிலுக் களித்துள்ள எண்ணற்ற பொற்கலங்கள், வெள்ளிப் பாத்திரங்கள், நவமணிஹாரங்கள் முதலானவற்றின் எடை விவரம், விலைமதிப்பு ஆகியவற்றை அனைவரும் அறியத்தக்க அளவில் இக்கால அளவைமுறைகளில் எழுதவேண்டும் எனவும் இராஜராஜன் தஞ்சைப்பெரியகோவிலில் நித்ய நைமித்திக வழிபாடுகள் நிகழ்வதற்காகத்தந்த பல் வேறு வகையான சிவதருமங்களைப் பற்றிய விவரங்களைக் கல்வெட்டுக்களுடன் தர வேண்டும் எனவும் திருவருளாணை பிறப்பித்தருளினார்கள். ஸ்ரீ ஆசார்யசுவாமிகளின் திருவுளக்குறிப்பின் வண்ணம் இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது.

இராஜராஜசோழன் கண்ணுதற் பெருங்கடவுட்கு எண்ணில்லாத தருமங் களைச் செய்துள்ளான். மன்னர்வழியொழுகிய மக்களும் ஏராளமான சிவதருமங்களைச் செய்துள்ளனர்.

ஸ்ரீராஜராஜ சோழன் செய்துள்ள சிவதருமங்களை அறியும் நாமனைவரும்,

> **"ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே**
> **செல்லும்வாய் எல்லாம் செயல்"**

என்னும் குறள் நெறிக்கேற்ப நம்மால் இயன்ற சிவதருமங்களை வாய்ப்பு நேரும் போதெல்லாம் புரிவதே அப்பெருமன்னனை நினைவு கூரும் நெறியாகும்.

காஞ்சி ஸ்ரீ காமகோடி
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்த்ர

# Introductary

Raja Raja I, well known by the name Sivapathasekhara (Worshipper of the Feet of Siva) was crowned on the 18th of July 985 A.D. (Star Punarvasu in the solar month Adi). He was also popularly known as Tirumuraikanda Chola (who discovered the Tirumurais); Nigarilichola (who has none to equal him); Nilam Alantha Chola (who conducted the land survey); Kalam Pala Kanda Parakraman (a hero who won in many battle fields); Jayamkonda Chola (the victorious Chola); Muththamizh Valartha Nitha Vinothan (who helped the growth of the Three fold Tamil viz., literature, music and drama) and so on.

The millennium year of Raja Raja's ascension to the throne is being reckoned from 27-7-1984 to 13-8-1985.

During the millennium celebration of Raja Raja's Coronation, His Holiness Jagadguru Sri Chandra Sekarendra Saraswathi Swamiji, the Head of Sri Kanchi Kamakoti Peetha was pleased to propound threefold schemes to commemorate Raja Raja in a fitting manner.

As per the directions of the above said Senior Holiness, a gold crown decked with precious gems weighing 253 grams and costing Rs. 49,000/- was made and the Image of Raja Raja now found in the Temple of Brihadeeswara at Thanjavur was adorned with that crown on 16-9-84 by the late lamented Prime Minister of the Bharath, Srimathi Indira Gandhi.

As for the second phase of the commemoration, a Trust named "The Thanjavur Brihadeeswara Swami Daily Pooja Trust" has been founded to provide funds for the conduct of the daily puja or worship of Brihadeeswara, the presiding deity in the Big Temple at Thanjavur.

Regarding the third fact of His Holiness' part in the millennium celebrations, the Worshipful Holiness has been very gracious to cause the publication of a souvenir containing a detailed description of the ornaments, vessels made of silver and gold, their weight, cost etc. in the modern denomination of weights and measures offered by Raja Raja to the Great Temple at Thanjavur and also the details of endowments made by him to the Temple along with the actual text of the inscriptions which contain details on the above said subject. This book has been prepared and edited according to the guidelines offered by His Holiness and published for the benefit of the public.

It is earnestly hoped that those who go through this book would, as given in the couplet (No. 33) of Thiruvalluvar, try their utmost to perform "Siva Dharma" according to their wish and mite at any time they desire and are able to do.

LONG LIVE THE GLORY OF RAJA RAJA THE SIVAPATHA SEKHARA.
ALL HAIL TO ADI SANKARA

உ

ஸ்ரீ சந்திர மௌலீச்வரர் துணை

# பதிப்புமுன்னுரை

ஸ்வஸ்திஸ்ரீ

அறம்செய்தான் செய்தான் அறம் செய்தான் பாதம்
திறம்பாமல் சென்னிமேல் வைத்து — கல்வெட்டுப்பா

தமிழ்ப் பேரன்பர்களே,

வணக்கம்

முதல் இராஜராஜசோழன் எடுப்பித்த ஆலயங்களுள் தஞ்சைப்பெரியகோயில் தலையானது எனலாம். மஹோன்னதமான இப்பேராலயம், கல்வெட்டுக்கள் பல வற்றைத் தன்மாட்டுக்கொண்ட வரலாற்றுக்கருவூலம். கருவூர்த்தேவரின் திருவிசைப் பாப்பெற்ற திருத்தலம் இது.

தஞ்சைப் பெரியகோவிற்கு இராஜராஜசோழனும் அவன் சம காலத்தவரும் பிற் காலத்தவரும் தந்துள்ள தானங்களை இவ்வாலயத்தில் பொறிக்கப்பட்டுள்ள கல் வெட்டுக்கள் கூறுகின்றன. இவையனைத்தும் மத்திய அரசு தொல்லியல் துறையின ரால் தென்னிந்திய சாசனத் தொகுதியில் இரண்டாம் தொகுதியாக ஆங்கிலமொழி பெயர்ப்புடன் கி.பி. 1892-இல் வெளியிடப் பட்டுள்ளன. இந்நூல் அண்மையில் டெல்லி நவ்ரங் பதிப்பகத்தினரால் பதிப்புற்றுள்ளது.

முதல் ராஜராஜசோழன் தஞ்சைப் பெரிய கோவிலுக்குத்தானே அளித்த தான மான்ய விவரங்களைக் கூறும் கல்வெட்டுக்களை மட்டும் தேர்ந்தெடுத்துக் கல்வெட்டுக் கூறும் செய்தியையும் சுருக்கமாக விளக்கிப் பதிப்பிக்குமாறு காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் அருளாணை பிறப்பித்தருளினார்கள். ஷெ கல்வெட்டுக்களை இன்னின்னவாறு விளக்குதல் வேண்டும் என்றும் எடை முதலாயினவை இக்காலத்தில் வழக்கிலுள்ள அளவை முறை களிலும் தரப்பெற வேண்டும் என்றும் மிகப்பல புதுக் கண்ணோட்டங்களைப் புகட்டி யருளினார்கள். 'தோன்றாத் துணையாய்த் தோற்றம் தந்து' ஆட்கொண்டருளும் பூஜ்யஸ்ரீ பெரியவாள் அருளிச் செய்த வழிகாட்டுதலே இந்நூலாக்கத்திற்கு அடிப்படை யாய் அமைந்ததொன்றாகும். வழிகாட்டிய அருளாளர் பூஜ்யஸ்ரீ பெரியவாள் ஸ்ரீ பாத கமலங்களைத் திசைநோக்கி இறைஞ்சித் தொழுகிறேன்.

இந்நூலில் கல்வெட்டுக்கள் தென்னிந்திய சாசனத் தொகுதியில் உள்ள வண்ணம் அச்சிடப்பட்டுள்ளன.

இந்நூலைப் பயில்வோர் தொல்லியல் எழுத்துக்களை அறியத்தக்க அளவில் மைப்படி (Estampage)களும் விளக்கப் படங்களும் வெளியிடப் பட்டுள்ளன. மைப்படி களின் நிழற்படங்களை உதவிய மைசூர் தலைமைக் கல்வெட்டாய்வாளர் அலுவலகத் தினர்க்கு நன்றி செலுத்திக் கொள்கிறேன்.

இந்நூலில் வெளியிடப்பட்டுள்ள புகைப்படங்களைத் தந்துதவிய மத்திய அரசு தொல்லியல் துறை தெற்குப் பிரிவு சென்னை அலுவலகத்தினர்க்கும், தமிழ்நாட்டரசு தொல்லியல் துறையினருக்கும் புதுவை பிரெஞ்சிந்தியக் கலைக் கழகத்தவருக்கும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டுத் துறையினருக்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

இந்நூலினைச் சிறந்தமுறையில் அச்சு ஏற்றித்தந்த சென்னை ராஜன் & கோ வினருக்கும் வெளியிடுதற்பணிபுரியும் ஸ்ரீஜயேந்திரர் பொன்விழாக் கமிட்டியினருக்கும் நன்றியறிதற்கடப்பாடுடையேன்.

முதல் இராஜராஜசோழன் எண்ணற்றசிறப்புப் பெயர்களை யுடையவன். அப்பெயர்களுள் 'ராஜசர்வக்ஞன்' என்பதும் ஒன்று. இதனை.

செந்திரு மடந்தைமன் ஸ்ரீராஜ ராஜன்
இந்திர சமானன் இராஜ சர்வக்ஞன்
எனும் புலியைப் பயந்த பொன்மான்

என்னும் திருக்கோவலூர்க் கல்வெட்டுப் பாடல் காட்டும். அறுசமயத் ஸ்தாபனம் செய்து அத்வைத நெறி புரந்த, ஆதிசங்கரர் ஸ்ரீ காஞ்சிமாநகரில் 'சர்வக்ஞபீடம்ஆன ஸ்ரீ காமகோடி பீடத்தை நிறுவியவர்கள்' என்பது உலகறிந்த செய்தி. சர்வக்ஞ பீடமான ஸ்ரீ காமகோடி பீடத்தில் வழிவழி வந்த அருளாளர், தவமுனிவருள் சர்வக்ஞ ராய பூஜ்யஸ்ரீ பெரியவாள், அரசருள் சர்வக்ஞனை இராஜராஜ சோழனைப் பற்றி நூல் எழுதுமாறு அருளாணை பிறப்பித்தது பொருத்தப்பாடுடையதாகும்.

வயதாலும் அறிவாலும் எளியவனாகிய என்னையுமோர் பொருட்டாக் கொண்டு அருள் செய்து என்னை இப்பெரும்பணியில் ஈடுபடுத்திய பேரருளாளராய காஞ்சிப் பெரியவர்கள் மூவருக்கும் என் மனம் மொழி மெய்களாலாகிய வணக்கங்களை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

பாண்டிய மன்னருள் ஒருவன், 'தென்காசி கண்ட பெருமாள்' என்னும் சிறப்புப் பெயரினையுடைய 'அரிகேஸரி பராக்ரம பாண்டியன்' ஆவான். இவன் 'தான் கட்டிய தென்காசிச் சிவன் கோயிலில் எதிர்காலத்தில் வரக்கூடிய குற்றங்களைக் களைந்து திருப்பணி புரிபவர்களை இப்போதே வணங்குகிறேன்' என்று கூறிக்கொண்டிருக்கிறான்.

யாரேனும் இந்தத் தென்காசி மேவும் பொன்னாலயத்து
வாராத தோர் குற்றம் வந்தால் அப்போது ஆங்கதனை
நேராகவே ஒழித்துப் புரப்பார்களை நீதியுடன்
பாரார றியப் பணிந்தேன் பராக்ரம பாண்டியனே

என்பது கல்வெட்டுப் பாடல், தமிழ் நாடாண்ட பெருவேந்தர்கள், திருக்கோயில்களை எடுப்பித்தலையும் எடுப்பக்கப் பெற்றிருந்த சிவாலயங்கட்குத் திருப்பணிகளைப் புரிதலையும் பூசனை இடையறாது நிகழப் பலப்பல நிவந்தங்கள் தருதலையும் தம் தலையாய கடனாகக் கொண்டரர்வர். தமிழின்பாலும் தேவார திருமுறைகளிலும் பேரீடுபாடுகொண்டு அத்துவித நெறி பரப்பும் அருளாளர் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ

# தஞ்சைப் பெருங்கோயிற்கு
# ஸ்ரீ இராஜராஜன் தந்த அறக்கொடைகள்

## 1. தஞ்சைக் கல்வெட்டுக்கள்—சில செய்திகள்

முதல் இராஜராஜசோழன் கி.பி. 985-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 18-ஆம் நாளன்று (ஆடி மாதம் புனர்வசு நாள்) சோழப்பேரரசின் அரியணையில் அமர்ந்தவன். இவன் கி.பி. 1014 வரை அரசுபுரிந்தவன்[1]. இப் பேரரசனால் எடுப்பிக்கப்பெற்ற ஆலயங்களுள் தஞ்சைப் பிரஹதீஸ்வரர் திருக்கோயிலும் ஒன்றாகும். இவ்வாலயத்தில் இராஜராஜன் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் அறுபத்து நான்கும்[2] இவன் மகன் இராசேந்திரன் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் பதினெட்டும்[3] உள்ளன. மத்திய அரசு தொல்லியல் துறையினரால் பதிப்பிக்கப்பெற்றுள்ளனவும் இராஜ ராஜன் காலத்தனவுமாகிய அறுபத்துநான்கு கல்வெட்டுக்களில் இருபத்தைந்து சாசனங்கள், மாமன்னன் ராஜராஜன் தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் செய்த அறப்பணிகளை விளக்குவனவாகும். [இவையனைத்தும் இந்நூலில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.] ஏனைய சாசனங்கள் இராஜராஜனின் திருத்தமக்கையாரான ஆழ்வார் பராந்தகன் குந்தவையாரும் இராஜராஜனின் தேவியரும் இவன் கால அரசியல் தலைவரும் அக்கோயிற்களித்த அறக்கொடைகளை விவரிக்கின்றன. இக் கல்வெட்டுக்களில் கண்ட செய்திகளை முதற்கண் தொகுத்துச் சுட்டுதல் இக் கட்டுரையின் நோக்காகும்.

### தஞ்சையில் பெருங்கோயில் கண்டமை :

முதல் இராஜராஜசோழன் தஞ்சாவூரில் உள்ள பிரஹதீஸ்வரர் ஆலயத்தை எடுப்பித்தமை, "தஞ்சாவூரில் நாம் எடுப்பிச்சருளின திருக்கற்றளி ஸ்ரீ ராஜராஜீஸ்வர முடையார்" என்று இவன் தன் கல்வெட்டொன்றில் குறித்துள்ளமையால் தெளிவுறும்.[4] இவன் எடுப்பித்த இப் பெருங்கோயில் இவன் பெயரால் 'ஸ்ரீ ராஜராஜீஸ்வரம்' என்று வழங்கப்பட்டது. (ஈச்வரம்—சிவாலயம்.) ராஜராஜன் தான் எடுத்த திருக்கோயிலைப் பெரிய கோயிலாக அமைப்பித்தான். மிக உயரமானதொரு (60.40 மீட்டர் உயரம்) பெருவிமானம் கண்டான். இவ் விமானத்தின் கீழ் அமையும் 'கருவறையில்' (30.18 சதுரம்) மிகப் பெரியதொரு சிவலிங்கத்தை எழுந்தருள்வித்தான். தஞ்சைப் பெரிய கோயில் ஸ்ரீ விமானம் 'தக்ஷிண மேரு' எனப்பெறுகிறது. 'தென்னாட்டு இமயம்' என்பது இதன் பொருள். இவ்வாலயம் 'தேவாலய சக்கரவர்த்தி' என அறிஞரால் போற்றப்படுவதாகும்.[5]

---

1. Date of Birth and the date of Coranation—N. சேதுராமன். Page 7.
2. S.I.I. Vol. No. II கல்வெட்டுகள் : 1-6; 24-57; 59; 63-71; 79-81; 84-95.
3. IBID 7-20; 60; 82-3.
4. S.I.I. Vol. II க. எண் : 1.
5. Mid. CHOLA TEMPLES—S.R.B. பக். 16. F.N.

## திருவிசைப்பாப்பெற்ற திருத்தலம் :

முதல் இராஜராஜசோழன் காலத்தும் இவன் மகன் முதல் இராஜேந்திர சோழன் காலத்தும் வாழ்ந்த சைவப் பெரியாருள் ஒருவர் 'கருவூர்த் தேவர்' என்ற ஞானியாவார். 1010—1044 வரை சோழப் பேரரசரொடு பெருநட்புப் பெற்றிலங்கிய இப்பெருமகனுருக்குச் சோழரொடு இருந்த தொடர்பின் திண்மையைக் கங்கை கொண்ட சோழேச்வரத் திருவிசைப்பாவின் திருக்கடைக்காப்புக் காட்டுகிறது. இக் கருவூரார் தஞ்சையில் முதல் இராஜராஜசோழன் கட்டிய கோயிலே,

''உலகெலாம் தொழவந் தெழுகதிர்ப்பருதி ஒன்றுநூ(று) ஆயிரங்கோடி
அலகெலாம் பொதிந்த திருவுடம்(பு) அச்சோ அங்ஙனே அழகிதோவரணம்
பலகுலாம் படைசெய் நெடுநிலை மாடம் பருவரை ஞாங்கர்வெண்திங்கள்
இலைகுலாம் பதணத்(து) இஞ்சிசூழ் தஞ்சை இராசராசேச் சரத்திவர்க்கே-''

என்று துவங்கும் 'திருவிசைப்பாப்' பாடிப் பரவியுள்ளார். திருவிசைப்பா—திருப்பல்லாண்டு எனப்பெறும் ஒன்பதாம் திருமுறையுள் ஒன்ருக இப்பதியம் இடம் பெற்றுள்ளது. இது தஞ்சைப் பெருங்கோயிலின் சமயச் சிறப்பினைக் காட்டுவதாகும்.

தேவார திருப்பதியங்களைப்போல, இசைநலம் பொருந்தியவையாயுள்ள திருப்பதியங்கள் இருபத்தொன்பதினையும் (திருவிசைப்பா) திருப்பல்லாண்டினையும் ஒன்பதாம் திருமுறையாகச் சான்ருேர் வழங்கியுள்ளனர். இவ்வொன்பதாம் திருமுறையின் சிறப்பினையும் மக்கட்கு இத் திருமுறையில் இருந்த தோய்வினையும் 'பஞ்சபுராணம்' ஓதுங்காலத்துத் திருவிசைப்பாவில் ஒன்றும் திருப்பல்லாண்டில் ஒன்றும் ஆக இரண்டு பாடல்கள் ஓதப்பெறுவதால் புலனுகும்.

கருவூர்த் தேவர் தஞ்சைப் பெரிய கோயிலை, 'இஞ்சிசூழ் தஞ்சை இராஜராஜேச்வரம்' எனக் குறிப்பர். இராஜராஜன் மாமன்னனுக அரசோச்சியமையை,

''குடை கெழு நிருபர் முடியொடு முடிதேய்ந்
துக்க செஞ் சுடர்ப்படு குவையோங்கு
இடை கழி மாடத்து இஞ்சிசூழ்தஞ்சை''

எனவும்,

''உவரிமா கடலின் ஒலிசெய் மா மறுகில்
உறுகளிற்றரசின தீட்டம்
இவருமால் வரைசெய் இஞ்சிசூழ் தஞ்சை''

எனவும் குறிப்பிடுகிருர். ''தஞ்சைப் பெரிய கோயிலில் கோயில் கொண்டருளிய மாதேவர் தன் நெஞ்சினைக் கோயிலாகக் கொண்டெழுந்தருளியவர்; மகளிர் பலர் நடனமாடும் பெருங்கோயிலில் உறைபவர்'' என்கிருர் கருவூரார்.

தஞ்சைப் பெருங்கோயிலின் முன்னைய நிலை, அப்பர் தம் பாடலில் குறித்த 'தளிக்குளம்' என்னும் வைப்புத்தலமாகும் என்பர்.[1] தஞ்சைப் பெருங்கோயிற்கு இராஜராஜனின் நண்பரும் சிவயோகியுமான கருவூர்த்தேவர் திருவிசைப்பா அருளிச் செய்துள்ளமை சமயச் சிறப்பூட்டியுள்ளமை இது வைப்புத்தல மன்றென்பதனைக் காட்டுவதாகும்.

இராசராசேச்சுரத்துப் பரமஸ்வாமியை,

''அருமருந் தருந்தி அல்லல் தீர்கருவூர்
அறைந்தசொல் மாலையீரைந்தின்
பொருண் மருந்துடையோர் சிவபத மென்னும்
பொன்னெடும் குன்றுடையோரே''

என்னும் அருள்வாக்கிற்கேற்பத் திருமுறைகளில் தோய்வுகொண்டிருந்த அக்கால மக்கள் இப் பெருங்கோயிலில் திருவிசைப்பாப் பாடிப் பரவி வழிபட்டனர் என அறியலாம்.

**தஞ்சைக் கோயிற்பணி முழுமை பெற்ற காலம் :**

இராஜராஜன் கட்டிய தஞ்சைப் பெருங்கோயிற்பணி முற்றுப்பெற்ற காலத்தை ஒரு கல்வெட்டுக் குறிப்பினால் உணரவியலும். தஞ்சைப் பெருங்கோயிலில் உள்ள இராஜராஜனுடைய கல்வெட்டுக்களில் முற்பட்டது இவனுடைய 26-ஆவது ஆட்சி யாண்டு நாள் 20-க்குரியது. இக் கல்வெட்டுள் இவ்வரசன் தன் ஆட்சியின் பல்வேறு காலங்களில் இக்கோயிற்களித்த கொடைகளின் விவரங்கள் கூறப்பட்டுள்ளன.

அவை, முறையே

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 25 | ஆவது | ஆட்சியாண்டு | 312 | ஆவது | நாளிலும் |
| 26 | ,, | ,, | 14 | ,, | ,, |
| 26 | ,, | ,, | 27 | ,, | ,, |
| 26 | ,, | ,, | 34 | ,, | ,, |
| 25 | ,, | ,, | 275 | ,, | ,, |
| 26 | ,, | ,, | 104 | ,, | ,, |
| 26 | ,, | ,, | 318 | ,, | ,, |
| 26 | ,, | ,, | 319 | ,, | ,, |

23 ஆமாண்டு முதல் 29 ஆமாண்டு வரையிலும் தரப்பெற்ற கொடைகளாகும். இக் கொடைகளுள் முற்பட்டன 25 ஆமாண்டு 275-ஆம் நாளிலும் 25 ஆமாண்டு 312-ஆம் நாளிலும் தரப்பெற்றனவாகும்.

---

1. பன்னிரு திருமுறை வரலாறு—முதற்பகுதி. பக். 924-ல் 111. 'தளிக்குளம்' பாற்குளம்போலப் புண்ணியப்புனலாகலாம். தஞ்சைப் பெருங்கோயிலின் முன்னைய நிலை தளிக்குளமென்னில் திருவிசைப்பாப் பாடுவித்துச் சமயப் பெருமை சேர்த்திருக்கவேண்டியதில்லையன்றோ ?

இக் கல்வெட்டில்,

"யாண்டு இருபத்தைஞ்சாவது நாள் இருநூற்றெழுபத்தைஞ்சிஞல் உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் ஸ்ரீ விமானத்து செம்பின் ஸ்தூபித்தறியில் வைக்கக் குடுத்த செப்புக்குடம் ஒன்று நிறை மூவாயிரத்து எண்பத்துமுப்பலத்தில் சுருக்கின தகடு பல பொன் ஆடவல்லான் என்னும் கல்லால் நிறை இரண்டாயிரத்து தொள்ளாயிரத்து இருபத்தறு கழஞ்சரை"

என்றுள்ளது. இதஞல் இராஜராஜன் தன்னிருபத்தைந்தாமாண்டு 275-ஆம் நாளில் ஸ்ரீ விமானத்து ஸ்தூபித்தறியில் வைப்பதற்குச் செப்புக் குடம் கொடுத்துள்ளமை அறியப்பெறும். இவ்வறச்செயல் இந்நாளில் கட்டுமானப் பணி முற்றுப்பெற்றமையைக் காட்டுவதாகும். இந்நாளில் கோயிற் குடமுழுக்கு நிகழ்வுற்றதாதல் வேண்டும். இந்நாள் கி.பி. 1010 ஏப்ரல் 22-ஆம் நாளாகும் என்பது வரலாற்றறிஞர் கருத்தாகும்.[1]

இதன்பின் இவனுடைய 25 ஆமாண்டு 312-ஆம் நாள் (முன் கூறிய கொடைக்கு 7 நாட்கட்குப்பின்) ஸ்ரீ பலி எழுந்தருளுவதற்காகப் பொன்ஞல் ஆகிய விக்கிரஹமொன்றை இராஜராஜன் தந்தமை அறியப்படுகிறது. இதஞல் நித்ய நைமித்திக வழிபாடுகள் 25-ஆமாண்டிறுதியிலேயே தொடங்கிவிட்டமை உறுதிப்பெறுகிறது.

**இராஜராஜன் காலத்தில் தஞ்சைக் கோயில்:**

தஞ்சைப் பெரிய கோயில் இன்று பல பரிவார ஆலயங்களுடையதாக அமைந்துள்ளதல்லவா? முதல் ராஜராஜன் காலத்தில் இருந்த கட்டடப் பகுதிகள் எவை என நோக்குவோம்.

இராஜராஜன் காலத்தில் 'சண்டிகேஸ்வரர்' ஆலயம் மட்டுமே பரிவார ஆலயமாக இவஞல் அமைக்கப்பட்டிருந்த சிற்றுலயம் ஆகும். பரிவார ஆலயம் மற்றென்றில் விநாயகர் எழுந்தருளி இருந்தார்.[2]

இப் பெருங்கோயிற்கு இரண்டு கோபுர வாயில்களும் அணுக்கன் திருவாயில் இரண்டும் அமைந்திருந்தன. முதல் கோபுரம் 'கேரளாந்தகன் திருவாயில்' இரண்டாம் கோபுரம் 'இராஜராஜன் திருவாயில்' எனப் பெயர் பெற்றிருந்தது. ஸ்ரீ விமானத்துக்குக் கீழமையும் கருவறைக்குச் செல்லப் பக்கவாட்டில் அமையும் வாயில் 'திரு அணுக்கன் திருவாயில்' ஆகும்.

---

1. Date of Birth and the Date of Coranation—By N. Sethuraman. Page. 7. Seminarpaper—Seminar Held at Tamil University Tanjore on 18th, 19th SEP 84.
2. பரிவார ஆலயத்துப் பிள்ளையார் தஞ்சைப் பெரிய கோயில் மேலைத் திருச்சுற்று மாளிகையில் முதல் மாடத்திருந்திருத்தல் வேண்டும். இவ்வாலயம் இவரைக் குறிக்கும் கல்வெட்டுக்கள் உள்ள இடத்திற்கருகில் — (No. 37. 36, 85, 86, 87) அதாவது மேலைத் திருச்சுற்றில் இருந்திருக்கவேண்டும், (S.I.I. Vol. II Page 407. 85 Eng. intro) மேலைத் திருச்சுற்றில் நைருதியாலயத்தை அடுத்துள்ள விநாயகராலயம் இது எனலாம்.

திருக்கோயில் முற்றத்தை ஒட்டித் திருச்சுற்று மதில் ஒன்றும் அதனை ஒட்டித் திருச்சுற்று மாளிகையும் இராஜராஜன் ஆணைப்படி அமைக்கப்பட்டிருந்தது. இப் பணியை நிறைவேற்றியவன் இவ்வரசனின் சேனைத் தலைவன் 'கிருஷ்ணன் ராமனான மும்முடி சோழப் ப்ரும்மமாராயன்' என்பவனும்.

திருச்சுற்று மாளிகையில் அட்டதிக்குப் பாலகர்கட்குத் தனித்தனியே சிற்றாலயங்கள் இருந்தன. (1) இந்திரன் (2) அக்னி (3) எமன் (4) நைருதி (5) வருணன் (6) வாயு (7) குபேரன் (8) ஈசானன் என்பார் முறையே கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்னும் திசைகட்குரிய தெய்வங்களாவர். இவ்வாலயங்கள் தனித்தனிக் கலசங்களையுடைய சிற்றாலயங்களாகத் திருச்சுற்று மாளிகைப் பகுதியிலேயே அமைக்கப்பட்டிருந்தன. இவ்வாலயங்கட்கு ஸ்தூபிக்குடங்கள் ராஜராஜ தேவர் குருக்கள் 'ஈசான சிவபண்டித'ரால் தரப்பட்டுள்ளன. சிலர் 'அஷ்ட பரிவார தேவதை'கட்கும் பரிவார ஆலயங்களிருந்தன என்பர்.[1]

இப் பகுதிகள் நீங்கலாகப் பரிவார ஆலயங்களாக உள்ள அனைத்தாலயங்களும் இராஜராஜனின் பின்னையோர் காலத்திய கட்டடப் பகுதிகளேயாகும்.

**இராஜராஜனின் ஆணை :**

தஞ்சையில் பெருங்கோயில் எடுப்பித்த மாமன்னன் இராஜராஜன் அப்பெருங் கோயிலுக்குப் பல அறக்கொடைகளை அளித்தான். அம் மன்னனைப் பின்பற்றி அவன் தமக்கையும் மனைவியரும் அரசியல் அலுவலரும் பிறரும் பல அறக்கொடைகளைத் தந்தனர். இம்மன்னன் தானும் பிறரும் தந்தனவற்றை எல்லாம் கல்லில் வடிக்கும் நோக்கம் கொண்டான்.

> " கோ ராஜகேஸரி வர்மரான ஸ்ரீ ராஜராஜதேவர்க்கு யாண்டு 26-ஆவது நாள் 20
>
> உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் தஞ்சாவூர்க் கோயிலினுள்ளால் இருமடி சோழனின் கீழைத் திருமஞ்சன சாலை தானம் செய்தருளாவிருந்து
>
> " பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார்க்கு
>
> நாம் குடுத்தனவும்
> நம் அக்கன் குடுத்தனவும்
> நம் பெண்டுகள் குடுத்தனவும்
> மற்றும் குடுத்தார் குடுத்தனவும்
> ஸ்ரீ விமானத்திலே கல்லில் வெட்டுக "

என்று திருவாய்மொழிந்தருளினன். (S.I.I. Vol. II No. 1.) இராஜராஜனின் இச் சாசனப் பகுதியில் இருந்து தஞ்சை நகரம் பாண்டிய குலாசனி வளநாடு

1. Mid. Chola Temples—ஸ்ரீ S.R.B. பக்கம் 24-5.

(வளநாடு—ஜில்லாவுக்குச் சமமான நிலப்பரப்பு) என்னும் பகுதியிலிருந்த தஞ்சாவூர்க் கூற்றம் (தாலுகாவுக்குச் சமமான நிலப்பரப்பு) என்னும் பகுதியில் இருந்தமையும் அந்நகரில் இராஜராஜன் இராஜராஜீச்வரம் என்னும் பெயரால் கற்கோயில் கண்டமையும் அக்கோயிலுக்குத் தானும் தன் தமக்கையும் தன் மனைவியரும் பிறரும் தந்த கொடைகளை எல்லாம் கல்வெட்டுக்களில் பொறிக்க உத்தரவிட்டமையும் பெறப் பெறும். அவன் திருவாய் மொழிந்தருளியபடி வெட்டப்பெற்ற அக் கல்வெட்டுக்கள் அரிய செய்திகளை அறிவிப்பனவாம். வரலாற்றுக் கருவூலங்களாகும்.

**இராஜராஜன் காலச் செப்புத் திருமேனிகள் :**

சிவபாதசேகரன் இராசராசனும் பிறரும் தஞ்சைப் பெரிய கோயிலுள் பல அரிய தெய்வத்திருமேனிகளை எழுந்தருள்வித்தனர். இவ்வாறு எழுந்தருள்விக்கப் பெற்ற திருமேனிகள் பின்வருமாறு :—

**I இராஜராஜன் எழுந்தருள்வித்தன :**

1. ஸ்ரீ பலி எழுந்தருளும் பொன்னின் கொள்கைத்தேவர் (S.I.I. Vol. II No. 1)
2. பொன்னின் க்ஷேத்ரபாலதேவர் (S.I.I. Vol. II No. 1)
3. வெள்ளியால் ஆன வாசுதேவர்கள் (S.I.I. II No. 91)
4. தக்ஷிணமேருவிடங்கர் (S.I.I. V. 2 எண். 15)
5. ஆடவல்லான்
6. மஹாமேருவிடங்கர் (S.I.I. Vol. II எண். 10)
7. மஹாமேருவிடங்கர் நம்பிராட்டியார் (S,I.I. II எண். 10)
8. தஞ்சைவிடங்கர்
9. சந்திரசேகரதேவர் (S.I.I. II எண். 54)
10. சந்திரசேகரதேவர் நம்பிராட்டியார் (S.I.I. Vol. II எண். 54)
11. சண்டேச்வர பிரஸாததேவர் (எண். )
12. பஞ்சதேஹமூர்த்திகள்
13. சுப்பிரமணியதேவர்
14. தக்ஷிணாமூர்த்திகள்
15. மஹாவிஷ்ணுக்கள்
16. மஹாவிஷ்ணுக்கள் நம்பிராட்டியார்
17. சண்டேஸ்வரதேவர்
18. நிருத்தம் செய்கின்றாராகப் பிள்ளையார் கணபதியார்
19. ,,
20. நின்றாராகப் பிள்ளையார் கணபதியார்
21. ,,
22. சுகாசனம் இருந்தாராகப் பிள்ளையார் கணபதியார்
23. ,,
24. ,,

II இராஜராஜனின் திருத்தமக்கையும் வல்லவரையன் வந்தியத்தேவனின் தேவியுமான ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் எழுந்தருள்வித்தன:

1. ஆடவல்லார் நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரி
2. தக்ஷிணமேருவிடங்கர் நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரி (எண். 6)
3. தஞ்சை விடங்கர் நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரி (எண். 6)
4. பொன்மாளிகைத் துஞ்சினதேவர் (எண். 6)
5. ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் தம்மையாக எழுந்தருள்வித்த திருமேனி.

III அரசமாதேவியர் எழுந்தருள்வித்தன:

1. ஒலோக மஹாதேவியார்:
    1. திருவடி நிலையில் எழுந்தருளி ஸ்ரீ பலி எழுந்தருள்கின்றாராகக் கனமாக எழுந்தருள்வித்த பிச்சதேவர் (எண். 34)

2. சோழமாதேவி:
    1. ஆடவல்லார் (எண். 42)
    2. ஆடவல்லார் நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரியார் (எண். 42)
    3. ரிஷப வாஹன தேவர் (எண். 46)
    4. ரிஷப வாஹன தேவர் நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரியார் (எண். 46)
    5. ரிஷபம் (எண். 46)
    6. கணபதி (எண். 46)

3. அபிமானவல்லி:
    1. இலிங்கபுராணதேவர் (44)

4. த்ரைலோக்ய மஹாதேவி:
    1. கல்யாணசுந்தரர் (எண். 48)

5. பஞ்சவன் மஹாதேவி:
    1. தஞ்சை அழகர் (எண். 51)
    2. தஞ்சையழகர் நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரியார் (எண். 51)
    3. கணபதி (எண். 51)
    4. பதஞ்சலிதேவர் (எண். 53)

6. ப்ருத்வி மஹாதேவி:
    1. ஸ்ரீ கண்டமூர்த்தி (எண். 80, 82)

7. இலாட மஹாதேவி:
    1. பாசுபதமூர்த்தி (எண். 95)

IV அரசியல் அலுவலர் எழுந்தருள்வித்தன:

1. பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனான தென்னவன் மூவேந்த வேளான் எழுந்தருள்வித்தன:
   1. *நம்பியாரூரர் (எண். 38)*
   2. *நங்கை பரவையார்*
   3. *திருநாவுக்கரையன்*
   4. *திருஞானசம்பந்தன்*
   5. *பெரிய பெருமாள்*
   6. *பெரிய பெருமாள் நம்பிராட்டியார் லோகமாதேவி*
   7. *பெரிய பெருமாளுக்குத் தேவார தேவராக எழுந்தருள்வித்த தேவர் சந்திரசேகர தேவர் (எண். 38)*
   8. *தத்தாநமரேகாண் என்ற மிலாடுடையார் (எண். 40)*
   9. *க்ஷேத்ரபாலதேவர் (எண். 43)*
   10. *ஆடுகின்றாராகக் கனமாக எழுந்தருள்வித்த பைரவமூர்த்திகள் (43)*
   11. *சிறுத்தொண்ட நம்பி (43)*
   12. *திருவெண்காட்டு நங்கை (43)*
   13. *சீராள தேவர் (எண். 43)*

2. சேனைத்தலைவன் க்ருஷ்ணன் இராமனான மும்முடிசோழப் பிரம்ம மாராயன் எழுந்தருள்வித்தன.
   1. *அர்த்த நாரீஸ்வரர் (39)*

3. பெருந்தனம் ஈராயிரவன் பல்லவயனான மும்முடி சோழ போசன்.
   1. *சண்டேசர் (எண். 55)*

4. சிறுதனத்துப் பெருந்தரம் கோவன் அண்ணாமலையான கேரளாந்தக விழுப்பரையன்.
   1. *பிருங்கீசர் (எண். 47)*
   2. *சூர்யதேவர் (எண். 56)*

5. அதிகாரிகள் காஞ்சிவாயிலுடையார் உதைய திவாகரன் தில்லையாளியாரான இராஜராஜ மூவேந்த வேளார்.
   1. *கிராதார்ஜுனதேவர் (எண். 9)*

6. இராஜராஜதேவர் பெருந்தனம் கத்தி அரையன் மகன் கண்டையனான இராஜராஜ கத்தியரையன்
   1. *காளபிடாரி (எண். 81)*

7. இடையன் நள்ளாறன்

    1. வில்லாளனக்குக் குருக்களாக எழுந்தருள்வித்த திருமேனி.

8. நித்த விநோத வளநாட்டு நல்லூர் நாட்டுப் பஞ்சவன் மஹாதேவிச் சதுர்வேதி மங்கலத்து வடுகன்

    1. துர்க்கா பரமேஸ்வரி (எண். 79)

9. பெருந்தரம் கிழான் வேளானாதித்தனான பிராந்தகப் பல்லவரையன்

    1. உமாஸகிதர்

    2. உமாபரமேஸ்வரியார்

    3. சுப்பிரமண்யதேவர்

    4. கணபதியார் (எண். 32)

**இராஜராஜனின் அறச்செயல்கள் :**

சிவபாத சேகரனை இராஜராஜ சோழன் தஞ்சைப் பெரிய கோயிலுக்குச் செய்த அறக்கொடைகளை இருபத்தைந்து கல்வெட்டுக்கள் மிக விரிவாகக் கூறு கின்றன. இவற்றை மிகச் சுருக்கமாகக் காண்போம்.

**பொன் வெள்ளி மொத்த எடை**

இராஜராஜன் தஞ்சைப் பெரியகோயிலில் தான் எழுந்தருள்வித்த திருமேனி களுக்கும் ஸ்ரீராஜராஜேஸ்வரத்தில் கோயில் கொண்டினிதெழுந்தருளியுள்ள பரமஸ்வா மிக்கும் பொன்னணிகளும் இரத்தினத் திருவாபரணங்களும் பலப்பல தந்துள்ளான். இவன் பொன்னாலாகிய பாத்திரங்களையும் வெள்ளியாலான பாத்திரங்களையும் அளித்துள்ளான்.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலுக்கு இராஜராஜ சோழன் கொடுத்துள்ள

பொற்கலங்களின் மொத்த எடை : 41559 கழஞ்சு

வெள்ளிக் கலங்கள் எடை : 50650 கழஞ்சு

அணிகலன்கள் எடை : 10200 கழஞ்சு

என்பது வரலாற்றுய்வாளர்கள் தந்துள்ள கணக்கீடாகும்.[1]

'கழஞ்சு' என்பது பழங்காலத்தில் பொன்னை நிறுக்கும் எடையளவில் ஒன்றாகும் ஒரு கழஞ்சு 20 மஞ்சாடி எடையுடையது; 40 குன்றிமணிஎடையுடையது. திரு சா. கணேசன் அவர்கள், "ஒரு கழஞ்சு என்பது சுமார் 1/16 அவுன்ஸ்; 5/12 தோலா; 1 1/3 வராகனெடைக்குச் சமமானது" என்று குறிப்பர்.[2]

---

1. தொல்பொருள் தொழில்நுட்பப் பணியாளர் கழக வெளியீடு—இராசராசன்— சிறப்பு மலர் - துணுக்குகள் 70. பக்கம் 31.

2. தஞ்சைக் கல்வெட்டுக்கள் — அருஞ்சொற்பொருள் - தமிழகத் தொல்லியல் துறை வெளியீடு—பக்கம் 6. கழஞ்சு:—¼ தோலா என்பது எலியட் கருத்து. The Rashtra Kutas and their times page 366–7 by Altekar.

கழஞ்சு வராக னெடையை விடச் சற்றுக் கூடுதலான எடை (32 குன்றி—1 வராகன்; 40 குன்றி—கழஞ்சு) யாகும். இது எத்தனை கிராமுக்குச் சமம் என்றும் காணவேண்டியுள்ளது. "16 கழஞ்சு ஒரு பலம்" என்பது பொன் முதலியன நிறுத்தல் அளவை வாய்பாடாகும்.[1] இவ்வளவை வாய்பாட்டின்படி நோக்கினால் 2.1875 கிராம் ஒரு கழஞ்சு என்று தெரியவரும். இவ்வடிப்படையில் இராஜராஜன் தஞ்சைப் பெரியகோயிலுக்களித்துள்ள பொருள்களின் மொத்த எடையைப் பின் வருமாறு காணலாம். (தோராய மதிப்பீடு–கிராம்–188 ரூபாய் வீதம்)

| | கழஞ்சு | அவுன்ஸ் | தோலா | வராகன் | கிராம் | தற்கால விலை மதிப்பு (ரூபாய்களில்) |
|---|---|---|---|---|---|---|
| பொற்கலம் | 41559 | 2597.43 | 17316.24 | 55412 | 90 கிலோ 910 கிராம் | 17091080 |
| வெள்ளி | 50650 | 3165.625 | 21104.16 | 67433,3 | 110 கிலோ 795 கிராம் | 3323880 |
| அணிகலன் | 10200 | 687.5 | 1699.9 | 13600 | 22 கிலோ 312 கிராம் | 4194656 |
| | | | | | கூடுதல் விலை ரூபாய் | 24609616 |

**ராஜராஜன் தந்தன — வேறொரு கருத்து:**

திரு. சா. கணேசன் அவர்கள் தந்துள்ள வாய்பாட்டின்படி 1 கழஞ்சு - 2.1875 கிராம் என்பது அறியப்பெறுகிறது. 'கழஞ்சு' முதலானவற்றைச் 'சரபேந்திர சித்த மருத்துவச் சுடர்' என்னும் நூல்[2]

| | | | |
|---|---|---|---|
| 1 | உளுந்து | — | 1 கிரெயின் (65 மில்லி கிராம்) |
| 4 | யவம் | — | 1 குன்றி (2 கிரெயின், 130 மி.கி.) |
| 1 | மஞ்சாடி | — | 4 கிரெயின் (260 மி.கி.) |
| 5 | குன்றி | — | 1 மாஷம் (780 மி.கி.) |
| 3¾ | குன்றி | — | 1 பண எடை (488 மி.கி.) |
| 40 | குன்றி | — | 1 கழஞ்சு (4.4 கிராம்) |
| 10 | வராகனெடை | — | 1 பலம் (35 கிராம்) |
| ¼ | பலம் | — | 1 கைசு அல் கைசா (8 கிராம் 750 மி.கி.) |
| 1 | தோலா | — | 1 ரூபாய் எடை (12 கி.) |

1. கையேடு (Hand Book) இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கு வெளியீடு, பக்கம் 31. [4—கழஞ்சு—1 கைசு; 4 கைசு—1 பலம்.]
2. சரபேந்திர சித்த மருத்துவச் சுடர் — தஞ்சை சரஸ்வதிமஹால் வெளியீடு—1973. பக்கம் 175.

| | | |
|---|---|---|
| 1 | அவுன்ஸ் | — 2½ ரூபாய் நிறை (30 கி.) |
| 3 | தோலா | — 1 பலம் (35 கிராம்) |

என்னும் ஒப்பியல் வாய்பாட்டில் விளக்குகின்றது.[1] இவ்வொப்பியல் வாய்பாட்டடிப் படையில் நோக்கினுல்

1 கழஞ்சு = 4.4 கிராம்

எடையினதாகும். இதன்படி முதல் ராஜராஜசோழன் தஞ்சைப் பெரிய கோயிலுக்கு,

| | கழஞ்சு | கிலோ கிராம் | விலை மதிப்பு 1 கிராம் 188 ரூ. வீதம் |
|---|---|---|---|
| பொற்கலம் | 41559 | 182859.6 | 34377604 |
| வெள்ளி | 50650 | 222160 | 668580 |
| அணிகலன் | 10200 | 44880 | 8437440 |
| | | ஆக ரூபாய்: | 43483624 |

அளித்தான் என்னும் கருத்து உருவாகிறது. இது திரு. சா. கணேசன் அவர்கள் கருத்தடிப்படையில் உருவான பட்டியலைவிட இரு மடங்கினதாகும்.

ஒரு கழஞ்சு எடை 2.2 கிராம் எனவும் 4.4 கிராம் எனவும் இருவகையான கருத்துக்கள்[2] ஆய்வாளரிடையே வழங்குவதனுல் இவை இரண்டும் கூறப்பட்டன வாயினும் கையேட்டில் கண்ட அடிப்படையிலேயே[3] இந்நூலின் பிற பகுதிகளில் எடை மதிப்புக் கிராம்களில் தரப்பெறும்.[4]

---

1. தமிழர் அளவைகள் — K. பகவதி. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்— பக்கம். 45-47.

2. கழஞ்சு, காசு பற்றிய கல்வெட்டுக் குறிப்புக்களுக்கும் இன்று கிடைப்பனவாயுள்ள இராஜராஜன் காலநாணயங்கட்கும் இவற்றின் எடை மதிப்புகட்கும் பொருத்தமில்லாமல் உள்ளது. 1 கழஞ்சு = 2 காசுகள் என்பது சாசனக் குறிப்பு தற்போது

    1. 60-70 கிரெயின் எடையுடையன
    2. சுமார் 7 கிரெயின் எடையுடையன
    3. 1.7 கிரெயின் எடையுடையன

    என்னும் மூவகைக் காசுகளே கிடைத்துள்ளன. 60-70 கிரெயின் எடையுடைய காசுகள் கழஞ்செடையினவுமல்ல; காசெடையினவுமல்ல. இவை கழஞ்சா? காசா? என்பது ஆய்வுக்குரியது. (The Coins—Dr. R. Nagaswami Page: 66.) எனவே எதிர்காலத்தில் 40 or 80 கிரெயின் எடையுள்ள காசுகள் கிடைத்தால் தான் கழஞ்சு இத்தனை கிராம் என உறுதி செய்யலாம்.

3. இதனையே வரலாற்றுய்வாளர் பின்பற்றியுள்ளனர். இராஜராஜன் சிறப்பு மலர் பக்கம் 16. 16 கழஞ்சு—1 பலம்.

4. சரபேந்திர மருத்துவச் சுடர் நூலின்படி இது இருமடங்காகும்.

பொன்னணிகள் தந்தமை:

மாமன்னன் இராஜராஜன் தந்த பொன்னணிகள், பொற்கலங்கள் அணிகலன்கள் பற்றிக் கூறும் கல்வெட்டுக்கள் யாவும் இந் நூலில் தரப்பெற்றுள்ளன. இவன் பொற்கலங்கள் தந்தமை பற்றிக் கூறும் முதல் கல்வெட்டில் இவன் பொன்னாலான 'க்ஷேத்ரபால தேவர்' விக்கிரஹத்தையும், 'கொள்கைத்தேவர்' என்னும் விக்கிரஹத்தையும் எழுந்தருள்வித்தமையும் ஸ்ரீ விமானத்து ஸ்தூபித்தறியில் வைக்கப் பொற்றகடுகள் பதிக்கப்பட்ட 107.905 கிலோ எடையுடைய ஒரு செப்புக் குடம் தந்தமையும் கூறப்பட்டுள்ளது.

இராஜராஜசோழன்

1. ஸ்ரீ பண்டாரத்து முன்னால் தந்த பொன்.

2. சேரமானையும் பாண்டியரையும் மலைநாட்டையும் வென்று கைப்பற்றிய பொன்.

3. சத்யாச்ரயனை வென்றபின் ஸ்ரீ பாதபுஷ்பமாக அளித்த பொன் முதலான பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களின் விவரங்கள் தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளன. இவன் ஸ்ரீ ராஜராஜேச்வரத்துக்குப் பொன்னாலானதும் பலவகை மணிகள் பதிக்கப்பட்டதுமான அணிகலன்களைத் தந்த விவரம் இந்நூலில் உள்ள 1, 8-10 எண்ணுள்ள கல்வெட்டுக்களில் விவரமாகக் கூறப்பட்டுள்ளது. இவன் பெரிய கோவில் 'பரிவாராலயத்துப் பிள்ளையார் கணபதி'யாருக்கு அணிகளைத் தந்தமை இந் நூலில் உள்ள 11-ஆம் எண்ணுள்ள கல்வெட்டில் கூறப்பெற்றுள்ளது. பொன்னணிகளும் கலங்களும் 'ஆடவல்லான்' என்னும் காசுக்கல்லாலும், மணிகள் பதிக்கப்பெற்ற அணிகள் 'தக்ஷிணமேருவிடங்கன்' என்னும் குடிஞைக்கல்லாலும் நிறையிடப்பெற்றன என்று இரண்டு வகையான எடைக் கற்களைக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுதல் அறியத்தக்கதாகும்.

வெள்ளித் திருப்பரிகலன்கள்:

இராஜராஜன் ஸ்ரீராஜராஜீச்வரம் உடைய பரமஸ்வாமிக்கு வெள்ளிப் பாத்திரங்கள் பலவற்றைத் தந்தமையை இந்நூலில் உள்ள 12-ஆம் எண்ணுள்ள சாசனம் விவரிக்கிறது. இவை

1. ஸ்ரீராஜராஜேச்வரத்தில் ராஜராஜனால் முதலில் தரப்பட்டவை.
2. சேரமானையும் பாண்டியனையும் மலைநாட்டை எறிந்தும் கொண்ட வெள்ளிப் பரிகலங்கள்.
3. இவர்களை வென்று கொண்ட வெள்ளியால் செய்யப்பட்டவை.

எனும் மூவகையின எனவும் அவை, 'சிவபாத சேகரன்' எனவும் 'ஸ்ரீராஜராஜன்' எனவும் பெயரிடப்பெற்றவை எனவும் கூறுகிறது இக் கல்வெட்டு. இக் கல்வெட்டில் இருந்து பொன்னை நிறுக்கப் பயன்படுத்தப்பட்ட 'ஆடவல்லான்' என்னும் காசுக்கல்லே வெள்ளியை நிறுக்கவும் பயன்படுத்தப்பட்டமை அறியப்பெறும். இச்சாசனம் இவன் வெள்ளியாலான மூன்று வாசுதேவர் திருமேனிகளைச் செய்தளித்தான் (இவை 6.691 கிலோ எடையுடையன) என்று கூறும். இந் நூலில் உள்ள முதல் சாசனத்தில் இவன் 26-ஆம் ஆண்டில் தான் எழுந்தருள்வித்த பொன்னாலான 'க்ஷேத்ரபால தேவர்', திருமேனிக்கு வெள்ளியாலான ஸ்ரீபாதபீடம் செய்தளித்தமை கூறப்பட்டுள்ளது. இதன் எடை தனியே கூறப்படவில்லை.

எழுந்தருள்வித்த செப்புத் திருமேனிகள் :

இராஜராஜ சோழன், சண்டேஸ்வர பிரஸாத தேவர், பஞ்சதேஹ மூர்த்திகள் சுப்பிரமணிய தேவர், தக்ஷிணாமூர்த்திகள், கணபதியார் திருமேனிகள், மஹா விஷ்ணுக்கள் திருமேனிகளை எழுந்தருள்வித்தமை மிக விரிவாக அவனுடைய சாசனங்களில் கூறப்பெற்றுள்ளது. இச்சாசனங்களனைத்தும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

இத்திருமேனிகளையன்றியும் இவன் தக்ஷிணமேருவிடங்கர், ஆடவல்லார், மஹாமேருவிடங்கர், மஹாமேருவிடங்கர் நம்பிராட்டியார், தஞ்சைவிடங்கர் முதலிய திருமேனிகளை எழுந்தருள்வித்தமை சம காலச் சாசனங்களில் கூறப்பெறுகிறது. எனினும் முன்னவைபோல அவற்றின் உயரம் முதலானவை பற்றிய விவரங்கள் அறியப்பெறவில்லை.

இராஜராஜன் சந்திரசேகரரையும் சந்திரசேகரதேவர் நம்பிராட்டியாரையும் தஞ்சைக்கோயிலில் எழுந்தருள்வித்தான் என்பது இராஜேந்திர சோழன் காலத் தஞ்சைக் கல்வெட்டொன்றில் கண்டது. இதனுள் இத்திருமேனி பற்றிய வேறு விவரங்கள் எவையும் கூறப்பெறவில்லை.

இச் செப்புத் திருமேனிகளை அன்றியும் பொன்னாலான இருதிருமேனிகளும் வெள்ளியாலான மூன்று திருமேனிகளையும் இராஜராஜன் எழுந்தருள்வித்துள்ளான்.

தந்த ஊர்களும் வருவாயும்

தஞ்சைப் பெருங்கோயில் வழிபாடு மற்றும் நித்ய நைமித்திக செலவுகட்குத் தேவையான நெல்லுக்காக இராஜராஜன் மிகப்பல ஊர்களைத் தஞ்சைப்பெருங் கோயிலுக்குத் தேவதானமாகத் தந்தான். அவற்றில் இருந்து வரி வருவாயாக வரும் நெல்லினை அவ்வவ்வூரினர் தஞ்சைப் பெருங்கோயில் பொக்கிஷத்தில் செலுத்தவும் ஏற்பாடு செய்தான். இதனால் இக்கோயிற்குச் சுமார் 120000 கலம் நெல்லுக்குமேல் வருவாய் வந்தது, என்பதனை இந்நூலில் உள்ள 13, 14, 15, ஆம் கல்வெட்டுக்களால் அறியலாம்.

தஞ்சைப் பெரிய கோயிற்கு இராஜராஜன் தேவதானமாகச் சிற்றூர்களை அளித்துள்ள முறை கூர்த்தறியற் பாலதொன்றாகும்.

சோழப் பேரரசிடம் இருந்த நிலவரிக் கழகத்தில் எல்லா நிலங்களைப் பற்றிய விவரமும், அதனால் அரசுக்குக் கிடைக்கும் வரிவருவாய் பற்றி அறிவிக்கும் புத்தகமும் இருந்தன. அரசன் ஏதாவதொரு கோயிலுக்கு நிலதானம் செய்ய விரும்பினாலோ அந்தணனுக்கு நிலதானம் செய்ய விரும்பினாலோ தன் பக்கத்தில் உள்ள 'திருவாய்க்கேள்வி' (அரசனின் உத்தரவுகளைக் கேட்டு அறிவிப்பவன்) என்பவன் மூலம் தன் உத்தரவைத் 'திருமந்திர ஓலை' என்பவனிடம் அனுப்புவான். இவன் அதை ஓலையில் எழுதுவான். இதன் பின் இவர்களுடைய தலைவனாக உள்ள 'திருமந்திர ஓலைநாயகம்' என்பவன் (மீண்டும் அரசனுடன் கலந்து) ஒப்புநோக்கிக் கையெழுத்திடுவான். ஒப்புநோக்கிய பின் அவ்வோலை (ஆக்ஞா பத்திரம்) நிலவரிக் கழகத்துக்குச் (புரவுவரித் திணைக்களம்) செல்லும். அங்குள்ள அலுவலர் இன்ன ஊரில் அரசுக்கு வரி செலுத்தும் நிலம் இன்ன அளவுள்ளது? வரியில்லா நிலங்கள் இவ்வளவு என்றெல்லாம் குறிக்கும் 'வரிப்பொத்தகத்தை' எடுப்பர். எந்த ஊர்,

தேவதானமாகத் தரப்பெறப்போகிறதோ அந்த ஊருக்குரிய பக்கத்தை எடுத்து அதில் "இன்ன அரசனின் இன்ன ஆண்டில் இவ்வூர் வரியில் இருந்து நீக்கப்பட்டது" என்று குறிப்பர். அதன்பின் அரசனுடைய உத்தரவு ஓலையை 'வரிப்புத்தகக் கணக்கு' என்னும் அலுவலனிடம் அனுப்புவர். அவன் தன்னிடம் இருப்பதும், ஆண்டுதோறும் ஊர்களில் இருந்து வரவேண்டிய வரிவருவாய் பற்றிய விவரங்களுடையதுமான புத்தகத்தில் உரிய இடத்தில் உத்தரவையும் உத்தரவிடப்பெற்ற நாளையும் குறிப்பான். அதன்பின் நிலவரிக் கழகத்தலைவனை 'புரவுவரித் திணைக்களநாயகம்' என்பவன் அவ்வோலையில் கையொப்பம் இடுவான். அதுமுதல் அரசனின் உத்தரவு ஓலை, 'ஸ்ரீமுகம்' எனப்படும். அவ்வுத்தரவு ஓலை குறிப்பிட்ட ஊர் அமையும் (தாலூகா) நாட்டுக்குரிய நிர்வாகச் சபைக்கு அனுப்புவிக்கப்பெறும். அவர்கள் அவ்வூர் எல்லையை யானையுடன் வலம் வந்து எல்லைக்கற்களை நடுவர். சிவன் கோயிலுக்கு வரி இல்லாமல் நிலம் தரப்பெற்றால் சூலம் பொறிக்கப்பட்ட கல்லும், பெருமாள் கோயிலுக்கானால் 'ஆழி' (சக்கரம்) பொறிக்கப்பட்ட கல்லும் எல்லைக்கற்களாக நடப்பெறும். நாட்டுச் சபையார் உத்தரவு நிறைவேற்றப்பட்டதை நிலவரிக் கழகத்துக்குத் தெரிவிப்பர். அவர்கள் மீண்டும் உரிய புத்தகங்களில் முன்பு குறித்த இடத்திலேயே மீண்டும் குறிப்பர். — இம் முறை இராஜராஜனின் பெரிய லெய்டன் செப்பேட்டிலும் ஆனை மங்கலம் செப்பேடு முதலானவற்றிலும் கூறப்பெற்றுள்ள முறை.

நிலதானம் பெற்றவர்க்கு, அதன் பின் அந் நிலத்தை உழுங்குடியுரிமையுடனும் குடியுரிமை இல்லாமலும் தானம் தரப்பெறுதல் உண்டு. முன்னது முழு உரிமையுடையது. பின்னது மேல்வார உரிமை மட்டும் உடையது. முன்னது குடிநீக்கிய தேவதானம் பின்னது குடிநீங்காத் தேவதானம் [என்று சிவன்கோயிற் களிக்கப்பட்டால் கூறப்பெறும்.] (எந்நிலையிலும்) தேவதான நிலங்கள் பெற்ற கோயிலார், அரசுக்கு வரிவருவாய் செலுத்த வேண்டாம். நிலத்தின் விளைபொருள் வருவாய் முழுமையையும் தாமே அனுபவிக்கலாம்.

இராஜராஜன் தஞ்சைப் பெரிய கோயிலுக்கு இம் முறையில் இருந்து முற்றிலும் மாறுபட்ட நிலையில் தேவதானமாகச் சிற்றூர்களை அளித்துள்ளான். பழங்காலத்தில் ஒவ்வொரு ஊரிலும் வரிவிலக்குப்பெற்ற நிலங்களும் வரியில்லாத நிலமான நத்தம், சுடுகாடு, கோயில் போன்றவையும் இருந்தன. ஒவ்வொரு ஊரில் உள்ள மொத்த நிலம் இவ்வளவு என்ற கணக்கும் அரசிடம் இருந்தது. இவையனைத்தும் மிகவும் துல்லியமாக அளக்கப்பட்டுக் குறிக்கப்பெற்றிருந்தன. வரி செலுத்தும் நிலங்கள் தரம் பிரிக்கப் பெற்றிருந்தன. ஒவ்வொரு ஊரில் இருந்தும் அரசுக்கு நெல்லாகவோ காசாகவோ செலுத்தும் மொத்த வரிவருவாய் எவ்வளவு என்றும் கணக்கு இருந்தது. ராஜராஜன் தஞ்சைப் பெரிய கோவிலுக்குத் தேவதானமாக அளிக்கக் கருதிய ஊர்ச் சபையினரை நேரில் அழைத்தான். ஆண்டொன்றுக்கு அவ்வூரில் இருந்து வரியாகச் செலுத்தப்பட வேண்டிய நெல் அல்லது காசு எவ்வளவு என்பதனை அவர்களோடு கலந்துகொண்டு முடிவு செய்தான். அவ்வாறு செலுத்த ஒப்புக்கொண்ட நெல்லை [பெரிய கோவிலுக்குரிய நாட்டு (தாலூகா) பண்டாரம் (கருவூலம்) தன்னில்] செலுத்த ஆணையிட்டான். இதனை,

"உடையார் ஸ்ரீராஜராஜ தேவர்......ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடைய பரமஸ்வாமிக்குவேண்டும் நிவந்தங்களுக்குத் தேவதானமாகச் சோழமண்டலத்தும் புறமண்டலங்களிலும் கொடுத்த ஊர்களில்...........................................இறையிலி நிலங்களும்—

இறைகட்டின நிலத்தால் காணிக்கடன் ராஜகேஸரியோடொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்காலால் அளக்கக் கடவ நெல்லும் இடக்கடவ பொன்னும் காசும் பேசிக் கல்லில் வெட்டியது."

என்னும் பகுதி காட்டுகிறது. இப்பகுதியால் 'இறைகட்டின நிலத்தால் வந்த காணிக் கடன்' தஞ்சைப் பெரியகோயிற் களிக்கப்பட்டமை அறியப் பெறும். இறைகட்டுதல் - வரிநிர்ணயித்தல். இறை கட்டின நிலம் - வரிநிர்ணயிக்கப்பட்ட விளைநிலம், காணிக் கடன் - நில உரிமையாளருக்குச் செலுத்த வேண்டிய கடமை. இதனால், "தஞ்சைக் கோயிலார் நிலத்தை உழுது பயிரிடும் உரிமை பெற்றிலர்; நிர்ணயிக்கப்பட்ட கடமை வருவாய்மட்டும் பெற்றனர்" என்பது புலனாகும்.

'இறைகட்டின நிலத்தால் காணிக்கடனாக வந்த நெல்' என்பதற்கு **"The revenue (Kanikkadan) in Paddy** [which has to be measured by the Marakkal called (after) Adavallan which is equal to a rajakesari]— and the gold and the money (kasu) which have to be paid **from the land paying taxes"** என்னும் தென்னிந்திய சாசனத் தொகுதி மொழி பெயர்ப்பும் இக்கருத்தையே தரும்.

ராஜராஜன் ஏனைய தேவதானங்களைப் போலக் குடிநீங்கு-நீங்காத் தேவதானங் களைப்போலல்லாமல் வரிவருவாய் இவ்வளவு என நிர்ணயித்து அவ்வருவாயை ஆண்டு தோறும் பெறத்தக்க நிலையில் தஞ்சைப் பெருங்கோயிற்கு எண்ணற்ற சிற்றூர்களை அளித்துள்ளான்.* இவ்வாறு தரப்பட்ட ஊர்கள் பல மண்டலங்களிலும் அமைந் திருந்தன என்பதனை அவன் காலச் சாசனங்கள்காட்டும்.

**திருப்பதியம் விண்ணப்பிக்க நிவந்தம்:**

திருமுறை கண்ட சோழனை முதல் ராஜராஜன் தஞ்சைப் பெருங்கோயிலில் 'திருப்பதியம் விண்ணப்பிக்க' நாற்பத்தெட்டுப் பிடாரர்களை நியமித்துள்ளதனை இந் நாலிலுள்ள 16-ஆம் கல்வெட்டால் அறியலாம். பதிகம்—பத்துப்பாடல். தேவாரத் தில் உள்ள பதிகங்களைத் திருப்பதியம் எனச் சாசனம் குறிக்கிறது. தேவார மோது தலைத் 'திருப்பதியம் விண்ணப்பித்தல்' எனக் கூறுகிறது. இக்காலத்துக்கு முன்னரே கோயில்களில் திருப்பதியம் விண்ணப்பிக்கப்பட்டமையைக் கல்வெட்டுக்கள் சில காட்டுகின்றன.[1] எனினும் மிக அதிக அளவில், பிடாரரை இராஜராஜன் நியமித்

* இராஜராஜன் மிகப்பல ஊர்களைத் தந்தும் இன்று தஞ்சைப் பெருங்கோயிற்கு நிலமிலாமைக்கு இதுவே காரணமாகும். இம்முறையில் வருவாய்தான் தஞ்சைக் கோயிலார் பெற்றனர். கோயிலுக்கும் நிலத்துக்கும், குடியாண்மை யுடையவருக்கும் நேரடித்தொடர்பு மிகக்குறைவாக இருக்கிறது. சோழர்காலத்திலேயே தஞ்சைக் கோயிலுக்கு இறைகட்டின காணிக்கடன் செலுத்த வேண்டும் என நிர்ணயித்த ஊர்களுட் சில கங்கை கொண்ட சோழபுரத்துக்கு வருவாய் செலுத்தத்தக்கதாக மாற்றியமைத்து இராசேந்திர சோழன் உத்தரவிட்டமையை வீர ராஜேந்திரன் காலத் திய சாசனம் காட்டுகிறது. இறைகட்டின காணிக்கடனை நெல்லளிக்கச் சோழப் பெருமன்னன் இட்ட ஆணை அப்பேரரசு வலிமை குன்றியபின் தானே வலு விழந்ததிலும் அப்பெருங் கோயில் வருவாய் இழந்ததிலும் வியப்பொன்றும் இல்லை எனலாம்.

1. 129 of 1914; 139 of 1925; 99 of 1929; 349 of 1918 S.I.I. III No. 129 and 151 A. and S.I.I. VIII No. 687.

துள்ளமையும் அவர்கள் பல திருத்தலத்தினராக இருத்தலும் இவன் காலம் முதலாகத் தேவாரங்கள் பெருஞ் செல்வாக்குப் பெறத் துவங்கியமையை உணர்த்தும். இப்பிடார ருட் சிலர் 'செம்பொற்சோதி' 'சீருடைக்கழல்' முதலான தேவார திருவாசகத் தொடர் களைத் தம் பெயராகச் சூடிக்கொண்டுள்ளமை மக்கள் இத்தெய்வத் தமிழ் நூல்களில் கொண்டிருந்த பேரீடுபாட்டினைக் காட்டும். இராஜராஜன் திருப்பதியம் விண்ணப் பிப்பவரோடு உடுக்கை வாசிக்கவும் கொட்டிமத்தளம் வாசிக்கவும் ஏற்பாடு செய்துள்ளான்.

**தளிச்சேரிப் பெண்டிர்கள்:**

தளி—கோயில். சேரி—சேர்ந்துவாழும் இடம். கோயிற்கருகில் உள்ள குடியிருப் பில் வாழ்ந்தவரும் திருக்கோயிற் பணிகளில் ஈடுபட்டவருமான பெண்கள் தளிச்சேரிப் பெண்டிராவர். தஞ்சைக் கல்வெட்டு இவர்கள் கோயிலில் ஆற்றவேண்டிய பணி என்ன எனக் குறிப்பிடவில்லை. பிற்காலச் சாசனங்களைக் கூர்ந்து நோக்கின் திருக் கோயிலில் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், தளிகை விளக்குதல், அமுதுபடிக்கு அரிசிகழுவுதல் முதலான பணிகளைத் 'தேவரடியார்கள்' எனப்பெறும் பெண்டிர் ஆற்றி வந்தனர் என்பது பெறப் பெறும். ஒரு பாண்டிய சாசனம்[1] திருவொற்றியூர்க் கோயிலில்

1. தேவரடியார்.
2. பதியிலார்.
3. இஷபத்தளியிலார்

என்னும் மூவகையான மகளிர் பணியாற்றியமையைக் காட்டுகிறது. இந்தச் சாசனம்.

"1. தேவரடியார் வெண்சாமரம் வீசுதல் முதலான இறைப் பணிகளைப் புரிந்து வந்தவர்.

2. பதியிலார் பகல்ஓலக்கத்து வெண்சாமரம் வீசுதல் முதலான பணி சிலபுரிந்தவர். சொக்கம் முதலான நாட்டியம் வல்லவர். இஷபத்தளியிலார் ஆடும் போது பாடியவர்.

3. இஷபத்தளியிலார் பாடுதல் ஆடுதல் பணிகள் மட்டுமே புரிந்தவர்"

என்று குறிப்பாகக் காட்டுகிறது. தஞ்சைத் தளிச் சேரிப் பெண்டிர் பெருங்கோயிலில் 'நாட்டியம்' பயின்றவராதல் வேண்டும்.[2] இஷபத்தளியிலார் போல இவர் பணி புரிந்தவர் எனலாம்,

முதல் ராஜராஜ சோழன் சோழமண்டலத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்து 400 தளிச் சேரிப் பெண்டிரைக் கொணர்ந்து தஞ்சைத் தளிச்சேரியில் குடி ஏற்று வித்தான். இவர்களுடைய ஊதியம் ஆண்டொன்றுக்கு நூறுகலம் நெல் எனக் கூறும் இச் சாசனம் இவர்கள் கடமை இன்னதென வெளிப்படையாகக் கூறவில்லை. எனினும் இவர்களுடைய பெயர்கள், இவர்கள் 'தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாட' வல்லவராதலைக் காட்டும். 1. நக்கன் தேசி. 2. நக்கன் பெரியதேச்சி (தேசி – ஒருவகைக் கூத்து) 3. நக்கன் சீகண்டி. 4. நக்கன் கூத்தாடி. 5. நக்கன் ஆட

1. 212 of 1912 No. 525 of South Indian Temple Ins. Vol. I page 511-13.
2. மின்னெடும் புருவத் திளமயிலனையார்
 விலங்கல் செய் நாடக சாலை
 இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
 இராஜராசேச் சுரத் திவர்க்கே
 —தஞ்சைத் திருவிசைப்பா—8.

வல்லாள். 6. நக்கன் நித்தசுந்தரி என்பன முதலான பெயர்கள் மட்டுமன்றி இவரோடு நட்டுவக்காரர் போன்றவர்களை இவ்வேந்தன் நியமித்துள்ளமையும் இவ்வுண்மையை உணர்த்தும்.

## இசைவளர் தஞ்சை

'ஏழிசையாய் இசைப் பயனாய்' விளங்கும் இறைவன் திருமுன்பு தளிச்சேரிப் பெண்டிர் நிருத்தம் பயின்றதோடன்றி 'நாளும் இன்னிசை பயிலவும்' இவன் ஏற்பாடு செய்துள்ளான். இப் பெண்டிர் நாட்டியம் புரியும்போது 'கானபாடி' கள் இசைக் கானம் பாடினர்; தோல் துளைக்கருவிகள் முழங்கின; வீணை வாசிக்கப் பெற்றது. சமஸ்கிருதப் பாடல்கள் ஆரியம் பாடுவோரால் பாடப்பட்டன; அருந்தமிழ்ப் பாடல் களைத் 'தமிழ் பாடுவோர்' பாடினர். காந்தர்வரும் (வாய்ப்பாட்டு) பக்கவாத்யர் முதலோரும் இசைப்பணியாற்றினர். இவர்களையெல்லாம் 'சாலூர் பரஞ்சோதி' என்பவன் மேற்பார்வை செய்து அவ்வவர் பணி தலைப் படுமாறு செய்தான்.[1]

## திருக்கோயிற் பணியாளர்கள்

திருக்கோயில் நித்ய நைமித்திகத் தேவைகளை ஈடுசெய்வதற்காக இராஜராஜன் பல்வேறு அலுவலர்களை நியமித்துள்ளான். அவர்கட்கு ஆண்டுதியமும் வரையறுத் துள்ளான். திருப்பள்ளித்தொங்கல் பிடிக்கவும் விளக்கேந்தவும் நீர் தெளிக்கவும் கோலப் பொடி முதலான பொடிகள் தயாரிக்கவும் (சன்னலியாள்) திருமடைப்பள்ளிக் குப் பானைகள் செய்யவும் வண்ணம் தீட்டவும் (வண்ணத்தார்) காவிக் கல்வேலை (காவிதிமை) செய்யவும் நாவிதம் செய்யவும் கிரகநிலை கணிக்கவும் (திரு) ரத்னவேலை (ரத்னத் தய்யான்) செய்யவும் இரும்பு (கன்னான்) மரவேலை செய்யவும் (தச்சாசார்யம்) கண்காணித் தட்டாண்மை செய்யவும், ஏவிய பணிகளை (கோலினமை) செய்ய (ஏவலர்)வும் சோழமன்னன் நியமித்துள்ளமை தளிச்சேரிப்பெண்டிர் நிவந்தக் கல்வெட்டில் இவன் அமர்த்தியுள்ள நிவந்தக்காரர் பற்றிக் கூறும் பகுதியால் புலனாகிறது.

## பரிசாரகர் : பண்டாரி : கணக்கர்

தஞ்சைப் பெரிய கோவிலுக்குப் பணிபுரிவதற்காக மாணிகளைப் பரிசாரகராகவும் பிராமணரைப் பண்டாரியாகவும் கரணத்தாரைக் கணக்கராகவும் சோழ மண்டலத் தில் பிராமண இறையிலிச் (பிரமதேயச்) சிற்றூரினர் இடவேண்டும் என்றும் அவர்களுடைய தகுதிகள் இவையிவை எனவும் இராஜராஜன் உத்தரவிட்டு இவ் அலுவலரைப் பணியமர்த்தியுள்ளமை கல்வெட்டொன்றால் அறியப்படுகிறது. 4 பண்டாரிகளும் 116 பரிசாரகரும், 6 கணக்கரும், 12 கீழ்க் கணக்கரும் இப் பணியில் அமர்த்தப் பட்டனர்.

## மெய்க்காப்பாளர் :

திருக்கோயில் பாதுகாவல் பணிபுரிந்தவர் மெய்க்காப்பாளர் ஆவார். ராஜேந்திரன் கல்வெட்டொன்று 'கேரளாந்தகன்வாயில் திருமெய்க் காப்பாளர்' எனவும் 'இராசராசன் வாயில் திருமெய்க்காப்பாளர்' எனவும் கூறுதல் கொண்டு இவ்வலுவலர் கோயிலில் ஆங்காங்கிருந்து திருக்கோயிலைப் பாதுகாத்து வந்த அலுவலராதல் பெறப்பெறும். ராஜராஜன், சிலகுறிப்பிட்ட பிரம்மதேயச் சபை யினர் திருமெய்க்காப்பாளர்களைத் தஞ்சைப் பெரியகோயிலுக்கு அனுப்பவேண்டும்

---

1. சோனகன் சாலூர் பரஞ்சோதி எனப்பெறும் இவன் திருவிளக்குக்கொடைகள் பல தந்துள்ளான். இந்நூல். க. எண். 24. காண்க.

அனுப்பிய சபையினரே ஒருவருக்கு ஓராண்டுக்கு நூறுகல நெல் தரவேண்டும் எனவும் உத்தரவிட்டுள்ளான். இவன் சுமார் 118 திருமெய்க்காப்பாளர்களைப் பணியில் அமர்த்தினான்.

## திருவிளக்குக் கொடைகள்

முதல் ராஜராஜன் தஞ்சைப் பெரியகோயிலில் திருவிளக்கு எரிப்பிக்கப் பல ஆயிரக்கணக்கான ஆடு, பசு, எருமைகளைத் தந்துள்ளான். இவை பன்னூறு இடையரிடம் 'ஒருவிளக்குக்கு நாள்தோறும் ஒரு உழக்கு நெய் அளக்கவேண்டும்' என்று நிர்ணயிக்கப்பட்டு

| | | |
|---|---|---|
| ஆடானால் | 96 | ஆகவும் |
| பசுவானால் | 48 | ,, |
| எருமையானால் | 16 | ,, |

ஒப்படைக்கப் பட்டன. நான்கு கல்வெட்டுக்கள் திருவிளக்குக் கொடைகளைக் கூறுகின்றன. ராஜராஜன் தந்த கொடைகளைப் பற்றிக் கூறும் பகுதியிலேயே ஆங்காங்கே இவன் மனைவியரும் அரசியல் அலுவலரும் பிறரும் திருவிளக்குக் காகத் தந்துள்ள கொடை பற்றிய விவரங்களும் கூறப்படுகின்றன. ஆடு பசு எருமை விலைமதிப்பு இக்கல்வெட்டால் புலனாகிறது. இடையர் பற்றிக் கூறும் பகுதி அக்காலத் தஞ்சையில் இருந்த தெருக்களைக் குறிக்கின்றது. இச் சாசனங்களினால் தஞ்சைப் பெரிய கோயிற்குச் சுமார்

4000 ஆடுகளும்
4000 பசுக்களும்
100 எருமைகளும் திருவிளக் கெரிப்பிப்பதற்காகத்

தரப்பட்டிருந்தமை தெரிய வருகிறது.

## சிவபாத சேகரன்

இராஜராஜ சோழன் மிகப் பல சிறப்புப் பெயர்கள் உடையவன். அவற்றுட் சிவபாதசேகரன் என்பதும் ஒன்று. 'சிவனடிகளைத் தன் தலையிற் சூடியவன்' என்பது பொருள். இவன் இப்பெயரில் கொண்டிருந்த ஈடுபாட்டினை,

"சிவபாத சேகரன் என்றும் ஸ்ரீ ராஜராஜன் என்றும் திருநாமம் வாங்கி.........உடைய பொன்னின் காளங்கள்"

"சிவபாதசேகரன் என்றும்............வெள்ளிப் பரிகலங்கள்" பலவற்றை இவன் தஞ்சைப் பெருவுடையாராலயத்துக்குத் தந்துள்ளமையால் அறியலாம். இவன் திருமுறைகளிலும் தேவாரத்திலும் கொண்டிருந்த ஈடுபாட்டினைத் 'திருப்பதியம் விண்ணப்பிக்க' ஏற்பாடு செய்தமை காட்டும். இவன் அறுபான்மும்மை நாயன்மார்களின் வரலாற்றில் ஆய்வும் தோய்வு முடையவனாக இருந்தவனாதலைச் சண்டீசருக்கு இவன் எழுந்தருள்வித்த செப்புப் பிரதிமத்தை விளக்கும் கல்வெட்டினை நுட்பமாக நோக்கின் உணரலாம். திருத்தொண்டத்தொகை புராணத்துள் தொடக்கத்தும் இறுதியிலும் அமைந்த சுந்தரர் வரலாற்றின் பகுதிகளைத் தஞ்சைப் பெரியகோயில் அந்தராளத் திருச்சுற்றில் ஓவியமாக இவன் வடித்துள்ளமை இவன் சிவனடியார்பால் கொண்டிருந்த பற்றினைப் பகரும். இதுவன்றியும் தஞ்சைக் கோயில் தராசு (ஆடவல்லான் என்னும் துலாக் கோலால் No. 85) கும் மரக்

காலுக்கும் காசுக் கல்லுக்கும் கூட 'ஆடவல்லான்' திருநாமத்தை இட்டு மகிழ்ந்திருக்கிறான் இவ்வரசன். 'சிவபாத சேகரனைச்—சிவனை முழுவதும் மறவாத சிந்தையனை வாழ்ந்த இவனுக்குச் செப்புப் பிரதிமம் வடித்த பொய்கை நாடு கிழவன் இராஜராஜனை (பெரிய பெருமானை)யும் அவன் தேவியான லோக மஹா தேவியாரையும் எழுந்தருள்வித்ததோடு அவரருகிலேயே தேவார தேவராக (வழிபடு கடவுளாக) சந்திரசேகரரையும் எழுந்தருள்வித்துள்ளமை இராஜராஜ தேவனின் சிவபக்தித் திறத்தினைத் தெற்றெனப் புலப்படுத்துவதாகும்.

### தஞ்சைப் பெருங்கோயில் ஓவியங்கள்

தஞ்சைப் பெருங்கோயிலில் கருவறைக்கும் பிரகாரத்துக்கும் இடையில் ஒரு அந்தராளத் திருச்சுற்று உள்ளது. இரண்டுபுறமும் இரு மதில்கள் அமைய இடையில் இத்திருச்சுற்று உள்ளது. இத்திருச்சுற்று மதில்களில் இராஜராஜன், வண்ண ஓவியங்கள் பலவற்றைத் தீட்டியுள்ளான். இவ்வோவியங்கள் அவ்வரசனுக்கும் கருவூர்த் தேவருக்கும் இருந்த நட்பினையும், அவ்வரசனுக்குத் தில்லைக்கூத்தன்மாட்டிருந்த பேரன்பினையும், அறுபான்மும்மை நாயன்மாருள் சமயகுரவராய சுந்தரர் மீதிருந்த பேரீடுபாட்டையும் காட்டுவனவாகும்.

இவ்வோவியங்களை ஐந்து தொகுதிகளாகப் பிரிக்கலாம்.

கிழக்குப்புறச் சுவரில் அமைந்துள்ள வண்ண ஓவியம் ஒன்றில் 'இராஜராஜனும் கருவூர்த்தேவரும்' வடிக்கப்பட்டுள்ளனர்.

இதே பகுதியில், 'இராஜராஜன் தன் மூன்று மனைவியருடன் தில்லைக் கூத்தப்பெருமானை வணங்கும் காட்சி' ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. 'தன்குல நாயகனை' தில்லை நடராசரின் தாண்டவக்கோலத்தை மிக அழகாகஓவியமாக்குவித்துள்ளான் இவ்வரசன்.

தெற்குப்பார்த்த நிலையில், 'திரிபுராந்தகர்' ஓவியம் வடிக்கப்பட்டுள்ளது.

வடக்குப்புறச் சுவரில் 'ஆலமர்செல்வனை' 'தக்ஷிணாமூர்த்தி'ப் பெருமானுக்கு அழகியதோர் வண்ண ஓவியம் அமைக்கப்பட்டுள்ளது.

கிழக்குப்புறச் சுவரில் மற்றும் ஒரு தொகுதி ஓவியமுள்ளது. இது சுந்தரர் வரலாற்றின் முதலும்முடிவுமாய் இரு நிகழ்ச்சிகட்கு அமைக்கப்பெற்றுள்ள ஓவியமாகும். இராஜராஜன் சுந்தரர் வரலாற்றில் ஈடுபட்டமையை உணர்த்தும் சான்றாக அமையும் இவ் ஓவியத்தைப்பற்றி விரிவாகக் காண்போம்.

**தடுத்தாட் கொள்ளல்:** முதல் ஓவியம் சுந்தரர் தடுத்தாட் கொள்ளப்பெற்ற காட்சி.

கிழவேதியர் கோலத்தில் சிவபெருமான் அமர்ந்த நிலை; ஒரு கையில் ஆவண வோலை; மறு கையை உயர்த்திச் சபையவரை நோக்கி வழக்குரைத்தல். எதிரில் சுந்தரர் நிற்கிறார்.

அடுத்துக் கிழவேதியர், கையிலே ஆவண ஓலையுடன் எழுந்து நிற்க, 'அந்த ஓலையுள் உள்ளதென்ன' என்பதனை அறியும் பேராவலுடன் அருகில் நிற்கிறார் சுந்தரர். நெஞ்சத்து உணர்வுகளைப் பிரதிபலிக்கும் முகம் உடையவராகச் சான்றோர் காணப்படுகின்றனர்.

வழக்கில் வென்றபின் அனைவரும் கோயிலுள் நுழைவதாக ஓவியத் தொடரின் இறுதிப்பகுதி அமைகிறது.

இவ்வோவியத்தின் கீழ்ப்புறம் மகளிர் சிலர் உணவு சமைப்பவராகக் காணப் பெறுகின்றது. அது சுந்தரரின் திருமண ஏற்பாட்டினைக் காட்டுவது ஆகலாம்.

**ஓலையில் எழுத்து :** ஓவியத்தில் காணும் ஆவண ஓலையில், "இப்படி நானறிவேன்" என்னும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன என்று ஆய்வாளர் அறிதிறக்கண்டு கூறுவர்.[1] இப்பகுதி ஓலையின் முடிவுப் பகுதியாதல் வேண்டும்.

**"இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்னெழுத்து"** என ஓலையமைந்ததாகச் சேக்கிழார் கூறுவர்.

**கயிலை செல்லுதல் :** தடுத்தாட்கொண்ட காட்சி ஓவியத்தின் மேல் 'சுந்தரரும் சேரமான் பெருமாளும் கயிலை செல்லும் காட்சி' ஓவியமாக உள்ளது. நடுநாயகமாக வெள்ளானையின் மீது சுந்தரர் செல்கிறார்; வலப்புறம் சேரமான் பெருமாள் வெண் குதிரையின்மீது ஏறி முகில் மண்டலத்தில் பறக்கிறார். சேரமான் பெருமாள் குடுமியும் மீசையும் தாடியும் உடையவராகவும், நெருக்கமான கழுத்தணியும் ஓர் உருத்திராக்க மாலையும் உடையவராகவும், அரையில் மட்டுமே ஆடை உடையவராகவும் காட்சி தருகிறார். வெண்புரவியின் சேணம், கடிவாளம் முதலியன மிக அழகாகச் சித்தரிக்கப் பட்டுள்ளன. ஓவியத்தின் வலப்புறம் காந்தருவர் இசைக் கருவிகளால் இன்னிசை ஒலிக்கத் தேவமாதர் நாட்டியமாடுகின்றனர். இடப்புறம் பல முனிவர் உள்ளனர்.

இவ் வோவியத்துக்கு மேலே உள்ளது 'கயிலைக் காட்சி'. சிவபெருமான் புலித் தோலின் மேல் யோகாசன நிலையில் அமர்ந்திருக்கிறார்; நந்தி இவர்க்கு முன்னுள்ளது; பல முனிவர்கள், தேவ மகளிர் உருவங்கள் எதிரே உள்ளன. சிவபெருமான் உருவம் செந்நிறத்திலும் முனிவர் உருவங்கள் நீல நிறத்திலும் உள்ளன.

இப் பகுதியில் சொக்கத் தாண்டவங்களுட் சில கல்லில் சிற்பமாக வடிக்கப் பட்டுள்ளன. சிவபெருமான் நாற்கரங்களுடன் நடம்பயில் நிலையில் இவை அமைக்கப் பட்டுள்ளன. 108 கரணங்களுக்கும் சிற்பம் வடிக்கும் முயற்சி யாது காரணத்தாலோ முற்றுப்பெறவில்லை.

**அக்கன் அளித்தன**

இராஜராஜனின் திருத்தமக்கையார் 'பராந்தகன் குந்தவை யாராவார்'. இவர் இராஜராஜனால் அன்பு தோன்ற '**அக்கன்**' எனத் தஞ்சைக் கல்வெட்டொன்றில் குறிப் பிடப்பெற்றுள்ளாள். இவள் சாளுக்கிய அரசகுலத்தவனான 'வல்லவரையன் வந்தியத் தேவன்' என்பவருடைய தேவியாவாள். இவளைச் சாசனங்கள். 'வல்லவரையன் வந்திய தேவர் தேவியார் ஆழ்வார் பராந்தகன் குந்தவையார்' எனக் குறிக்கும். இவளைப் 'பெரிய குந்தவையார்' என்பர் ஆய்வாளர்.

தஞ்சைக் கல்வெட்டுக்களால் இவள் இக்கோயிலில் திருமேனிகள் எழுந்தருள் வித்தமையும் அவற்றுக்கு அணிகலன்கள் தந்தமையும் இரண்டு திருமேனிகட்கு

---

1. கல்வெட்டியல்—தமிழக அரசு தொல்லியல் துறை வெளியீடு—பக்கம். 44

அமுதுபடி முதலானவற்றுக்காக நிவந்தங்கள் அளித்தமையும் அறியப்பெறும், இவற்றுள் ஒரு கல்வெட்டு மட்டும் இராசேந்திரன் காலத்ததாகும்.

இவள் எழுந்தருள்வித்த திருமேனிகளுள் ஒன்று 'பொன்மாளிகைத் துஞ்சிய தேவராக' எழுந்தருள்வித்த திருமேனி. இது தன் தந்தையான இரண்டாம் பராந்தகனை சுந்தர சோழனுக்கு இவளால் எழுந்தருள்விக்கப் பட்ட தாகும். [இவன் பொன் மாளிகையில் இறந்தமை காரணமாகப் பொன் மாளிகைத்துஞ்சிய தேவர் எனப் படுவான்] மற்றொன்று குந்தவையார் தம்மையாக எழுந்தருள்வித்த திருமேனி யாகும். தன் தாய்க்கு எழுந்தருள்விக்கப்பட்டது என்று சாசன ஆங்கில மொழி பெயர்ப்புக் கூறும். எனினும் 'தம்மையாக' என்பதற்குத் தனக்குத் தானே என்று பொருள் கொண்டு தனக்குத் தானே எழுந்தருள்வித்த திருமேனி எனக் கருதுதல் பொருந்துவதாகும்.[1]

இவள் இராஜராஜனின் 29-ஆமாண்டில் சில திருமேனிகட்கு வழிபாட்டுத் தேவைகட்கு நிவந்தங்கள் அளித்தாள்.

I. தஞ்சைவிடங்கர் நம்பிராட்டியார் உமாபரமேச்வரியாரும் தக்ஷிண மேரு விடங்கர் நம்பிராட்டியார் உமாபரமேச்வரியாரும் 'திருவிழா எழுந்தருளும் போது திரு அமிர்துக்கும் திருப்பள்ளித்தாமத்துக்கும் திருவிளக்கெண்ணெக்கும் தேவையான வற்றுக்காக[1] முதற்பொருள் அளித்தாள். இதனுள் (1) 200 காசுகளை, 'நித்தவினோத வளநாட்டு முடிச்சோழ நாட்டு ப்ரும்ஹதேயம் ஜனநாதச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார்' இராஜராஜனின் 28-ஆமாண்டு முதல் 'ஆண்டொன்றுக்குக் காசு ஒன்றுக்கு மூன்று குறுணி நெல் வட்டி தருவதாகக் கொண்டு 50 கல நெல் அளந்தனர். (2) இதேவள நாட்டில் இருந்த 'ஆவூர்க் கூற்றத்துப் பிரும்ஹதேயமான இரும்புதலாகிய மனுகுல சூளாமணிச் சதுர்வேதிமங்கலத்துச் சபையார்' ஷை முறையில் 100 காசு கொண்டு 25 கல நெல் அளித்தனர். (3) 'கேரளாந்தக வளநாட்டு உறையூர்க் கூற்றத்துப் பிரும்ஹதேயம் ராஜாச்ரய சதுர்வேதிமங்கலத்துச் சபையார்' 500 காசு கொண்டு 125 கலம் நெல் அளந்தனர். (4) 'நித்த வினோத வளநாட்டுக் கிழார்க் கூற்றத்துப் பெருமிலட்டூர் ஊரார்' காசு 200—இனல் 50 கல நெல் அளந்தனர். இம் 325 கல நெல்லால் ஷதேவைகள் நிறைவேற்றப்பட்டன.

II. இவள் தான் எழுந்தருள்வித்த 'பொன் மாளிகைத் துஞ்சினதேவர்' திருமேனிக்கு இருவேளை திருவமுது படையலுக்காக 520 காசுகள் முதற் பொருளாகத் தந்தாள். இதனை, 'வடகரை ராஜேந்ரசிங்க வளநாட்டுப் பொய்கைநாட்டுக் கண்டராதித்ய சதுர்வேதி மங்கலத்துச் சபையார்' 29-ஆமாண்டு முதல் வட்டிக்குக் கொண்டு 130 கலம் நெல் செலுத்தினர். திருப்பரிசட்டம், திருப்பள்ளித்தாமம் முதலானவற்றுக்கு ஆகும் 51 காசு ஆண்டுத் தேவைக்காக இவள் வைத்த முதற் பொருளில்.

(1) ராஜேந்ரசிங்க வளநாட்டுத் தனியூர் வீரநாராயணச் சதுர்வேதிமங்கலத்துச் சபையார் 196 காசுகள் கொண்டு காசு ஒன்றுக்கு மாதமொன்றுக்கு அரைக்கால் அக்கம்

1. என்னால் எழுதப்பட்ட கல்வெட்டுத் தேன்துளிகள் என்னும் நூலில் நடுகல் வழிபாடு என்ற கட்டுரையில் பக்கம் 118 காண்க.

பொலிசை என்ற விகிதத்தில் ஆண்டொன்றுக்கு 24½ காசுகள் செலுத்தினர். (2) ஷை வளநாட்டுக் கிழார்க் கூற்றத்துப் பிரம்மதேயம் சூலமங்கலத்துச் சபையார் 100 காசு கொண்டு ஷை பொலிசை விகிதத்தினுல் ஆண்டொன்றுக்கு 12½ காசு செலுத்தினர். (3) ஷை வளநாட்டுத் தனியூர் ஸ்ரீபராந்தகச் சதுர்வேதிமங்கலத்துச் சபையார் 112 காசு கொண்டு 14 காசு செலுத்தினர். இவ்வாறு வந்த வட்டியால் நிவந்தம் நிகழ்த்தப் பட்டது.

**III.** தம்மையாக எழுந்தருள்வித்த திருமேனிக்கு, இருவேளை திருவமுதுக்கு ஆண்டொன்றுக்கு நெல் 130 கலம் நெல் தேவைக்காக இவள் முதற்பொருள் வைத்தாள் ஆண்டொன்றுக்கு 130 கலம் நெல் செலுத்துவதாக 'நித்த வினோதவள நாட்டுக் கரம்பை நாட்டுக் குந்தவை நல்லூர்' ஊரவர் இம்முதல் 520 காசுகள் கொண்டனர். 'திருப்பரிசட்டம் திருப்பள்ளித்தாமத் தேவைகட்காக' ஆண்டொன்றுக்கு 61 காசுகள், வட்டியாக வரும் வகையில் 488 காசுகளை முதலாக்கினள். ராஜேந்திரசிங்கவள நாட்டுத் தனியூர் ஸ்ரீ பராந்தக சதுர்வேதிமங்கலத்துச் சபையார் இம்முதல் கொண்டு ஷை வட்டி செலுத்தினர்.

ஷை இரு திருமேனிகட்குச் சந்திவிளக்கு ஒன்றுவீதம் ஒன்றுக்கு 32 காசுகள்வீதம் ஒப்படைத்தாள்.

ஸ்ரீ பராந்தகன் குந்தவையார் இக்கோயிற்களித்த ஆபரணங்கள் சில (எண். 2, 6, 7, 8) சாசனங்களுட் கூறப்பெறும். இவள் தக்ஷிண மேருவிடங்கர் நம்பிராட்டியாரும், தஞ்சை விடங்கர் நம்பிராட்டியாரும் திருவிழாக் காலங்களில் அமர்த்துவிக்கப் பெறும் (ஏறியருளும் திருவரங்கு) மேடையை அலங்கரிக்கத் தண்டவாணிக்குக் கால்மாற்றுக்கண்ணிய பொன் 3500 கழஞ்சும் ஒருமாற்றுக் குறைந்த பொன் 1500 கழஞ்சுமாக 5000 கழஞ்சு (10.937 கிலோ) பொன் தந்துள்ளமை குறிப்பிடத்தக்கதொரு தானச்செயலாகும். இவள் அளித்த பொற்கொடைகள் பின் வருமாறு :—

| | | | பொன் | | | | முத்து | பவழம் | ராஜவர்த்தம் | வயிரம் | மாணிக்கம் | (எடை விலை) | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | க | ம | கு | மா | 1 | 2 | 3 | 4 | 5 | கழ | ம | கு | மா | காசு |
| 1. | திருவரங்கணிய | — | 5000 | — | — | — | | | | | | | | | | |
| 2. | குந். திருமேனி தாலி | 1 | 4 | 6 | 1 | — | | | | | | | | | | |
| 3. | ஏகாவல்லி (த. மே. விடங்கர்) | 1 | | | | | 35 | 2 | 2 | | | 4 | 8 | | 4 | 11 |
| 4. | ஏகாவல்லி (,, நம்பிராட்டி) | 1 | | | | | 35 | 2 | 2 | | | 4 | 9 | 1 | — | 12 |
| 5. | திருமகுடம் ,, | 1 | 348½ | — | — | 3 | 669 | — | — | 859 | 380 | 407 | 9 | — | — | 5000 |
| 6. | வாளி ,, | 1 | 1 | 8 | — | 8 | 9 | | | | | 2 | 9 | — | 7 | 15 |
| 7. | உழுத்து ,, | 1 | 2 | — | 1 | — | 2 | — | — | 6 | 2 | 2 | 1 | — | 7 | 15 |
| 8. | ,, | 1 | 2 | — | 1 | — | 2 | | | 6 | | 2½ | 1 | | | |

| | | | க | ம | கு | மா | 1 | 2 | 3 | 4 | 5 | க | ம | கு | மா | விலை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 9. | திருமாலை | 1 | 86½ | 4 | | ½ | 94 | | | 505 | 110 | 103½ | 1 | | | 1000 |
| 10. | ஸ்ரீபாகுவலயம் | 1 | 89 | 1 | | 1/16 | 68 | | | 449 | 54 | 104½ | 4 | | | 1200 |
| 11. | ,, | 1 | 89 | 8 | | 4½ | 62 | | | 448 | 53 | 104½ | 3 | | 7 | 1250 |
| 12. | ஸ்ரீ சந்தம் | 1 | 69¾ | 2 | | 5/16 | 1462 | | | 390 | 80 | 174¼ | | | | 1050 |
| 13. | திருக்கைப் பொட்டு | 1 | 18¾ | 3 | | 8 | 137 | | | | 1 | 26¾ | 4 | | 8 | 80 |
| 14. | ,, | 1 | 18 | 6 | | | 143 | | | | 1 | 26½ | 3 | | 3 | 80 |
| 15. | சூடகம் | 1 | 80 | 4 | | 6½ | | | | 620 | 55 | 85¾ | I | | 1 | 800 |
| 16. | சூடகம் | 1 | 84¾ | 3 | | | | | | 675 | 60 | 90¾ | 1 | | | 800 |
| 17. | திருப்பட்டிகை | 1 | 97½ | 4 | — | 9 | 212 | | | 667 | 83 | 129 | | | 7 | 4500 |
| 18. | திருவடிக்காறை | 1 | 73 | 3 | | 6½ | | | | 455 | 39 | 78¾ | 1 | | 8 | 500 |
| 19. | திருவடிக்காறை | 1 | 71½ | 2 | | | | | | 459 | 39 | 77 | 4 | | 1 | 500 |
| 20. | ஸ்ரீ பாகுவலயம் | 1 | 37¾ | 3 | | 4 | 42 | | | 360 | 72 | 43¾ | 3 | | 1 | 350 |
| 21. | ஸ்ரீ பாகுவலயம் | 1 | 37 | 2 | | 4 | 42 | | | 360 | 72 | 43¾ | 1 | | | 350 |
| 22. | தஞ்.வி.நம்பிராட்டி திருமகுடம் | 1 | 197½ | — | — | — | | | | | | | | | | |
| 23. | தூக்கம் | 1 | 27¾ | | | | | | | | | | | | | |
| 24. | வாளி | 1 | 2½ | 3 | | | | | | | | | | | | |
| 25. | இரட்டைஉழுத்து | 1 | 3½ | | | | | | | | | | | | | |
| 26. | திருக்கம்பி | 1 | 5½ | — | 1 | — | | | | | | | | | | |
| 27. | தாலிமணிவடம் | 1 | 2¾ | — | 1 | — | | | | | | | | | | |
| 28. | வயிரஸாயலம் | 1 | 27½ | | | | | | | | | | | | | |
| 29. | கண்டத்துடர் | 1 | 21 | | | | | | | | | | | | | |
| 30. | புறத்துடர் | 1 | 10¾ | 4 | | | | | | | | | | | | |
| 31. | திருக்கைப்பொட்டு | 1 | 59 | 7 | 1 | | | | | | | | | | | |
| 32. | திருக்கைவடம் | 1 | 39 | 7 | | | | | | | | | | | | |
| 33. | திருக்கைக்காறை | 1 | 64¾ | | | | | | | | | | | | | |
| 34. | திருவடிக்காறை | 1 | 74¾ | | | | | | | | | | | | | |
| 35. | ஸ்ரீபாதஸாயலம் | 1 | 67 | 9 | | | | | | | | | | | | |
| 36. | திருவடிக்கால் மோதிரம் | 10 | 11¼ | | | | | | | | | | | | | |
| 37. | திருமகுடம் | 1 | 207 | 8 | | 2 | 401 | | | 520 | | 229¾ | 2 | | 7½ | 700 |
| 38. | மாலை | 1 | 46 | 8 | | 2/8 | | | | 288 | | | | | | — |
| | | 46 | 7282 | 9 | 1 | 6⅜ | 3415 | 4 | 4 | 7067 | 1019 | 1747¼ | 1 | | 3½ | 17473 |

இதனால் இவள் 7282 கழஞ்சு பொன் (சுமார் 15.929 Kg விலை 2867220 ரூ) தந்தமையும் 3413 முத்து, 4 பவழம், 4 ராஜவர்த்தம், 7067 வயிரம், 1001 மாணிக்கங்களுடன் கூடிய நகைகள் தந்தமையும் இவற்றின் விலை மதிப்பு 17473 காசு (8736-5 கழஞ்சு பொன் விலை மதிப்பு) என்பதும் பெறப்படும். (தற்கால விலை மதிப்பு சுமார் 1719954.7 ரூபாய்களாகும்.[1])

முதல் இராஜராஜசோழனுடைய அரசமாதேவியர் தஞ்சைப் பெரிய கோவிலுக்களித்துள்ள தான விவரங்களை முறையே காண்போம்.

**ஒலோக மஹாதேவியார்.**

இவர் முதல் ராஜராஜ சோழனின் பட்டத்தரசியாக விளங்கியவர். இவளுக்குத் 'தந்திசக்தி விடங்கியார்' என்னும் வேறொரு பெயருமுண்டு. இவள் இவ்வரசனின் வாழ்நாள் முழுமையும் பட்டத்தரசியாக இருந்து அவன் சிவனடி சேர்ந்த பின்னரும் சில வருடங்கள் வாழ்ந்திருத்தல் வேண்டுமென்பது ஒரு கல்வெட்டால்[2] பெறப்படுகிறது. இவள் தன் கணவனைப் போலவே சிவபத்தியிற் சிறந்தவளாயிலங்கி அளித்த அருங்கொடைகள் அளவில்லாதன. இவற்றுள் இவள் தஞ்சையில் ஆற்றிய அறப்பணிகளைக் முதலில் காண்போம்.

**பிச்சதேவரை எழுந்தருள்வித்தமை:**

லோகமாதேவியார் தஞ்சைப் பெரியகோயிலில் பிச்சதேவர் திருமேனியை எழுந்தருள்வித்தாள். இத்திருமேனி,

'திருவடி நிலையில் எழுந்தருளிப் பலிக்கு எழுந்தருளுகின்றாராகக் கனமாக எழுந்தருள்வித்த பிச்சதேவர்''

எனப்பெறுகிறது. ஒன்றேமுக்கால்முழம் இருவிரலரை உயரமும் ஸ்ரீ ஹஸ்தம் நான்கும், ஒருதோரை உயரமுடைய திருவடி நிலையும் உடையது. இப் பிச்சதேவர் அருகில் பலி பாத்ரம் ஒன்றினைச் சுமந்துகொண்டு பூத மொன்று எழுந்தருள்விக்கப் பெற்றிருந்தது. இது 15½ விரல் உயரமும் இது சுமந்து கொண்டிருந்த பாத்ரம் 10 விரல் அகலமுடையது. இவர்க்கு உப பீடமும் ப்ரபையும் செய்விக்கப்பட்டன.

லோஹமாதேவியார் தான் எழுந்தருள்வித்த பிச்சதேவர்க்குப் பொன்னலும் மணிகளாலுமான பல ஆபரணங்களைத் தந்தாள். அப்பட்டியல் பின்வருமாறு:—

| | கழ | மஞ் | குன் | மா | ஒரு | காசு |
|---|---|---|---|---|---|---|
| 1. ஸப்தஸரி முத்து 332, பவழம் 14, பளிங்கு 8, பொத்தி 8, தாளிம்பம் 2 | 36¾ | 3 | 1 | — | 1 | 100 |
| 2. திரிசரம்: முத்து 99, பவழம் 6, ராஜவர்த்தம் 6, பொத்தி 2, பளிங்கு 4, தாளிம்பம் 2 | 9¾ | | 1 | | 1 | 25¼ |

1. கழஞ்சு என்பது 2.1875 Gram. காசு இதில் பாதி எடையினது. (1.09375) ஒரு கிராம் பொன் ரூ. 180 என்றால் ஒரு காசு 196.87 பைசாவாகும். இதன்படி இந் நகைகள் தற்கால மதிப்புக்கு 8736.5×196.87=1719954-7 ரூபாய்களாகும்.
2. S. I. I. Vol. V No. 505.

| | | க | ம | கு | மா | உரு | காசு |
|---|---|---|---|---|---|---|---|
| 3. | பொற்பூ | 1¼ | — | — | — | 1 | |
| 4. | திருக்குதம்பை | 2 | 8 | — | — | 1 | |
| 5. | தோடு | 2¾ | 4 | 1 | — | 1 | — |
| 6. | திரள்மணிவடம் (4—4—1) | 12½ | 2 | | | 3 | — |
| 7. | திருக்கைக்காறை (9¾ க. 2 ம. 1 கு.) | 19¾ | — | — | | 2 | — |
| 8. | திருக்கைக்காறை | 24 | | | | 2 | — |
| 9. | திருப்பட்டிகை சதலிகைசங்கணை | 39¾ | | | | 1 | — |
| 10. | திருவடிக்காறை | 11¾ | 2 | 1 | — | 1 | |
| 11. | ,, | 12 | — | — | — | 1 | — |
| 12. | குறுமடல் | 20¼ | 2 | 1 | = | 1 | |
| | பொன் மொத்த எடை | 193½ | 3 | 1 | | 16 | 125¼ |
| 13. | கபாலம் 1, வெள்ளி | 34 | 7 | 1 | | 1 | — |

இதனுள் கூறப்பெற்றுள்ள பொன் சுமார் 423 கிராம் எடையுடையது. வெள்ளிக் கபாலம் 74 கிராம் எடையுடையது என்பது புலனாகும். (விலை மதிப்பு ரூபாய் 76363)

லோக மாதேவியாரால் எழுந்தருள்விக்கப் பெற்ற இத் திருமேனிக்கு வேண்டும் நிவந்தத் தேவைகளுக்காக 'இராஜராஜ தேவர் திருவாய்மொழிந்தருளி' யபடி முதற் பொருள் வைக்கப் பெற்றிருந்ததனை இராசேந்திரன் காலத்துக் குரிய தொரு தஞ்சைக் கல்வெட்டுக் காட்டுகிறது.[1]

ஷை பிச்சதேவர்க்குத் திருவமுதுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு 743 காசு தந்தார்கள். இக்காசு பொலிசைக்கு விடப்பட்டது. காசு ஒன்றுக்கு முக்குறுணி நெல் வீதம் அளக்கப்பெற்ற நெல் 185 கலனே இருதூணிக்குறுணி. ராஜேந்திர சிங்கவள நாட்டு வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்தவர் இங்ஙனம் தர ஏற்றுக்கொண்டனர்.

சிவபாத சேகரனின் மஹாதேவியான லோகமகாதேவியார் ஆற்றிய தெய்வப் பணிகள் இங்குச் சார்பு நோக்கி அறிய வேண்டிய செய்திகளாம்.

**1. உலோகமாதேவீச்சரம்**

இத்திருக்கோயில் உலோகமாதேவியாரால் எடுப்பிக்கப் பெற்றது; ஆதலின் 'உலோகமாதேவீச்சரம்' எனப்பெற்றது. இது திருவையாற்றில் ஐயாறப்பரது திருக் கோயில் வடக்குப் பிராகாரத்தில் உள்ளது. இக்கோயில் இவ்வம்மையாரால் எடுப் பிக்கப்பெற்றது என்பது பின்வரும் கல்வெட்டுப்பகுதியால் அறியப்பெறும்.[2]

"உடையார் ஸ்ரீராஜராஜதேவர் நம்பிராட்டியார் தந்தி சக்தி விடங்கியாரான ஸ்ரீஒலோக மாதேவியார் வடகரை இராசேந்திரசிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருவையாற்றுப்பால் நாம் எடுப்பித்த திருக்கற்றளி ஒலோகமாதே வீச் வரம்."

இத்திருக்கோயில் இந்நாளில் "உத்தரகைலாயம்" என வழங்குகிறது.

1. S. I. I. Vol. II எண். 9
2. S. I. I. V. No. 52

இத்திருக்கோயில் வழிபாட்டிற்கு நிபந்தங்களும், இங்கு எழுந்தருளுவித்த திருமேனிகளும், தரப்பெற்ற திருவாபரணங்களும், திருப்பரிகலங்களும் இத்திருக் கோவிலிலுள்ள கல்லெழுத்துக்களினின்றறியப் பெறுகின்றன.

**திருவாபரணங்கள்**

ஒலோகமாதேவீச்வரமுடைய மகாதேவர்க்கும், ஒலோகவிடங்கதேவர் உள்ளிட்ட திருமேனிகளுக்கும் செய்வித்த 'பொற்கொள்கை' முதலான திருவாபரணங்களும் திருப் பரிகலங்களும் ராஜராஜ சோழனது 24-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றில் விவரிக்கப்பெற்றுள்ளன.[1]

பொன்னாற் செய்யப் பெற்றனவும் மணியும் முத்தும் மிடைந்தனவும் ஆன ஆபர ணங்கள் ஒலோகவிடங்கத்தேவருக்கு 18-ம், நம் பிராட்டியார்க்கு 19-ம், பிள்ளையார் சுப்பிரமணிய தேவருக்கு ஆறும் தரப்பெற்றன.

பொன் மாலைகளில் மூன்றொன்றாக அடுக்கியனவும், ஐந்தொன்றாக அடுக்கியன வும், சுவாமிக்கும் அம்மைக்கும் தரப்பெற்றன. சுவாமிக்கு 'முகத்தில் கட்டிய நாயக மாணிக்கம்' ஒன்று அரைக்கழஞ்சே நாலு மஞ்சாடி எடையுடையது. பொற்கொள்கை குடிஞைக்கல்லால் பொன் நிறை 827 கழஞ்சு. ஒலோக விடங்கத்தேவருக்குச் சாத்தி யருளும் முடி 105½ கழஞ்சு. நம்பிராட்டியார் முடி 48 கழஞ்சு. சுப்பிரமணிய தேவருக்குத் தரப்பெற்றவற்றுள் சூலமும் உண்டு.

**திருப்பரிகலங்கள்**

பொன்னால் மடலும், வட்டிலும், சாமரைக்கைகளும், ஈச் சோப்பிக்கைகளும் வெள்ளியில் தளிகை, மண்டை, கலசம், சட்டுவம் முதலியனவும், செம்பில் தளிகை காளம், கலசம், முதலியனவும், ஈழச்சியல் விளக்கும் மலையாளச்சியல் விளக்குகளும் சோழியச் சியல் விளக்குகளும், வெண்கலத்தில் தட்டு, சட்டுவம், எரிமணி, தூபமணி முதலியனவும் அளிக்கப்பெற்றன.

செம்பின்மேல் பொன் கடுக்கின 'பாவைக் கண்டி' யில் ஆடுகிற பாவை ஒன்று உடுக்கை வாசிக்கிற பாவை ஒன்று, பாடுகிற பாவை ஒன்று, பீடம் ஒன்று உட்படக் கண்ணாடி ஒன்றும் அமைத்துத் தரப்பெற்றது.

இங்ஙனம் பல உலோகங்களிலும் தரப்பெற்ற பொருள்கள் 100-க்கு மேற் பட்டனவாம்.

இவற்றையெல்லாம் 'கல்லில் வெட்டுக' என்று உத்தரவிடப் பெற்றவர் உடன் கூட்டத்ததிகாரம் செய்கின்ற கோவலூருடையான் காடன் நூற்றெண்மனும், 'அதிகாரிச்சி'[2] எருதன் குஞ்சரமல்லியும் ஆவர்.

லோகமாதேவியார் திருவையாற்றில் (பஞ்சநதீச்வரர் கோயிலில் உள்ளே) எடுப்பித்த 'உலோகமஹாதேவீச்வரம்' என்னும் திருக்கற்றளிக்கு இராஜராஜனின் 24-ஆம் ஆண்டில் அளித்த பொன்னாபரணங்கள், பொற்கலங்கள், வெள்ளிக்கலங்களைப் பின்வரும் பட்டியலால் அறியலாம்.

---

1. S. I. I. V. No. 521
2. இராஜராஜன் காலத்தில் பெண்களும் அதிகாரிகளாக இருந்தமையைக் காட்டும் சான்றிது.

| | | | பொன் எடை | | | | முத்து | மாணிக்கம் | வயிரம் | நீலம் | தருப்பு | பொத்தி | சப்ரயோகம் | தகடு பொன் க | தகடு வெள் க |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | க | ம | கு | மா | | | | | | | | | |
| 1. | கொள்கைத்தேவர் | 1 | 3273 | | | | | | | | | | | | |
| 2. | பட்டம் | 3 | 89¼ | | | | | | | | | | | | |
| 3. | ஒலோகவிடங்கர் முடி | 1 | 105½ | — | — | — | 573 | 21 | 102 | 1 | 64 | 79 | 240 | — | 3— |
| 4. | தாமரைப் பொற்பூ | 1 | 10 | | | | | | | | | | | | |
| 5. | குதம்பை | 1 | 2 | | | | 27 | 1 | | | 23 | | 17 | | |
| 6. | ,, | 1 | 2 | | | | 27 | 1 | | | 23 | | 17 | | |
| 7. | தாழ்கூட்டுக் கம்பி | 1 | 3½ | 4 | — | 2 | | | | | | | | | |
| 8. | மாலை | 1 | 28¼ | — | — | — | 70 | | | | 461 | 27 | 57 | — | 1¾ — |
| 9. | தனிவடம் | 1 | 1½ | 4 | -- | 2 | 150 | | | | | | | | |
| 10. | பஞ்சசரி | 1 | 3¼ | 4 | | | 214 | | | | | | | | |
| 11. | ஸ்ரீசந்தம் | 1 | 2 | 6 | — | 6 | 1278 | 1 | — | — | | | 27 | | |
| 12. | முத்துவளை | 1 | 10⅝ | | | | 188 | | | | | | | | |
| 13. | ,, | 1 | 8½ | | | 3 | 119 | | | | | | | | |
| 14. | ,, | 1 | 10 | 3 | — | 6 | 181 | | | | | | | | |
| 15. | ,, | 1 | 10 | 1 | | 2 | 196 | | | | | | | | |
| 16. | முத்துப்பட்டிகை | 1 | 2½ | 4 | | | 1335 | | | | | 19 | 31 | | |
| 17. | காற்காறை | 1 | 19¾ | 3 | | 6 | | | | | | | | | |
| 18. | நம்பிராட்டி முடி | 1 | 48 | 9 | — | — | 799 | 1 | | | 249 | 14 | 86 | | ½ |
| 19. | குதம்பை | 1 | 1 | 1 | | 5 | 21 | 1 | | | 9 | 4 | 9 | | |
| 20. | ,, | 1 | 1 | 1 | | 5 | 21 | 1 | | | 9 | 4 | 9 | | |
| 21. | கம்பி | 1 | 2¾ | 2 | | | | | | | | | | | |
| 22. | நிலத்திற்றுழுத்து | 1 | 1½ | | | | | | | 2 | 10 | | 5 | | |
| 23. | ,, | 1 | 1½ | — | 1 | | 2 | | | | 3 | 3 | 7 | | |
| 24. | திரு | 1 | 2¾ | 3 | | 6 | | | | | | | | | |
| 25. | மாலை | 1 | 18¼ | | | | 57 | | | | 80 | 22 | 68 | | |
| 26. | தனிவடம் | 1 | 1½ | | | | 117 | | | | | | | | |
| 27. | பஞ்சசரி | 1 | 3½ | | | 5 | 188 | | | | | | | | |
| 28. | ஸ்ரீசந்தம் | 1 | 1½ | | | | 752 | 1 | | | 14 | 4 | 4 | | |
| 29. | முத்துவளை | 1 | 9⅝ | | | | 207 | | | | | | | | |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 30. | ,, | 1 | $3\frac{1}{4}$ | | | | 226 | | | | | | |
| 31. | முத்தின் பட்டிகை | 1 | $1\frac{3}{4}$ | 1 | | | 1267 | | | 11 | 18 | | |
| 32. | காற்காறை | 1 | 7 | | | | 91 | | | | | | |
| 33. | சுப்ரமண்யர் முடி | 1 | $3\frac{5}{8}$ | — | — | | | | | | | | |
| 34. | சுட்டி | 1 | | 9 | — | 3 | | | | | | | |
| 35. | சூலம் | 1 | $\frac{1}{2}$ | | | | | | | | | | |
| 36. | இடுக்குவளையில் | 2 | 3 | | | | | | | | | | |
| 37. | பொற்பூ | 51 | 50 | | | | | | | | | | |
| 38. | ,, | 100 | $49\frac{1}{2}$ | 4 | — | 2 | | | | | | | |
| 39. | பொற்பூ | 1 | 1 | 2 | | | | | | | | | |
| 40. | ,, | 1 | $\frac{1}{4}$ | | | | | | | | | | |
| 41. | ,, | 18 | 18 | 1 | | | | | | | | | |
| | **பரிகலங்கள்** | | | | | | | | | | | | |
| 1. | தளிகை | 1 | $448\frac{1}{2}$ | | | | | | | | | | |
| 2. | ஒட்டுவட்டில் | 1 | 200 | | | | | | | | | | |
| 3. | பொன்னின் மடல் | 1 | 50 | | | | | | | | | | |
| 4. | மாநவட்டில் | 1 | $14\frac{9}{8}$ | | | | | | | | | | |
| 5. | சாமரைக்கை | 2 | 60 | | | | | | | | | | |
| 6. | ஈச்சொப்பிகை | 2 | 60 | | | | | | | | | | |
| 7. | பள்ளித்தொங்கல் மகுடம் | 4 | $119\frac{1}{4}$ | | | | | | | | | | |
| | ஆகக் கூடுதல் | | 4772 | 3 | 1 | 13 | 8106 | 28 | 102 | 3 | 945 | 187 | 595 |

ஷை பாத்திரம், பொன்னகைகள் இக்கால எடையில் 10432 கிராம் (தற்கால விலைக்குச் சுமார் 18777936 ரூபாய்) எடையுடையனவாகும். இவள் இக் கோயிற்குப் பலவகை யுலோகங்களாலான பாத்திரங்களை அளித்துள்ளாள். அவற்றில் வெள்ளியாலான பாத்திரங்களின் எடை 1532 கிராம் ஆகும். பிற தாரா, செம்பு முதலிய உலோகங்களால் ஆனவையாகும்.

## 2. திருவலஞ்சுழியில் க்ஷேத்திரபாலதேவர் திருக்கோயில்

க்ஷேத்திரபாலர் என்பவர் பைரவர் ஆவர். திருவலஞ்சுழியில் இப்பைரவர் கோயிலை எடுப்பித்தவர் ஒலோகமா தேவியார்.

"இராசராச தேவர் மகாதேவி தந்தி சக்தி விடங்கியாரான ஸ்ரீ ஒலோகமா தேவியார் உய்யக்கொண்டார் வளநாட்டுப் பாம்பூர் நாட்டுத் திருக்குட மூக்கின் பால்

திருவலஞ்சுழியில் நாம் எடுப்பித்த திருக்கற்றளி பிள்ளையார் க்ஷேத்திரபால தேவர்க்கு''

என்னும் கல்வெட்டுப் பகுதியால் (VIII—234) இதனை அறியலாம். இந்த க்ஷேத்திரபால தேவர் திருக்கோயில் திருவலஞ்சுழி திருக்கோயில் வெளிப்பிரகாரத்தில் இராச கோபுரத்திலிருந்து இரண்டாம் கோபுரத்துக்குச் செல்லும் வழியில் தெற்குப் பக்கத்தில் உள்ள தோப்பில் இடிந்த நிலையில் உள்ளது. கல்வெட்டுக்களுடன் சிறு கோயிலாக விளங்குகிறது. 1000 யாண்டுகளுக்கு முன் பொன்னும் மணியும் பூட்டிப் பொலிவுடன் விளங்கிய மூர்த்தி இன்று கேட்பாரற்றுத் தன்னந்தனியாக இயற்கையோடு இயைந்து வாழ்கிறார். இப்பைரவ மூர்த்திக்கு 16 திருக்கைகளுண்டு. மூர்த்தி சிறிது பழுதுபட்டிருப்பினும் இன்னும் காண்பார் கண்ணையும் கருத்தையும் ஈர்க்க வல்லவராய் உள்ளார்!

## 3. திருவிசலூரில் இரணியகருப்பம்



இராஜராஜன் I திருவிசலூர்த் திருக்கோயிலில் துலாபாரமும் தந்திசக்தி விடங்கியார் இரணியகர்ப்பமும் புகுந்ததாக ஒரு கல்வெட்டறிவிக்கிறது.[1] இக்கோயில் மூலத்தானத்து முன்மண்டபத்து இடதுபுறச் சுவரில் அரசன் அரசியர் உருவங்கள் சிவலிங்கத்தை வணங்குவது போன்று செதுக்கப்பெற்றுள்ளன. இவ்வுருவங்களின் கீழ் மேற்குறித்த கல்வெட்டிருந்தது.[2] திருக்கோயிலை 1932-ல் புதுப்பிக்குங்கால் எடுக்கப்பெற்ற இச்சிற்பங்களின் புகைப்படம் இத்திருக்கோயில் அலுவலகத்திலுள்ளது.[3] இந்நாளில் அக் கல்லெழுத்தில்லை. அரசன் அரசி உருவம்மட்டுமே செப்பனிடப்பெற்று உள்ளன. இத் திருக்கோயிலில் ஒலோகமா தேவியார் இரணியகர்ப்பம் புகுந்ததற்குரிய பொன்னின் ஒரு பகுதியைக்கொண்டு திருவலஞ்சுழியில் க்ஷேத்திரபால தேவர்க்கு இரண்டு பொன்மலர்கள் செய்து அளிக்கப்பெற்ற செய்தியைத்திருவலஞ்சுழியிலுள்ள முதல் இராஜராஜசோழனின் 29-ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கூறுகிறது.[4]

'திருவிசலூர் மகாதேவர் கோயிலில் நம்பிராட்டியார் ஒலோகமாதேவியார் ஹிரண்யகர்ப்பம் புக்கருளின பொன்னில்........க்ஷேத்திரபால தேவர்க்குச் சாத்தியருளக் கொடுத்த பொற்பூ இரண்டில், பொற்பூ ஒன்றினால் குடிஞைக்கல்லால் நிறைபொன் இருகழஞ்சேமுக்காலே மஞ்சாடியும் ஆறுமா பொற்பூ ஒன்றினால் மேற்படி கல்லால்...

இப் பொன்னின் பெரும்பகுதியைக்கொண்டு திருப்பட்டீச்சரம் திருக்கோயில் திருப்பணி செய்யப்பெற்றதென்று செவிவழிச் செய்தி இருப்பதாகத் திருவிசலூர்த் திருக்கோயில் காரியகர்த்தா ஒருவர் கூறினார்.

## 4. தஞ்சைப் பெரியகோயிலில் படிமம்

பொய்கைநாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் என்பவர் இராஜராஜன் I காலத்தில் தஞ்சைப் பெரிய கோயிலில் ஸ்ரீ காரியம் ஆராய்பவராக இருந்தார். இவர் சிவனடியார்களிடத்திலும், அரசனிடத்தும் அன்பு

1. 42 of 1907.
2. K. A. N. Cholas Part I Page 536 footnote.
3. List of Photo negatives of the Madras Presidency Page 26, No. 417.
4. S.I.I. VIII 237; 633c of 1902.

பூண்டொழுகியவர். இவர் தஞ்சைப் பெரிய கோயிலில் முதல் ராஜராஜன் படிவத்தையும் அவரது முதல் பெருந்தேவியாகிய ஒலோமாதேவியாரின் படிவத்தையும் இராஜராஜசோழனது 29-ஆம் ஆட்சியாண்டில் எழுந்தருளுவித்தார். ஒலோகமாதேவியார் பிரதிமம் இருபத்திரண்டு விரலே இரண்டு தோரை உயரத்து இரண்டு திருக்கையுடையராகக் கனமாக எழுந்தருளுவிக்கப்பெற்றது; இவர் எழுந்தருளிநின்ற பத்மம் ஐவிரல் உயரமுடையது. இதனோடு கூடச்செய்த பீடம் ஒன்பதிற்றுவிரல் சமசதுரத்து ஐவிரலே இரண்டு தோரை உயரமுடையது. இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன:—

திருக்குதம்பை ஒன்று பொன் ஏழு மஞ்சாடியும் குன்றியாக இரண்டிறுல் பொன் முக்கால் கழஞ்சு; திருக்கைக்காறை ஒன்று பொன் கழஞ்சே இரண்டு மஞ்சாடியும் மூன்றுமா; திருக்கைக்காறை ஒன்று பொன் கழஞ்சே எட்டுமா.

## 2. சோழமகாதேவியார் கொடுத்தன

இராஜராஜனின் தேவியருள் ஒருத்தியாகிய சோழமாதேவியார் தஞ்சைப் பெருங்கோயிலில் திருமேனிகள் எழுந்தருள்வித்தல் அணிகலன்கள் அளித்தல் முதலிய அறச்செயல்களை ஆற்றியுள்ளாள்.[1]

### a. ஆடவல்லான்

இவள் நடராசப்பெருமானுக்கும் உமாபரமேஸ்வரியாருக்கும் திருமேனி எடுப்பித்தாள்.

இவற்றுள் 'ஆடவல்லான்' திருமேனி கீழ்க்கிடந்த முயலகனோடும் கூடப்பாதாதிகோசாந்தம் ' முக்காலே அரைக்கால்முழ ' உயரம் உடையது. நான்கு திருக்கரங்கள் உடையது. இதன் சடைமேல் கங்காபட்டாரகியும் ஜடை ஒன்பதும் பூமாலை ஏழும் உடையதாக அமைக்கப்பட்டிருந்தது. கனமாக எழுந்தருள்விக்கப்பெற்ற இவர் ரத்னநியாசம் செய்த பத்மமொன்றின்மேல் எழுந்தருளியிருந்தார். இவரை மும்முழமே இருவிரல்சுற்றில் கனமாகச் செய்த பிரபை ஒன்று கவித்திருந்தது.

இவர் நம்பிராட்டியார் திருமேனி 'பதினேழுவிரல் இரண்டு தோரை' உயரம் உடையது. பத்மமும் பீடமும் உடையது. நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரியாரைக் கவித்த 'ப்ரபை' இருமுழம் பதினலரை விரல் சுற்றளவுஉடையது.

தான் எழுந்தருள்வித்த இத்திருமேனிகளுள் ஆடவல்லார்க்கு இவள் 'திரள்மணி வடம்' ஒன்று தந்தாள். இது பொன்னாலாகியது. எடை ஆறரைக் கழஞ்சு ஒரு மஞ்சாடி. நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரியார்க்கு இவள் பின் வரும் அணிகளைத் தந்தாள். 1. பொன் நாண் : இது ஒன்றரைக் கழஞ்சு இரண்டு மஞ்சாடியும் குன்றி எடையுடையது. பொன்னுலானது. மணிகள் பதிக்கப்பட்டது. நாலு காசு விலை மதிப்புடையது. 2. திரிசரம் : 87 முத்துக்களும் 6 பவழங்களும் கோக்கப்பட்டதான இதன் நிறை மூன்றே முக்கால் கழஞ்சு நான்கு மஞ்சாடி ஏழுமா வாகும். விலைமதிப்பு எட்டுக்காசுகள். 3. தாலி மணி வடம் : ஒன்று பொன்னுலாகியது. ஒன்றே முக்கால் கழஞ்சு இரண்டு மஞ்சாடி எடையுடையது. இவற்றின் மொத்த எடை $13\frac{1}{2}$ கழஞ்சு 9 மஞ்சாடி 1 குன்றி 7 மா. இன்றைய அளவில் சுமார் 30 கிராம் எடையுடையதாகும்.

1. S.I.I. Vol. II 42 and 46.

## b. ரிஷபவாஹனதேவர்

இவள் எழுந்தருள்வித்த செப்புத் திருமேனிகளில் 'ரிஷப வாஹன தேவர்' திருமேனியும் ஒன்ருகும்.

கனமாக எழுந்தருள்விக்கப்பட்ட இத்திருமேனி 'ஒரு முழம் பத்து விரல் இரண்டு தோரை' உயரம் உடையது. நான்கு திருக்கரங்கள் உடையது. ரத்னநியாஸம் செய்யப்பெற்றதாக இவர் எழுந்தருளி நின்ற 'பத்மம்' மூன்றரை விரல் உயரமுடையது.

இவர் 'நம்பிராட்டியார்' உமாபரமேஸ்வரியார் 'திருமேனி' ஒருமுழம் ஐந்துவிரல் உயரம் உடையது. கனமாக எழுந்தருள்விக்கப்பெற்றது. இதன் பத்மம் இரண்டரை விரலுயர முடையது.

'குளம்பில் இருந்து கொம்புவரை' செல்ல ஒருமுழம் ஆறு விரல் ஐந்து தோரை உயரமுடையதாகக் கனப்பொள்ளலாகச் செய்விக்கப்பட்ட ரிஷபம் ஒன்று எழுந்தருள்விக்கப்பட்டது.

தேவரும், நம்பிராட்டியாரும் ரிஷபமும் எழுந்தருளி நின்ற பீடம் இருமுழம் ஒரு விரல் இரண்டு தோரை நீளம், ஒன்றேகால்முழ அகலம், பத்துவிரல் ஒருதோரை உயரம் உடையது. இதன் இருமுனைகளிலும் ஒவ்வொரு சிம்ஹங்கள் இருந்தன, இம் மூவரையும் தோரணக்கால் இரண்டும் அர்த்த சந்ரம் ஒன்றுமுடைய பிரபை ஒன்று கவித்திருந்தது. இதன் சுற்றளவு ஆறுமுழம் ஒன்பதரை விரல் ஆகும்.

## C. கணபதியார்

இவள் எழுந்தருள்வித்த கணபதியார் திருமேனி கனமாகச் செய்விக்கப்பட்டது; அரைமுழம் 5 தோரை உயர முடையது. பத்மமும் பீடமும் உடையது. இதன் பிரபை ஒன்றேமுக்கால் முழம் ஐவிரல் சுற்றளவுடையது.

இவள் தான் எழுந்தருள்வித்த இத்திருமேனிகட்குப் பின்வரும் அணிகளைத் தந்துள்ளாள்.

| எண். | பெயர் | எண்ணிக்கை | க | ம | கு | மா | முத்து | ப | ராஜவர்த்தம் | தாளிம்பம் | பொத்தி | க | ம | கு | மா | விலை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | சிறியதிருமாலை | 1 | | | | | 22 | 1 | | | | $6\frac{1}{2}$ | 4 | 1 | — | 11 |
| 2. | துத்துரு | 1 | | | | | 22 | 1 | | | | $1\frac{1}{2}$ | 3 | | 8 | 3 |
| 3. | வடம் | 1 | | | | | 33 | 2 | 2 | 2 | | $3\frac{3}{4}$ | 3 | | 3 | 16 |
| 4. | வடம் | 1 | | | | | 35 | 2 | 1 | 2 | | $3\frac{3}{4}$ | 1 | | 8 | 15 |
| 5. | வடம் | 1 | | | | | 31 | 2 | 2 | 2 | | $3\frac{3}{4}$ | 3 | | 1 | 15 |
| 6. | களாவம் | 1 | | | | | 99 | 6 | — | 2 | | $4\frac{3}{4}$ | 3 | 1 | | 11 |
| 7. | பஞ்சசரி | 1 | | | | | 243 | 10 | | 2 | | $8\frac{1}{2}$ | 3 | | 6 | 8 |
| 8. | ஸ்ரீசந்தம் | 1 | | | | | 869 | 21 | | | 8 | 26 | 1 | | | 30 |
| 9. | வளையல் | 1 | | | | | 378 | | | | | $11\frac{3}{4}$ | 1 | 1 | | $13\frac{1}{8}$ |
| 10. | வளையல் | 1 | | | | | 376 | | | | | $10\frac{1}{2}$ | 3 | 1 | | 13 |

| | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 11. | வளையல் | 1 | | | | | 271 | | | | | 9 | 9 | 1 | | 6 |
| 12. | வளையல் | 1 | | | | | 142 | | | | | 7½ | 1 | | | 7 |
| 13. | உதரபந்தம் | 1 | | | | | 306 | 8 | | 3 | | 8 | 7 | 1 | | 8 |
| 14. | திருப்பட்டிகை | 1 | | | | | 734 | 20 | | | | 40 | — | — | — | 26 |
| 15. | திருவடிக்காறை | 1 | | | | | 375 | | | | | 12½ | — | 1 | — | 15¼ |
| 16. | திருவடிக்காறை | 1 | | | | | 372 | | | | | 12 | — | 1 | — | 16 |
| 17. | திரள்மணிவடம் | 1 | 7¼ | | | | | | | | | | | | | |
| 18. | திரள்மணிவடம் | 1 | 7 | 4 | 1 | — | | | | | | | | | | |
| 19. | திருக்கைக்காறை | 1 | 9 | | | | | | | | | | | | | |
| 20. | திருக்கைக்காறை | 1 | 8¾ | | | | | | | | | | | | | |
| 21. | திருக்கைக்காறை | 8 | 8½ | 3 | 1 | | | | | | | | | | | |
| 22. | திருக்கைக்காறை | 1 | 6 | 3 | | | | | | | | | | | | |
| 23. | திருப்பட்டிகை | 1 | 30 | — | — | — | | | | | | | | | | |
| 24. | திருவடிக்காறை | 1 | 10¼ | | | | | | | | | | | | | |
| 25. | திருவடிக்காறை | 1 | 9¾ | 2 | 1 | | | | | | | | | | | |
| 26. | திருவடிநிலை ஒரணை | 1 | 49¾ | — | — | — | | | | | | | | | | |
| 27. | கபாலம் | 1 | 50 | 7 | 1 | — | | | | | | | | | | |
| 28. | வெண்சாமரைக் கய் | 1 | 12 | — | — | — | | | | | | | | | | |
| 29. | வெண்சாமரைக் கய் | 1 | 9¾ | 3 | — | 6 | | | | | | | | | | |
| 30. | குற்றுடைவாள் | 1 | — | — | — | — | | | | | | — | — | — | — | — |
| 31. | பொன்நாண் | 1 | | | | | | | | | | 2 | 2 | 1 | — | 8 |
| 32. | வளையல் | 1 | | | | | 136 | | | | | 7½ | 1 | — | — | 7 |
| 33. | வளையல் | 1 | | | | | 376 | | | | | 10 | 9 | | | 12 |
| 34. | திருப்பட்டிகை | 1 | | | | | 548 | 10 | | 5 | | 24½ | 3 | 1 | — | 15 |
| 35. | திருவடிக்காறை | 1 | | | | | 160 | | | | | 15 | | | | 10 |
| 36. | திருவடிக்காறை | 1 | | | | | 158 | | | | | 10 | 2 | 1 | | 15¼ |
| 37. | தாலிமணிவடம் | 1 | 1¾ | 4 | 1 | — | | | | | | | | | | |
| 38. | திரள்மணிவடம் | 1 | 4½ | 2 | | | | | | | | | | | | |
| 39. | திருக்கைக்காறை | 1 | 5¾ | 2 | 1 | | | | | | | | | | | |
| 40. | திருக்கைக்காறை | 1 | 6 | | | | | | | | | | | | | |
| 41. | திருப்பட்டிகை | 1 | 20¼ | | | | | | | | | | | | | |
| 42. | திருவடிக்காறை | 1 | 6 | | | | | | | | | | | | | |
| 43. | திருவடிக்காறை | 1 | 8¾ | | | | | | | | | | | | | |
| 44. | திருபொற்பூ | 1 | 3 | | | | | | | | | | | | | |
| 45. | பூணூல் | 1 | 6 | 2 | 1 | | | | | | | | | | | |
| | கூடுதல் | 52 | 283¾ | — | 1 | 6 | 6686 | 83 | 5 | 10 | 16 | 242½ | — | — | 6 | 250⅝ |

இப்பட்டியலால் சோழமஹாதேவி சுமார் 631 கிராம் எடையுள்ள பொன்னகைகளையும் (விலை 113695) ரூபாய் 530 கிராம் எடையுள்ள நவமணிகள் பதிக்கப்பட்ட அணிகளையும் (விலைமதிப்பு 95484 ரூபாய்) தந்தமையும் அறியப் பெறும். இவற்றுள் 1-30 ரிஷபவாஹனர்க்கும் 31-43 ரிஷபவாஹனர் நம்பிராட்டியார்க்கும், 44-5 கணபதியார்க்கும் தரப்பெற்றவை. இவள் வெள்ளியாலாகிய பரதல், மண்டை, கச்சோலம் ஆகியன தந்தாள். 319¼ கழஞ்சு எடையுடைய இவ்வெள்ளிக் கலங்கள் சுமார் 699 கிராமுக்குச் சமமானவையாகும்.

3. அபிமானவல்லி அளித்தன

முதல் இராஜராஜனின் தேவியருள் ஒருத்தியாகிய அபிமானவல்லி தஞ்சைப் பெரிய கோயிலில் 'இலிங்கபுராணதேவர்' திருமேனியை எழுந்தருள்வித்து அதற்கு அணிகளும் அளித்துள்ளாள் [1] 'திருமாலொடு நான்முகனும் தேடியும், தேடொணாத் தேவனாக அமையும் திருவுருவே' லிங்க புராணர் திருமேனி, இக்காலத்துச் சிவாலயங்களில் கருவறையின் பின் பகுதியில் உள்ள 'லிங்கோத்பவர்'. இதனுள் 'லிங்கபுராணதேவர்' எனப் பெறுகிறார். "சிவபெருமான் அழற்பிழம்பானார்: திருமால் ஏனமாகிப் பாத கமலங்களைத் தேடினார். பிரமன் அன்னம் மீதிவர்ந்து அண்ணால் முடி எங்குளது? என ஆய்ந்தான். அடிமுடி காணவியலாது இருவரும் அயர்வுற்றனர்" என்பது புராணநூல்களுட் கண்டது. இவ்வரலாற்றை விளக்கும் வகையில் செப்புத் திருமேனி செய்வித்தாள் இவள்.

'லிங்க புராணதேவர் திருமேனி'யில் நான்கு திருஉருவங்கள் உள்ளன. 1. லிங்கபுராணதேவர். 2. சடைமுடியண்ணல் 3. பிரம்மா. 4. விஷ்ணு.

லிங்கபுராணதேவர் திருமேனி 'பீடத்துக்குமேல் ஜடாபாரம் வரை' இருபத்தோரு விரல் ஆறுதோரை உயரமுடையது. ஒருமுழம் பதினோருவிரல் இரண்டு தோரை சுற்றளவுடையது. (இது ஒரு சிவலிங்கத் திருவுரு).

இவரொடு தோற்றமாக எழுந்தருள்விக்கப்பட்ட திருமேனி (சிவபெருமான்) 'ஜடைக்குமேல் கேஸம்' வரை பன்னிருவிரல் நான்கு தோரை உயரமுடையது. நான்கு திருக்கரங்கள் உடையது.

லிங்கத்தோடும் கூடச் செய்த பிரம்மர் ஒருவர். இவர் திருமேனி, ஏழுவிரல் உயரமும் நான்கு திருக்கரமும் உடையது. கனமாகச் செய்யப் பெற்றது.

லிங்கத்தொடும் கூடக் கனமாகச் செய்த 'மஹாவிஷ்ணுக்கள்' வராகமுகமுடையவர். ஏழுவிரல் உயரம் நான்கு திருக்கரமுடையவர். இவரனைவரும் ஒரு பத்மபீடத்தின்மேல் எழுந்தருளி இருந்தனர். இப்பீடத்தொடு ஒரு கோமுகம் செய்விக்கப்பட்டிருந்தது என்பது கல்வெட்டிற் கண்டது.

அபிமானவல்லி இத்திருமேனிக்கு இரு தாழ்வடங்களைத் தந்தாள். இவற்றுள் முதலாவது தாழ்வடம் 430 முத்துக்களையுடையது. காற்காசு விலைமதிப்புடையது. மற்றொன்று 887 முத்துக்கள் கோக்கப்பட்டது. மூன்று கழஞ்செடையும் அரைக்காசு மதிப்பு முடையது என்பது இக் கல்வெட்டால் அறியப்பெறுகிறது.

---

1. S.I.I. Vol. II No. 44

## 4. த்ரைலோக்யமஹாதேவியின் அறச்செயல்கள்

இராஜராஜனின் தேவியருள் ஒருத்தியாகிய திரைலோக்கிய மகாதேவி, தன் கணவன் எடுப்பித்த தஞ்சைப் பெரிய கோவிலில் 29 ஆமாட்சியாண்டில் சிவபெருமானின் திருக்கலியாண கோலத்தைச் செப்புத் திருமேனியாக எழுந்தருள்வித்ததுடன் தான் எழுந்தருள்வித்த கல்யாண சுந்தரர்க்குப் பல அணிகலன்களைத் தந்தாள்.[1]

இவள் எழுந்தருள்வித்த 'கல்யாணசுந்தரர்' திருமேனி ஒன்றேமுக்கால் முழம் இரண்டரை விரல் உயரம் உடையது. ரத்னந்யாஸம் செய்து இவர் எழுந்தருளி இருந்த பத்மம் நாலரை விரல் உயரமுடையது.

இவர் 'நம்பிராட்டியார் உமாபரமேச்வரியார்' ரத்னந்யாஸம் செய்யப்பட்டதொரு பத்மத்தின் மேல் ஒருமுழம் பதினொன்றரை விரல் உயரமுடையராக எழுந்தருளி இருந்தார். இவ்விருவரும் ஒரு பீடத்தின் மேல் எழுந்தருளியிருந்தனர். இவ்விருவரையும் ஏழு முழச் சுற்றுடையதும் கனமாகச் செய்யப்பட்டதும் தோரணக்கால் இரண்டும் அர்த்த சந்ரம் ஒன்றும் உடையதுமான ஒரு பிரபை கவித்திருந்தது.

'உதக தாரை செய்கின்றாராக எழுந்தருளி நின்றாராக' மஹாவிஷ்ணுக்கள் திருமேனி கனமாகச் செய்யப்பெற்றது. இது பாதாதி கேஸாந்தம் இருபது விரல் உயரமும் நான்கு புஜங்களும் உடையது. அத் திருமேனி ரத்னந்யாஸம் செய்த இரண்டரை விரல் உயரமுடைய பத்மத்தின் மீது இருந்தது. இப்பத்மத்தின் கீழ் முக்கால் முழம் மூன்று விரல் உயரமும் நான்குகால்களும் ஒன்றரை விரல் கனத்துச் செடியும் உடையதாகச் செய்த தொரு 'நாற்காலி பீடம்' அமைந்திருந்தது.

ஹோமம் செய்கின்றாராகப் பிரம்மர் திருமேனி கனமாக எழுந்தருள்விக்கப் பெற்றது. பிரம்மதேவர் சுகாசனக் கோலத்தில் அரைமுழ உயரத்தில் சதுர்புஜமும் சதுர்முகமுமுடையராகப் பத்மத்தொடும்கூடிய தொரு பீடத்தின்மேல் எழுந்தருள்விக்கப்பட்டிருந்தார்.

'கல்யாண சுந்தரர் திருமேனி' பற்றிய அமைப்பு விவரங்களைக் கூறும் இச் சாசனம், இவளே இத் தேவர்க்கும் நம்பிராட்டியார்க்கும் பொன்னாலான அணிகலன்களைத் தந்ததனை விவரிக்கிறது. விவரம் வருமாறு:—

| எண். | பெயர் | எண்ணிக்கை | பொன் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | கழ | மஞ் | குன்றி | மா |
| 1. | திருக்கம்பி | 1 | 1½ | — | — | — |
| 2. | ,, | 1 | 1 | 9 | 1 | |
| 3. | திரள்மணிவடம் | 1 | 5 | 4 | — | — |
| 4. | ,, | 1 | 5 | 1 | — | — |
| 5. | ,, | 1 | 5 | 2 | 1 | — |
| 6. | திருக்கைக்காறை | 1 | 20½ | 1 | — | — |
| 7. | ,, | 1 | 20½ | 2 | 1 | |

1. S.I.I. Vos. II, No. 48.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 8. | ,, | 1 | 20 | 6 | — | — |
| 9. | ,, | 1 | $19\frac{3}{4}$ | | | |
| 10. | திருவடிக்காறை | 2 | $35\frac{1}{4}$ | — | — | — |
| 11. | பட்டைக்காறை வயிரம் 3, பளிங்கு 1, பொத்தி 1 உட்பட (விலை $3\frac{1}{2}$ காசு) | 1 | $1\frac{1}{4}$ | | | |
| 12. | திருக்கம்பி | 1 | $1\frac{1}{2}$ | — | 1 | |
| 13. | ,, | 1 | 1 | 9 | 1 | |
| 14. | திரள்மணிவடம் | 1 | 4 | 6 | — | — |
| 15. | ,, | 1 | $4\frac{1}{2}$ | — | — | — |
| 16. | ,, | 1 | 4 | 9 | — | — |
| 17. | திருக்கைக்காறை | 1 | $11\frac{3}{4}$ | 2 | 1 | — |
| 18. | ,, | 1 | $11\frac{3}{4}$ | 4 | — | — |
| 19. | திருவடிக்காறை | 1 | 12 | 2 | 1 | |
| 20. | ,, | 1 | $12\frac{1}{2}$ | 1 | | |
| | கூடுதல் | 21 | $200\frac{3}{4}$ | 1 | 1 | — |

இவற்றுள் முதல் 11 அணிகள் கல்யாணசுந்தரர்க்கும் ஏனைய நம்பிராட்டியார்க்கும் இவளால் தரப்பெற்றவை. இவற்றின் மொத்த எடை சுமார் 439 கிராம்களாகும். (விலை மதிப்பு 79045 ரூபாய்)

4. பஞ்சவன்மாதேவியின் அறப்பணிகள்

இராஜராஜனின் தேவியருள் ஒருத்தியாகிய பஞ்சவன்மாதேவியார் தஞ்சைப் பெரியகோயிலில் தஞ்சையழகர், தஞ்சையழகர் நம்பிராட்டியார், கணபதியார் என்னும் மூன்று திருமேனிகளை எழுந்தருள்வித்து அவற்றுக்குப் பல அணிகளைத் தந்தமையை இராஜராஜனின் 29-ஆமாண்டுக் கல்வெட்டொன்று விளக்குகிறது.

இவள் எழுந்தருள்வித்த திருமேனிகளுள் 'தஞ்சை அழகர்' திருமேனி என்பது தஞ்சைப் பெருங்கோயில் நடராசர் திருமேனிகளில் ஒன்றாகும்.[1] தஞ்சையழகரையும் நம்பிராட்டியாரையும் இவள் எழுந்தருள்வித்த திறத்தை,

1. ஸ்வஸ்திஸ்ரீ உடையார் ஸ்ரீராஜ-
2. ராஜதெவர் நம்பிராட்டியார்
3. பஞ்சவந்மாதெவியார் ஸ்ரீ-
4. ராஜராஜீஸ்வர உடையார் கொயிலி-
5. ல் யாண்டு இருபத்தொன்பதாவது வரை

1. இத்திருமேனிதான் தஞ்சைக் கலைக்கூடத்தில் காணப்பெறும் திரிபுராந்தகர் திருமேனி என்பது திரு. இராமஸ்வாமி அவர்கள் கருத்தாகும். தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகள். பக். 48–9 காண்க.

6. எழுந்தருளுவித்த செப்புத்திருமேனிகள்
7. உடையார் கோயிலில் முழத்தால் அளந்தும்
8. ரத்நங்கள் தக்ஷிண மேருவிடங்கனென்னுங்கல்-
9. லால் நிறை எடுத்தும் பொன்னும் வெள்ளியும்
10. ஆடவல்லான் என்னுங் கல்லால் நிறை எடுத்து-
11. ங்கல்லில் வெட்டினபடி குஞ்சித்த திருவடியின் கீழ்-
12. க்கிடந்த முசலகனுடுங்கூட பதாதி கெஸாந்தம் இருமு-
13. ழமெ நால்விரல் உசரமும் ஸ்ரீஹஸ்தம் நாலும் உடை-
14. ய கனமாக எழுந்தருளுவித்த தைஞ்சையழகர் என்று
15. திருநாமம் உடைய திருமெனி ஒருவர் ரத்நந்யாஸம் செய்து
16. இவர் எழுந்தருளி நின்ற ஐவிரல் உசரம் உள்ள பத்மம் ஒன்று
17. இவர் நம்பிராட்டியார் பாதாதிகெஸாந்தம் ஒன்றெ முக்கா-
18. லெ இருவிரலரை உசரம் உடைய கனமாக எழுந்தருளுவி-
19. த்த உமாபரமெஸ்வரியார் திருமெனி ஒருவர்

என்று மிக அழகாகக் கல்வெட்டு விளக்குகிறது.

இவள் எழுந்தருளுவித்த திருமேனிகளில் மற்றொன்று 'கணபதியார்' திருமேனியாகும். இது நின்ற நிலையில் நான்கு ஸ்ரீ ஹஸ்தங்களுடன் முக்காலே அரைக்கால் முழ உயரமுடையதாய் எழுந்தருள்விக்கப்பட்டதாகும்.[1]

இவள் தான் எழுந்தருள்வித்த தஞ்சை அழகர் திருமேனிக்கும், நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரியார் திருமேனிக்கும் கணபதியார் திருமேனிக்கும் அணிகலன்கள் பல அளித்துள்ளாள்.

இவள் தான் எழுந்தருள்வித்த தஞ்சையழகர்க்கு, 1. திருமாலை, 2. நான்கு ஏகாவல்லிகள், 3. ஸ்ரீசந்தம், 4. வடுகவாளி, 5. ஸ்ரீ பாகுவலயம் இரண்டு, 6. திருக்கைக் காறைகள் நான்கு, 7. திருப்பட்டிகை. 8. திருவடிக் காறைகள் இரண்டு ஆகிய அணிகளைத் தந்தாள். இவை முத்து முதலான மணிகளால் ஆகியவை. இவற்றின் மொத்த மதிப்பு 659 காசுகளாகும். (விலை மதிப்பு 129740 ரூ.) மணிகளாலாகிய இவ்வணிகளை யன்றியும் பொன்னாலாகிய நான்கு திருக்கைக் காறைகளும் இரண்டு திருவடிக் காறைகளும் தந்துள்ளாள். இப்பொன்னணிகள் சுமார் 165 கிராம் எடையுடையனவாகும். (75¾ கழஞ்சு 12 மஞ்சாடி 1 குன்றி) (ரூ. 29826.) இவள் தஞ்சையழகர்க்கு 'ஆசுங்கண்டமும் மலரும்' பொன் கட்டிய தொரு குற்றுடைவாள் கொடுத்துள்ளாள். 'பஞ்சவன் மாதேவி' என்னும் திருநாமமுடைய 'வட்டில்' 'தளிகை' என்னும் வெள்ளிப்பாத்திரங்களைக் கொடுத்துள்ளாள். இவை சுமார் 1 கிலோ எடையுடையனவாகும்.

இவள் தஞ்சையழகர் நம்பிராட்டியார்க்கு, முத்துச் சிடுக்கு, முத்துச் சூடகங் கள் திருவடிக்காறைகள் முதலான மணியாலான அணிகளை அளித்திருக்கிறாள். இவ்வணிகளின் மொத்த விலை மதிப்பு 113$\frac{7}{20}$ காசுகளாகும். (விலை மதிப்பு 22315 ரூ.) இவளே இவர்க்குப் பொன்னாலான திருக்கைக்காறை திருவடிக்காறைகள் முதலானவற்றைத் தந்தாள். இவை சுமார் 94 கிராம் (43 கழஞ்சு 1 குன்றி) எடையின வாகும். (விலை மதிப்பு 16931.25)

1. S.I.I. Vol. II, No. 51.

கணபதியார்க்குத் திருக்கைக்காறை இரண்டும் திருக்காற்காறை இரண்டும் கொடுத்துள்ளாள். இதன் எடை சுமார் 97 கிராம் ($41\frac{1}{4}$ கழஞ்சு 7 மஞ்சாடி 1 குன்றி யாகும். (விலைமதிப்பு 17521-87 ரூ)

**ஸ்ரீபதஞ்சலிதேவர்**

பஞ்சவன் மாதேவி பதஞ்சலியார் திருமேனியை எழுந்தருள்வித்தமையை மற்ரொரு சாசனம்[1] காட்டுகிறது. ஆடவல்ல பெருமானுக்குத் தஞ்சைபழகர் திருமேனி எழுந்தருள்வித்த இவ்வரசி 'பதஞ்சலி'யாருக்குச் செப்புத்திருமேனி கண்டமை புராணச் சிறப்புப் பொருந்தியதொரு செயலாகும்.

இவள் எழுந்தருள்வித்த பதஞ்சலியார் திருமேனி 'வால் முதல் படம் வரை' (புச்சாதி பணாந்தம்) ஒன்றே முக்காலே அரைக்கால் முழ உயரமுடையது. ஐந்து படங் (பணங்) களையுடையது. இந்தப் படத்தினுள்ளே முகம் ஒன்றும் மகுடமொன்று முடையது. இரண்டு ஸ்ரீ ஹஸ்தங்களுடையது. நாபிக்குமேல் புருஷாஹாரமாய்ச்செய்யப் பெற்றது. நாபிக்குக் கீழ் மூன்று சுற்றுப்பேழையுடையதாகச் செய்யப் பெற்றது. பத்மாசனமும் பிரபையுமுடையது. இதற்கு இவள் 22 திருப்பொற்பூக்களும் ஒரு திருமகரமும், இரண்டு திருக்கைக்காறைகளும் அளித்துள்ளாள். இப்பொன்னணிகளின் மொத்த எடை சுமார் 112 கிராம் ($51\frac{1}{2}$ கழஞ்சு ஆறுமஞ்சாடி 1 குன்றி) ஆகும். (விலை. 20278)

## 5. பிருத்வி மஹாதேவியார் அறப்பணிகள்

'சிவபெருமான், திருப்பாற்கடலின்றெழுந்த நஞ்சுண்டு அமரர்களைக் காத்து நீலகண்டனாயினன்' என்பது புராண வரலாறு. நீலகண்டர்க்கு, 'விஷாபஹரமூர்த்தி' திருக்கோலம் ஆகமங்களுட் கண்டது. தஞ்சையில் உள்ள இராஜராஜனின் 29-ஆமாண்டுக் கல்வெட்டொன்று [2] இராஜராஜதேவர் நம்பிராட்டியாரான ப்ருத்விமஹாதேவியார் 'ஸ்ரீகண்ட மூர்த்திகள்' திருமேனியினைத் தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருள்வித்தசெய்தி இயம்புகிறது. இத்திருமேனி முக்கால் முழம் நான்கு விரலுயரமுடையதாய் நான்கு திருக்கரங்களோடு கனமாக எழுந்தருள் விக்கப்பட்டிருந்தது. பத்மமும் பீடமும் பிரபையும் செய்தளிக்கப்பட்ட இத் திருமேனிக்கு இவள் திருக்கம்பி ஒன்றும் நான்கு திருக்கைக் காறைகளும் தந்துள்ளாள். பொன்னாலாகிய இவை சுமார் 45 கிராம் (21 கழஞ்சு 1 குன்றி) எடையுடையனவாம். (ரூ 8268) இத் திருமேனிக்குத் திருவமுது முதலான நிவந்தங்கட்குச் செய்யப் பட்டிருந்த ஏற்பாட்டினை இராசேந்திரன் காலத்துக் கல்வெட்டொன்று[3] காட்டுகிறது.

## 6. இலாடமாதேவியின் திருப்பணி

சிவபெருமான் அருச்சுனனுக்குப் பசுபத அஸ்த்திரம் அருளும் கோலம் 'பாசுபத மூர்த்திகள்' திருக்கோலமாகும். 'பாசுபதம் அருளினோன்காண்' எனத் தேவாரத்துக் கூறப்பெறும் அருட்காட்சி இது. இராஜராஜனின் மாதேவியருள் ஒருத்தியாகிய இலாடமாதேவி என்பாள் தஞ்சைப்பெருங்கோயிலில் பாசுபத மூர்த்திகள் திருமேனி எழுந்தருள்வித்தமையையும் அதற்குத் திருவிளக்குக்கு ஏற்பாடுகள் செய்திருந்தமையையும் இராஜராஜனின் திருவிளக்கு நிவந்தக் கல்வெட்டில்,

"இலாட மாதேவியார் மாடாய் இவர் எழுந்தருள்வித்த பாசுபத மூர்த்திகளுக்குத் திருவிளக்குக்குத்தந்த பசுவில்" என்றும்

---

1. S. I. I. Vol. II No. 53.
2. S. I. I. Vol. II No. 80
3. S. I. I. Vol. II No. 82

"இலாட மாதேவியார் மாடாய் இவர் எழுந்தருள்வித்த பாசுபத மூர்த்திகளுக்குத் தந்த எருமையில்" என்றும் வருதலைக்கொண்டு அறியலாம். அத்திருமேனியின் அமைப்புப் பற்றிய விவரங்கள் ஏதும் அறியப் பெறவில்லை.

மற்றும் குடுத்தார்குடுத்தன

முதல் ராஜராஜன் காலத்து அரசியல் அலுவலரும் பொதுமக்களும் தஞ்சைப் பெரிய கோயிலில் அறப்பணிகள் புரிந்துள்ளனர். அவற்றுட் சிலர் ஆற்றிய பணிகள் முதற்கண் கூறப்பெறும்.

1. பொய்கைநாடு கிழவன்

பொய்கைநாடு

சோழமண்டலம் முதலாம் இராஜராஜசோழனது ஆணையின்படி ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. [1]அவற்றுள் இராசேந்திர சிங்கவளநாடு என்பதும் ஒன்று. ஒவ்வொரு வளநாடும் சிலநாடு[2]களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. பொய்கைநாடு என்பது இராசேந்திர சிங்க[3]வளநாட்டைச் சேர்ந்தது. திருவையாறு[4] திருநெய்த்தானம்[5], திருமழபாடி[6] என்பன இப்பொய்கை நாட்டைச்சேர்ந்த தலங்கள் என்றால் இப்பொய்கை நாட்டின் எல்லை ஒருவாறு அறியப்பெறும். இவ்விராசேந்திர சிங்க வளநாடு காவிரியின் வடகரைநாடு என்பதனைத் திருவையாற்று ஒலோகமாதேவீச் சரத்துக் கல்லெழுத்தால் அறியலாம்.

பொய்கைநாடு கிழவன் அலுவல்

இப் பொய்கைநாட்டின் தலைவனாக முதல் இராஜராஜன் காலத்தில் விளங்கியவன் பொய்கைநாடு கிழவன் எனப் பெற்றான். இவன் இயற்பெயர் 'ஆதித்தன் சூரியன்'

---

1. அவையாவன : அருண்மொழிதேவ வளநாடு; க்ஷத்திரிய சிகாமணி வளநாடு; உய்யக்கொண்டான் வளநாடு; நித்தவிநோத வளநாடு; பாண்டிய குலாசனி வளநாடு; கேரளாந்தக வளநாடு; இராசாச்ரய வளநாடு; இராசராச வளநாடு; இராசேந்திர சிங்க வளநாடு (பண்டாரத்தார்சோழர் வரலாறு—பாகம் 1. பக்கம் 118 அடிக்குறிப்பு.)

2. நாட்டை இக்காலத்துத் தாலூகாவிற்குச் சமமாகவும், வளநாட்டை ஜில்லாவிற்குச் சமமாகவும் கொள்ளலாம்.

3. இராசேந்திர சிங்கன் என்பது முதலாம் இராஜராஜனது சிறப்புப் பெயர்களில் ஒன்று.

4. ராஜராஜ தேவர்க்கு யாண்டு 22-ஆவது வடகரை ராஜேந்திர சிங்கவளநாட்டுப் பொய்கை நாட்டுத் தேவதானம் திருவையாற்று ஒலோகமாதேவீச்சரத்து மகாதேவர் (S.I.I. Volume V 516).

5. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராச கேசரி பன்மர்க்கு யாண்டு 3-ஆவது பொய்கை நாட்டுக் கீழ் பிலாற்றுத் தேவதானம் திருநெய்த்தானத்து மகாதேவர் (S.I.I. Vol. V No. 580).

6. கோப்பரகேசரிபன்மரான உடையார் ஸ்ரீ ராஜேந்திரசோழ தேவர்க்கியாண்டு 16-ஆவது ராஜேந்திர சிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருமழபாடியுடைய மகாதேவர்.

என்பதும், 'தென்னவன் மூவேந்தவேளான்' என்பது இவன் சிறப்புப் பெயராக இருத்தல்வேண்டும் என்பதும் அறியத்தகும். இப் பொய்கைநாடு கிழவன் முதலாம் இராஜராஜனின் 9-ஆவது ஆட்சியாண்டாகிய கி.பி. 985-ல் திருச்சோற்றுத் துறையில் சில அறங்களைச் செய்துள்ளான். அக் கல்லெழுத்தில் "பொய்கைநாடு கிழவன் ஆதித்தன் சூரியனை தென்னவன் மூவேந்த வேளான்" என்று குறிக்கப் பெற்றுள்ளான். முதல் இராஜராஜனது 29-ஆம் ஆட்சியாண்டுக் கல்லெழுத்துக்களிலும் முதல் ராஜேந்திரசோழனது 3-ஆவது ஆட்சியாண்டுக் கல்லெழுத்துக்களிலும் (கி.பி. 1015ல்) அதாவது முதல் இராசேந்திரன் பட்டத்திற்கு வந்த ஆண்டில் காணும் பல கல்லெழுத்துகளிலும் "ஸ்வஸ்திஸ்ரீ உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார்க்கு ஸ்ரீ கார்யம் செய்கின்ற பொய்கைநாடு கிழவன் ஆதித்தன் சூரியனை தென்னவன் மூவேந்த வேளான்" என்று குறிக்கப்படுவதால் தஞ்சையில் இராசராசேச்சரம் எடுப்பித்த பிறகு இராஜராஜசோழனால் ஸ்ரீகார்யம் செய்கின்ற அலுவலில் நியமிக்கப் பட்டிருந்ததாக அறியப்பெறுகிறது. இவன் சிறந்த சிவபக்தியுடையவன். இவன் தன் வாழ்நாளில் சிவனடியார்களிடத்தும் அரசனிடத்தும் ஒப்பற்ற அன்பு பூண்டொழுகியவன். ஆதலின், இவனது சிறந்த பண்புகளையறிந்து, இராஜராஜன் இராசராசேச்சுரத்தில் ஸ்ரீகாரியஞ் செய்யும் வேலையில் இவனை அமர்த்தினன் என்னலாம்.[1]

### திருச்சோற்றுத்துறைக் கல்லெழுத்து

முதலாம் இராஜராஜனின் 9-ஆம் ஆட்சி ஆண்டில் திருச்சோற்றுத்துறை மகாதேவர்க்குப் பொய்கைநாடு கிழவன் பொன்னின் வெண்சாமரைக்கை 1-க்கு, நிறை 19; கணபதியார்க்கு இராசந்தி விளக்கு ஐந்தனுக்கும் நொந்தாவிளக்கினுக்கும் ..................வைத்த காசு 10; (இங்ஙனம் பல தருமங்கள் சொல்லப்பட்டுள்ளன); "யாண்டு 10-ஆவது.......... திருப்பதியம் பாடுவார்க்கு நெல்லு 70 கலத்துக்கு வைத்தபொன் 33: துர்க்கையார்க்குத் திருவமிது நெல்லு 20க்கு வைத்தகாசு 10.......... இரண்டு திருவிழாவுக்குப் பெருந்திருவமிர்து செய்ய நெல்லுக்கு வைத்தகாசு 12," என்ற இக்கல்லெழுத்துப் பகுதியினின்று கி.பி. 985-ல் திருச்சோற்றுத்துறை மகாதேவர் கோவிலுக்குப் பொய்கைநாடு கிழவன் சில அறங்கள் செய்துள்ளான் என்றும் அறியப்படுகிறது. இதில் திருப்பதியம் பாடுவார்க்குப் பொன் அளித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### மூவர் படிமங்களை எழுந்தருளுவித்தமை

திருச்சோற்றுத் துறையில் தேவாரம் பாடுவதற்கு நிபந்தம் அளித்த பொய்கை நாடு கிழவன், தஞ்சை இராஜராஜேச்சுவரத்தில் ஸ்ரீகாரியம் செய்கின்ற அலுவல் ஏற்றுக்கொண்டதும் தேவார மூவருடைய படிமங்களைத் தஞ்சை இராஜராஜேச்சுரத்தில் எழுந்தருளுவித்து அவற்றுக்கு அணிகலன்களும் அளித்தான் என்பதை இரண்டு கல்லெழுத்துக்களினின்றும் அறியலாம்.[2]

விளக்கம் வருமாறு:—

1. நம்பி ஆரூரர்-சுந்தரமூர்த்தி சுவாமிகள் படிவம்

பாதாதி கேசாந்தம் பதினெழுவிரல் இரண்டு தோரை[3] உயரமும் இரண்டு திருக்கையும் உடையவராய்க் கனமாக[4] எழுந்தருளுவிக்கப்பெற்றது; இது செப்புப்

---

1. சோழர்கால அரசியல் தலைவர்கள்—பேராசிரியர் கா. ம. வேங்கடராமையா—60-70 காண்க.
2. S. I. I. Vol. II Part II No. 38 & 41
3. தோரை - நெல்; 8 தோரை – 1 விரல்; 12 விரல் - 1 சாண்; 2 சாண் - 1 முழம்.
4. Solid image (உள் இடைவெளி இல்லாதது).

பிரதிமம்; இவர் நின்ற பத்மம் இரு விரலரை உயரமுடையது; இதனோடுங்கூடச் செய்த பீடம் எண்விரல் சம சதுரத்து மூவிரலே இரண்டு தோரை உயரம் உடையது.

### இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தது

ருத்ராக்ஷத் தாழ்வடம் ஒன்றில் பொன்னின் சுரி 56-ம் ருத்ராக்ஷம் 56-ம் உள்பட நிறை 8-கழஞ்சே 9-மஞ்சாடி[1]; விலை காசு 25. (விலை மதிப்பு ரூ 4921-87)

### குறுவாணியக் குடியாகிய பரகேசரிபுரத்து[2] நகரத்தார் கொடுத்தது

ருத்ராக்ஷம் பொன்னின் சுரி கட்டிற்று ஒன்றும். நாண்படு கண்ணும் கொக்கு வாயும் உள்பட நிறை கழஞ்சே 7 மஞ்சாடி ; விலைகாசு 3. (விலை ரூ 590)

### வெண்ணி[3] நகரத்தார் கொடுத்தன

திருக்கம்பி ஒன்று, பொன் கழஞ்சே மஞ்சாடியும் குன்றி; திருக்கம்பி ஒன்று. பொன் கழஞ்சே மஞ்சாடி; திரள்மணிவடம் ஒன்று, பொன் இருகழஞ்சே மஞ்சாடியும் குன்றி; திருக்கைக் காறை ஒன்று, பொன் $1\frac{3}{4}$ கழஞ்சே 3 மஞ்சாடியும் குன்றி; திருக்காற் காறை ஒன்று, பொன் $1\frac{3}{4}$ கழஞ்சே 4 மஞ்சாடியாக இரண்டிற்கு $3\frac{3}{4}$ கழஞ்சே 3 மஞ்சாடி. (மொத்த விலை சுமார் 3901)

## 2. நங்கை பரவையார் படிவம்

பதினாறு விரல் உயரத்து இரண்டு திருக்கையுடையராகக் கனமாக எழுந்தருளு விக்கப்பெற்றது; இவர் எழுந்தருளிநின்ற பத்மம் இருவிரலே இரண்டு தோரை உயர முடையது: இதனோடுங் கூடச்செய்த பீடம் 6 விரலே 2 தோரை சம சதுரத்து மூவிரல் உயரமுடையது.

### இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

திருக்கைக்காறை ஒன்று, பொன் $1\frac{1}{2}$ கழஞ்சாக இரண்டினால் பொன் முக்கழஞ்சு; திருக்காற்காறை ஒன்று பொன் $1\frac{1}{2}$ கழஞ்சாக இரண்டினால் பொன் முக்கழஞ்சு; மோதிரம் ஒன்று, பொன் $\frac{1}{2}$ கழஞ்சே மஞ்சாடியும் குன்றி. (மொத்த விலை 2559)

### பரகேசரிபுரத்து நகரத்தார் கொடுத்தது

திருகு ஒன்று உள்பட பட்டைக்காறை ஒன்று பொன் முக்காலே குன்றி.

### வெண்ணி நகரத்தார் கொடுத்தன

திருக்கம்பி ஒன்று. பொன் $\frac{3}{4}$ கழஞ்சே 2 மஞ்சாடியும் குன்றி: திருக்கம்பி ஒன்று பொன் $\frac{3}{4}$ கழஞ்சே 2 மஞ்சாடி. (மொத்த விலை 590)

## 3. திருநாவுக்கரசர் பிரதிமம்

பாதாதி கேசாந்தம் 22 விரலே 2 தோரை உயரத்து இரண்டு திருக்கையுடைய ராகக் கனமாக எழுந்தருளுவிக்கப் பெற்றது; இவர் எழுந்தருளி நின்ற பத்மம் இரு விரலே ஆறு தோரை உயர முடையது; இதனோடுங் கூடச் செய்த பீடம் எண்விரலே ஆறு தோரைச் சம சதுரத்து நால்விரல் உயரமுடையது.

---

1. 2 குன்றி - 1 மஞ்சாடி; 20 மஞ்சாடி - கழஞ்சு.
2. இது இராசேந்திர சிங்க வளநாட்டில் இருந்த ஊர்; தஞ்சை ராசராசேச்சுரத்துத் தேவதானங்களுள் ஒன்று.
3. இதுவும் இராசராசேச்சுரமுடையார் தேவதானம்; நித்த விநோதவளநாட்டது.

#### இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

ருத்ராக்ஷச்சுரி பொன்னின் நூலிற் கோத்த ருத்ராக்ஷம் ஒன்று உள்பட நிறை ஆறு மஞ்சாடியும் இரண்டுமா; விலை காசு ஒன்று, ருத்ராக்ஷச்சுரி பொன்னின் நூலிற் கோத்த ருத்ராக்ஷம் ஒன்று உள்பட நிறை ஆறு மஞ்சாடியும் இரண்டுமா; விலை காசு ஒன்று, கண்டிகை ருத்ராக்ஷம் ஒன்றும் சுரி ஒன்றும் நிறை ஐங்கழஞ்சே மஞ்சாடியும் குன்றி; விலை காசு எட்டு. திருப்பொற்பூ ஒன்று, பொன் $\frac{3}{4}$ கழஞ்சே 4 மஞ்சாடியும் குன்றி; திருக்கைக்காறை ஒன்று, பொன் இரு கழஞ்சு; திருக்கைக்காறை ஒன்று, பொன் $1\frac{3}{4}$ கழஞ்சே 4 மஞ்சாடி. இவற்றின் மொத்த விலை ரூ, 4134.

#### பரகேசரிபுரத்து நகரத்தார் கொடுத்தது

ருத்ராக்ஷம் பொன்னின் சுரி கட்டிற்று ஒன்றும் நாண் ஒன்றும் படுகண்ணும் கொக்கு வாயும் உட்பட நிறை கழஞ்சே ஏழு மஞ்சாடி; விலை காசு மூன்று.

### 4. திருஞானசம்பந்தர் பிரதிமம்

பாதாதி கேசாந்தம் இருபத்திருவிரலே இரண்டு தோரை உயரத்து இரண்டு திருக்கை யுடையாராகக் கனமாக எழுந்தருளுவிக்கப்பெற்றது; இவர் எழுந்தருளி நின்ற பத்மம் இருவிரலே இரண்டுதோரை உயரமுடையது; இதனோடுங்கூடச் செய்த பீடம் ஒன்பதிற்று விரலே இரண்டு தோரைச் சமசதுரத்து நால்விரல் உயர முடையது.

#### இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

ருத்ராக்ஷச்சுரி பொன்னின் நூலிற் கோத்த ருத்ராக்ஷம் ஒன்றுட்பட நிறை $\frac{1}{2}$ கழஞ்சே இரண்டு மஞ்சாடிக்கு விலை $1\frac{1}{2}$ காசு. ருத்ராக்ஷச்சுரி பொன்னின் நூலிற் கோத்த ருத்ராக்ஷம் ஒன்றுட்பட நிறை $\frac{1}{2}$ கழஞ்சே மஞ்சாடியும் குன்றிக்கு விலை $1\frac{1}{2}$ காசு. தாழ்வடம் ஒன்றிற் பொன்னின் சுரி 56-ம், ருத்ராக்ஷம் 56-ம் உட்பட நிறை எண் கழஞ்சே 4 மஞ்சாடியும் குன்றிக்கு விலை 25 காசு. திருப்பொற்பூ ஒன்று, பொன் கழஞ்சே குன்றி, திருக்கைக்காறை ஒன்று, பொன் இரு கழஞ்சே 4 மஞ்சாடி. திருப் பட்டிகை ஒன்று, பொன் இருகழஞ்சு. இவற்றின் மொத்த விலை 5709 ரூபாய்.

#### பரகேசரிபுரத்து நகரத்தார் கொடுத்தது

ருத்ராக்ஷம் பொன்னின் சுரி கட்டியது ஒன்றும் நாண்படுகண்ணும் கொக்கு வாயும் உட்பட நிறை கழஞ்சே ஏழு மஞ்சாடிக்கு விலை காசு மூன்றேகால்.

### 5. அரசன் அரசியர் பிரதிமங்கள்

'பொய்கைநாடு கிழவன் தன் அரசனிடத்தில் மிக்க அன்பு உடையவன் என்பது இராஜராஜனது படிவத்தையும், அவனது பெருந்தேவியாகிய ஒலோகமாதேவியார் படிவத்தையும் தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளுவித்ததினின்று அறியப் பெறுகின்றது.

#### இராஜராஜன் பிரதிமம்

பாதாதிகேசாந்தம் ஒரு முழமே நால்விரலரை உயரத்து இரண்டு திருக்கை யுடையராக எழுந்தருளுவிக்கப்பெற்றது; இவர், கல்வெட்டில் பெரிய பெருமாள் என்று குறிக்கப்பெறுகிறார்; இவர் எழுந்தருளி நின்ற பத்மம் ஐவிரலே இரண்டு தோரை உயரங்கொண்டது; இதனொடுங்கூடச் செய்த பீடம் 11 விரல் சமசதுரத்து ஐவிரலே ஆறு தோரை உயரமுடையது.

**இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன**

திருக்கைக்காறை ஒன்று, பொன்கழஞ்சே ஆறு மஞ்சாடியும் மூன்றுமா ஆக இரண்டினுல் பொன் $2\frac{1}{2}$ கழஞ்சு 2 மஞ்சாடி ஆறுமா. திருக்குதம்பை ஒன்று, பொன் எட்டு மஞ்சாடி ஏழு மாவாக இரண்டினுல் பொன் $\frac{3}{4}$ கழஞ்சு இரண்டு மஞ்சாடி நான்கு மா. (விலை மதிப்பு 1378 ரூபாய்)

**6. தேவாரதேவர் திருமேனி**[1]

இப்பிரதிமம் பெரிய பெருமாள் திருமுன் வைக்கப் பட்டிருத்தல் கூடும். "**பெரிய பெருமாளுக்குத் தேவார தேவராக எழுந்தருள்வித்த தேவர்**"[2] என்று குறிக்கப் பெறு

---

1. கடவுள் வடிவம் "**திருமேனி**" என்றும், மக்கள் வடிவம் "பிரதிமம்" என்றும் வழங்கப்பெறும்.
2. 'தேவார தேவராக' எழுந்தருள்வித்த என்னும் தொடரில் உள்ள 'தேவாரம்' என்னும் சொல்லின் பொருள் ஆராய்தற்குரியது.

தேவாரம் என்றசொல் சமயகுரவருள் முதல் மூவரான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் அருளிச் செய்த திருப்பதியங்களை முதல் ஏழு திருமுறைகளைக் குறிப்பிடும் சொல்லாகும். எனினும் இச்சொல் இப் பொருளில் முற்காலச் சாசனங்களில் வழங்கப் பெறவில்லை.

'தேவாரம்' என்ற சொல்லின் பொருள்களைச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் லெக்ஸிகன்

**தேவாரம்** 1. **பூசனை** (Worship)

உயர்தவ மூவாயிரவர்கள் தாவாமறையொடு தேவாரங் கைப்பற்றிய பணி முற்ற—கோயிற்புராணம். திருவிழா 27.

2. Deity Worshipped Privately in A house திருவாராதனக் கடவுள்
உம்முடைய தேவாரமோ—ஈடு. 6, 8, 10.

3. சைவத் திருமுறை

என்று வகைப்படுத்தும்.

**'தேவார தேவர்'**—என்பதற்கு,

Idols and other objects worshipped by an individual in private. ஆன்மார்த்த பூசனைக்குரிய மூர்த்தம்

என்று பொருள் கூறும். தேவாரமோதுதல், 'திருப்பதியம் விண்ணப்பித்தல்' எனவும், 'திருப்பதியம் பாடுதல்' எனவும் முற்பட்ட சாசனங்களில் கூறப்படுதலும்,

'தேவாரத்துக்குத் திருப்பதியம் விண்ணப்பஞ்செய்ய' என்று அமைந்துள்ள சாசனத் தொடரும் 'தேவாரம் - வழிபாடு' என்னும் பொருள் பயத்தலைக் காட்டும்.

தேவாரம் என்ற சொல்லின் பொருள் என்னும் தலைப்பில் சதாசிவபண்டாரத்தார் 'கல்வெட்டுக்களும் இலக்கியங்களும்' என்னும் நூலில் எழுதியுள்ளமை இங்கு அறிதற்பாலது.

முதல் ராஜராஜசோழன் சந்திரசேகரர் திருமேனியினைத் தன் இஷ்ட தெய்வமாக ஆன்மார்த்தமாக வழிபட்டமை இதனால் அறியப்பெறும்.

தலின் இராஜராஜன் தேவாரம் ஓதுங்கால் ஒரு விக்கிரகத்தை எதிரில் எழுந்தருளு வித்து ஓதுவது பழக்கம்போலும் என்ற செய்தியை அறிகிறோம். இத்திருமேனி 'சந்திரசேகரர்' எனப் பெறுவார். இவர் ஐவிரலே இரண்டு தோரை உயரத்து நான்கு திருக்கையுடையவர்; இத்திருமேனி பித்தளையால் ஆயது; இவரோடுங்கூடச் செய்த பத்மம் 1½ விரல் உயரமுடையது; பீடம் இருவிரலே நாலு தோரை சமசதுரத்து ஒரு விரலுயரமுடையது, ஒரு விரல் சுற்றில் கனமாகச் செம்பால் செய்த பிரபை ஒன்றும் இத்திருமேனியைக் கவித்து இருந்தது.

7. ஒலோகமாதேவியார் பிரதிமம்

இருபத்திருவிரலே இரண்டு தோரை உயரத்து இரண்டு திருக்கை யுடையராகக் கனமாக எழுந்தருளுவிக்கப்பெற்றது; இவர் எழுந்தருளி நின்ற பத்மம் ஐவிரல் உயர முடையது; இதனொடுங்கூடச் செய்த பீடம், ஒன்பதிற்று விரல் சமசதுரத்து ஐவிரலே இரண்டு தோரை உயரமுடையது.

இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

திருக்குதம்பை ஒன்று, பொன் ஏழு மஞ்சாடியும் குன்றியாக இரண்டினால் பொன் முக்கால் கழஞ்சு. திருக்கைக்காறை ஒன்று, பொன் கழஞ்சே இரண்டு மஞ்சாடியும் மூன்றுமா. திருக்கைக்காறை ஒன்று, பொன் கழஞ்சே எட்டுமா.

தஞ்சைப் பெரிய கோயிலில் இக்காலத்தில் உள்ள இராஜராஜன் பிரதிமம் பொய்கைநாடு கிழவனால் எழுந்தருள்விக்கப்பட்டதன்றென்பது கலையியல் ஆய்வாளர் குறிப்பாகும். இவ்விக்ரஹ பீடத்தில் உள்ள எழுத்துக்களும் பிற்கால எழுத்திய லமைதியில் அமைவனவே ஆகும்.

முதல் ராஜராஜசோழனுக்குப் பொய்கைநாடு கிழவன் எழுந்தருள்வித்த பிரதிம மும் அவனுடைய பட்டத்தரசியான ஒலோகமாதேவியார் பிரதிமமும் கௌதம சாராபாய் அருங்காட்சியகத்தில் உள்ள அரசன் அரசியர் பிரதிமங்களாகும் என்று திரு. சிவராமமூர்த்தி தெளிவாக விளக்கியுள்ளார்.

கலையியல் அமைதியால் முதல் ராஜராஜன் காலத்தனவாய இச் செப்புப் பிரதிமங்கள் பொய்கைநாடு கிழவன் கல்வெட்டில் கண்ட அளவைகட்கேற்ப அமைந் துள்ளமையையும் அறிஞர் அறிதிற்கண்டு கூறுவர்.

ஆமதாபாதில் உள்ள கௌதம சாராபாய் அருங்காட்சியகத்தில் இருக்கும் இப் பிரதிமங்களே முதல் ராஜராஜன் ஒலோகமாதேவியார் ப்ரதிமங்கள் கண்டாரைப் பிணிக்கும் கலை எழிற் செல்வங்களாகும்.

விளக்குகளை அளித்தமை

மேற்குறித்த ஆறு பிரதிமங்களும் ஒரு திருமேனியும் இராஜராஜசோழனது 29-ஆம் ஆட்சியாண்டில் எழுந்தருளுவிக்கப்பெற்றன. அடுத்த ஆண்டில் அதாவது (இராசேந்திரனின் 3-ஆவது ஆட்சியாண்டு எனக் குறிக்கப்பெற்ற) இராசேந்திரன் I பட்டத்துக்கு வந்த ஆண்டில் பொய்கைநாடு கிழவன் தான் எழுந்தருளுவித்த நம்பி யாரூரனுக்கும், திருஞானசம்பந்தருக்கும், திருநாவுக்கரசருக்கும் 41½ பலம் நிறை யுள்ள இருப்பு நாராசத்தோடு கூடிய தரா[1]நிலை விளக்கு ஒன்றும். பெரிய பெருமானுக்கு[2] 120 பலம் நிறையுள்ள இருப்பு நாராசத்தோடு கூடிய தராநிலைவிளக்கு ஒன்றும்,

1. தரா—எட்டுப் பாகம் செம்பும், ஐந்து பாகம் காரீயமும் கலந்த உலோகம்.
2. பெரிய பெருமாள்—இராஜராஜன் I

4 பலம் எடையுள்ள வெண்கல மடல் ஒன்றும் அளித்துள்ளான்.[1] வெண்கல மடல் இப் பிரதிமங்களை வணங்க வருவார்க்குத் திருநீறு அளித்தற்பொருட்டுக் கொடுக்கப் பட்டது போலும்!

### சிறுத்தொண்டர் மெய்ப்பொருளார் வரலாறுகளைப் போற்றியமை

பொய்கைநாடு கிழவன், செயற்கருஞ் செயல்கள் செய்த சிறுத்தொண்டர், மெய்ப்பொருள் நாயனார் முதலியவர்களுக்குத் தஞ்சைப் பெரிய கோயிலில் படிமங்களை எழுந்தருளுவித்தான் என்று இரண்டு கல்லெழுத்துக்களினின்று அறிகிறோம்.

### 8. சிறுத்தொண்டர்[2]

சிறுத்தொண்டர் திருச்செங்காட்டங்குடி என்னும் ஊரினர்; பரஞ்சோதியார் எனும் இயற்பெயரினர்; இவர் பல்லவ அரசனுக்குத்[3] தானைத் தலைவராய் அமர்ந்து வாதாபி வரையிலும் சென்று வாதாபியை அழித்துப் பல பொருள்களையும் கவர்ந்து அரசன் முன் கொணர்ந்தார்.[4] அரசன் இவரது சிவபக்தியை அறிந்து இவர்க்கு ஓய்வு அளித்தான். இவர் திருச்செங்காட்டங்குடியில் இருந்து அடியார்களுக்குத் திருவமுது அளித்துவரும் தொண்டில் ஈடுபட்டிருந்தார். இவரது வாழ்க்கைத் துணைவியார் திருவெண்காட்டுநங்கை எனப் பெறுவர். ஒரு நாள் இவரது அன்னதானச் சிறப்பைச் சோதிக்கத் திருவுளங்கொண்ட சிவபெருமான் பைரவக்கோலம் தாங்கி வந்தார்; அடியாரை நோக்கி ஆறு திங்களுக்கு ஒரு முறையே உண்பதாகவும் பிள்ளைக்கறி இடுவதாயின் உண்பதாகவும் கூறினர். "தொண்டானர்க்கு எந்நாளும் சோறளிக்கும் திருத்தொண்டர்" தன் மனைவியோடு உசாவினர்; ஒரு மகவாகிய சீராளரைச் சமைத்து அடியார்க்கு உணவளிக்க உறுதிகொண்டார்; வாளால் மகவரிந்து ஊட்டினர்; பைரவராக வந்த இறைவனும் காட்சியளித்தார்.

இவ்வரலாற்றில் பங்குபெறும் சிறுத்தொண்டர், திருவெண்காட்டு நங்கை சீராளதேவர், பைரவமூர்த்தி, காட்சி கொடுத்த இறைவர் ஆகிய ஐவருக்கும் பிரதிமங் களும், திருமேனியும் பொய்கைநாடு கிழவன் எழுந்தருளுவித்தான்; விளக்கம் வருமாறு:—

### 1. க்ஷேத்திரபாலதேவர்

பாதாதிகேசாந்தம் முக்காலே அரைக்கால் முழ உயரத்து எட்டுத்திருக்கைகளை யுடையவர்; இவர் எழுந்தருளி நின்ற பீடம் 9 விரல் சமசதுரத்துப் பத்மத்தொடும் கூடியது.

#### இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

திரள்மணிவடம் ஒன்று, பொன்கால் கழஞ்சு; சுருக்கின வீரபட்டம் ஒன்று, பொன் ஏழு மஞ்சாடி: திருக்குதம்பைத் தகடு இரண்டு, பொன் மூன்று மஞ்சாடி.

---

1. S.I.I. Vol II, Part II, No. 41.
2. S.I.I. Vol II, No. 43.
3. முதல் நரசிம்மவர்மன்.
4. "மன்னவர்க்குத் தண்டுபோய்" என்ற பெரிய புராணம்—சிறுத்தொண்டர் புராணம் செ. 6 காண்க.

இந்த க்ஷேத்திரபாலதேவரே சிறுத்தொண்டருக்குக் காட்சி கொடுத்த தேவராக எழுந்தருளுவிக்கப்பெற்றார் எனக்கோடல் பொருந்தும்.

2. பைரவமூர்த்திகள் திருமேனி

பதினெண் விரல் உயரத்து இரண்டு திருக்கையுடையராய் ஆடுகிறாராக எழுந்தருளுவிக்கப்பெற்றது; இவர் எழுந்தருளி நின்ற பீடம் ஒன்பதிற்று விரல் உயரத்து எண்விரலகலத்துப் பத்மத்தொடும் கூடியது.

இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

திரள்மணிவடம் ஒன்று, பொன் 4 மஞ்சாடி; முப்பத்து மூன்று முத்துக்கள் கோத்த முத்துவடம் ஒன்று, நிறை அரைக் கழஞ்சே 4 மஞ்சாடியும் குன்றி; விலை $\frac{1}{4}$ காசு. 37 முத்துக்கள் கோத்த முத்துவடம் ஒன்று, நிறை எட்டு மஞ்சாடி; விலை $\frac{1}{4}$ காசு.

3. சிறுத்தொண்ட நம்பி

பாதாதிகேசாந்தம் 17 விரல் உயரத்து இரண்டு கையுடையவர்.

இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

திரள்மணிவடம் ஒன்று, பொன் மூன்று மஞ்சாடியும் குன்றி; ருத்ராக்ஷக்காறை ருத்ராக்ஷம் நீக்கிப் பொன் அரைக் கழஞ்சே மஞ்சாடி.

4. திருவெண்காட்டு நங்கை

பாதாதி கேசாந்தம் 15 விரல் உயரத்து இரண்டு கை உடையவர்.

இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

பட்டைக்காறையிற் கோத்த தாலி உட்படப் பொன் ஒன்பது மஞ்சாடியும் குன்றி.

5. சீராள தேவர்

பாதாதி கேசாந்தம் 12 விரல் உயரத்து இரண்டு கையுடையவர்.

இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தன

சுருக்கின வீரபட்டம் ஒன்று, பொன் நான்கு மஞ்சாடி; திருக்குதம்பைத் தகடு இரண்டு, பொன் மஞ்சாடியும் குன்றி; பட்டைக்காறையும் சூலமும், பொன் அரைக் கழஞ்சே நாலு மஞ்சாடியும் குன்றி.

பிரதிமங்கள் மூவரும் நின்ற பீடம் : 23 விரல் நீளத்து ஏழு விரல் அகலத்து எண் விரல் உயரத்துப் பத்மத்தொடும் கூடியது.

இவ்வைவருக்கும் திருமேனிகளும் பிரதிமங்களும் எழுந்தருளுவித்ததை நோக்கின் "சிறுத்தொண்டர் திருநாள் தஞ்சை இராஜராஜேச்சரத்தில் நிகழ்த்தவேண்டும்" என்று பொய்கைநாடு கிழவன் கருதினன்போலும் என்று நினைக்க இடம் தருகிறது.

9. மெய்ப்பொருள் நாயனார்[1]

மெய்ப்பொருள் நாயனாருடைய படிவத்தைப் பொய்கைநாடு கிழவன் எழுந்தருளு வித்திருக்கிறான். இந்நாயனாரது படிவத்தை வைத்த செய்தியைக் கூறும் கல்வெட்டில் இவர் பெயரைக் கூறாமல் "தத்தா நமரே காண்" என்ற மிலாடுடையயார் படிவம் என்று கூறியுள்ளமையை நோக்கப், பொய்கைநாடு கிழவன் நாயன்மார்களுடைய வரலாற்றில் ஈடுபாடு உடையவனாய் இருந்தான் என்பதும், நாயன்மார்களுடைய வரலாறுகளைக் கூர்ந்து அறிந்திருந்தான் என்பதும் அறியப்பெறும்.

நாயனாரை வஞ்சனையாகக் கொல்லவந்த முத்தநாதன், தான் எண்ணியதையே முடிக்கத் தத்தன் என்ற வாயிற் காவலன் முத்தநாதனைக் கொல்ல வாளோச்சினான் நாயனார் "தத்தா நமரே காண்" என்று கூறித் தத்தனை விலக்கினார். நாயனார் வாக்கில் முகிழ்த்த இச் சொற்றொடர், நம்பியாண்டார்நம்பி திருவந்தாதியில் தவழ்ந்து, கல்லெழுத்தில் பதிந்தவாற்றை அறிந்தால் சோழவரசர் ஆட்சியில் இருந்த தமிழரது சைவ சமயப்பற்றுத் தெற்றென விளங்கும்.

தத்தா நமரே காண்

பாதாதிகேசாந்தம் இருபதிற்று விரல் உயரத்து இரண்டு திருக்கையுடையராகச் செய்யப்பெற்றது, 'தத்தா நமரே காண்' என்ற மிலாடுடையார் படிவம். இவர் நின்ற பத்மத்தொடுங்கூடச் செய்த பீடம், பதிற்று விரல் நீளம் எண் விரல் அகலம் எண் விரல் உயரமுடையது.

இவர்க்குப் பொய்கைநாடு கிழவன் கொடுத்தது

ருத்ராக்ஷம் ஒன்றிற் கட்டின பொன் ஏழு மஞ்சாடி உட்பட ருத்ராக்ஷம் ஒன்று; நிறை அரைக் கழஞ்சே நாலு மஞ்சாடியும் குன்றி; விலை காசு ஒன்று.

2. மும்முடி சோழப் பிரமமாராயன்

முதல் இராஜராஜனின் பெரும் படைத் தலைவனாக இருந்தவன், 'நராக்கன் ஸ்ரீ கிருஷ்ணன் இராமன் ஆன மும்முடி சோழப் ப்ரும்ஹமாராயன்'. இவன் தஞ்சைக் கோயிலுக்காற்றிய பணிகளைக் காண்போம்.

வாழ்ந்த காலம் :

ஸ்ரீ கிருஷ்ணன் இராமனான மும்முடிசோழப் பிரமமாராயனைக் குறிப்பிடும் முதல் கல்வெட்டு, முதல் இராஜராஜனின் 24-ஆவது ஆண்டுக்கு (கி.பி. 1009க்கு) உரியது ஆகும். இவனை முதல் இராஜாதிராஜனின் 33 ஆவது ஆண்டுக்கு (கி.பி. 1041க்கு) உரிய கல்வெட்டும் குறிப்பிடுகிறது. இடையில் இருந்த இராஜேந்திரன் கல்வெட்டுக்களிலும் இவன் குறிப்பிடப் பெறுகிறான். ஆகவே இவன் கி.பி. 935க்கும் 1054க்கும் இடையில் ஆண்ட, இராஜராஜன் (985-1014), இராஜேந்திரன் (1012-1044), முதல் இராஜாதிராஜன் (1018-1054) என்னும் சோழ அரசர்கள் கால அரசியல் தலைவன் ஆவன்.

1. S.I.I. Vol II, Part II, No. 40. கா. ம. வேங்கடராமையா — 'இலக்கியக்கேணி' என்ற நூலுள் 'தத்தா நமரே காண்' என்ற கட்டுரை காண்க.

ஸ்ரீ கிருஷ்ணன் இராமன் ஆன மும்முடி சோழப் பிரமமாராயன், சோழ மண்டலத்து, உய்யக்கொண்டார் வளநாட்டு, வெண்ணுட்டு அமண்குடியாகிய கேரளாந்தகச் சதுர்வேதிமங்கலத்தைச் சேர்ந்தவன்.

சோழநாட்டில், அரிசில் ஆற்றுக்கும் காவிரி ஆற்றுக்கும் நடுவில் அமைந்த நிலபரப்பு உய்யக்கொண்டார் வளநாடு ஆகும். [1]இந்த வளநாட்டில் [2]இருந்த பல நாடுகளில் வெண்ணுடு[3] என்பதும் ஒன்று. வெண்ணுட்டில் நான்மறைவல்ல அந்தணர் ஆட்சி நிலவிய சிற்றூர்களில் அமண்குடியும் ஒன்று ஆகும். இவ்வூர் இராஜராஜனின் சிறப்புப் பெயர்களில் ஒன்ருகிய கேரளாந்தகன்[4] என்ற பெயரைத் தாங்கிய சதுர்வேதிமங்கலச் சிற்றூர் ஆகும்; அமண்குடி இந்நாளில் அம்மங்குடி என்று வழங்கப்படுகிறது.[5] இவ்வூர் ஆடுதுறைக்கு அருகில் உள்ள தென்னலக்குடி (திருநீலக்குடி)யில் இருந்து ஐந்துகல் தொலைவில் அமைந்துள்ளது.

இவன் அமண்குடியாகிய கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலத்து நராக்கன் ஸ்ரீ கிருஷ்ணன் இராமனுன மும்முடி சோழப் பிரமமாராயன் என்று குறிப்பிடப் பெறுகிருன். இதனுள், 'ஸ்ரீ கிருஷ்ணன் இராமன்' என்பது இயற்பெயர்; மும்முடி சோழப் பிரமமாராயன் என்பது இவனுக்கு வழங்கிய பட்டப் பெயர். (மும்முடி சோழன்–முதல் இராஜராஜன்) பிரமமாராயன் எனப் பட்டம் உற்றமையால் இவன் அந்தணன் என்பது புலனுகிறது, 'நராக்கண்' என்பது குடிப் பெயர்.[6]

முதல் இராசேந்திரசோழன் காலத்தில் இவன், ஸ்ரீகிருஷ்ணன் இராமனுன இராஜேந்திர சோழப் பிரமமாராயன் எனப் பெற்ருன்.[7] பெரிய லெய்டன் பட்டயங்

1. தஞ்சைப் பெருவுடையார் கோவில் கல்வெட்டுக்கள் பக்கம்–139.
2. வளநாடு மாவட்டத்துக்குச் சமமான நிலப்பரப்பு; நாடு தாலூகாவுக்குச் சமமான நிலப்பரப்பு.
3. ஆடுதுறைக்கு அருகில் உள்ள மருத்துவக்குடி இன்னம்பர் நாட்டு ஊர். இவ்வூருக்கு ஒருகல் தொலைவில் உள்ள நாட்டார் வாய்க்கால் என்னும் ஆற்ருல் பிரிக்கப் பெறுவது வெண்ணுடு. கோனேரிராசபுரம் என்னும் ஊர் இவ்வெண்ணுட்டூர். எனவே வடமட்டம் பகுதியை ஒட்டி அமைந்து இருந்தது இந்நாடு. தஞ்சை இராஜராஜன் கல்வெட்டுக்களின் மூலமாகத் திருநல்லம் (கோனேரி ராசபுரம்) மிழலை, வைகலாகிய வானவன் மஹாதேவிச் சதுர்வேதிமங்கலம் ஆகியவை இந்நாட்டூர்களாகத் தெரிகின்றன.
4. சேரர்களுக்கு எமன் என்பது இதன் பொருள்.
5. பிற்காலச் சோழர் சரித்திரம்; பகுதி I, பக்கம் 138, அடிக்குறிப்பு.
6. நராக்கண் he whose eye was bruised எனத் தென்னிந்திய சாஸனங்கள் தொகுதி II பக்கம் 165 அடிக்குறிப்பில் காணப்பெறுகிறது. புண்பட்ட அல்லது வடுப்பட்ட கண்களை உடையவன் என்பது இதன் பொருள். நராக்கண் என இவன் மகனும் குறிப்பிடப் பட்டுள்ளமையால் இது குடிப் பெயரே ஆகும்.
7. A. R. E. year 1912. P. II, Para. 23.

களில் முற்பகுதியில் 'மும்முடி சோழப் பிரமமாராயன்' என இரண்டு இடங்களிலும்[1] பிற்பகுதியில், 'இராசேந்திர சோழப் பிரமமாராயன்' என ஓரிடத்திலும்[2] கூறப்பெற்றுள்ளான்.[3] எனவே இராசேந்திரன் காலத்தில் மும்முடி சோழப் பிரமமாராயன், இராசேந்திரசோழ பிரமமாராயன் ஆனமை புலனாகும்.[4]

### அரசியல் அலுவல்கள்

மும்முடி சோழ பிரமமாராயன் இராஜராஜ சோழனுடைய உயர்நிலை அரசியல் அலுவலன் ஆவான். 'இராஜராஜ தேவர் பெருந்தரம்' என ஒரு கல்வெட்டு இவனைக் கூறும்.[5]

### சேனாதிபதி

இராஜராஜசோழன் பெரும் பிரிவுகள் பலவற்றை உடைய மிகப் பெரிய படையைக் கொண்டு இருந்தான். இராஜராஜன் காலத்திலும், இவன் மகன் இராசேந்திர சோழனுடைய காலத்திலும் இவன் சோழர்படையின் தலைவனாக இருந்தான்.

### திருமந்திர ஓலை நாயகம்

இராஜராஜசோழனின் 24 ஆவது ஆண்டுக் கல்வெட்டு ஒன்றும், பெரிய லெய்டன் பட்டயமும் இவன் 'திருமந்திர ஓலை நாயகம்' ஆக இருந்ததனைக் காட்டுகின்றன.

அரசன் இடுகின்ற ஆணைகளை ஓலைகளில் எழுதி உரிய இடங்களுக்கு அனுப்புவிக்கும் அதிகாரிகள் திருமந்திர ஓலை[4] எனப்படுவர். இவர்களுக்கு (அரசு ஆணை அனுப்பும் துறைக்குத்) தலைமை அதிகாரி, 'திருமந்திர ஓலை நாயகம்' எனப் பெறுவான்.

உக்கலில் இராஜராஜனின் வரலாற்றுச் சிறப்புமிக்க ஆணை ஒன்று கல்வெட்டாக உள்ளது. இராஜராஜ சோழனின் 24-ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 1009) 124 ஆம் நாளில் தஞ்சாவூர்ப் பெரிய செண்டு வாயில் சித்திர கூடத்துத் தெற்கில் கல்லூரியில் எழுந்தருளி இருந்து திருவாணை ஒன்று போக்கினான். இந்த ஆணையின் மூலமாகச் சோழ நாட்டிலும், சோழ நாட்டைச் சார்ந்த பிறநாடுகளிலும், தொண்டை நாட்டிலும், பாண்டி நாடாகிய இராஜராஜ வளநாட்டிலும் உள்ள பிரமதேய (பார்ப்பன) ஊர்களிலும், வைகாசன சமண (ஸ்ரமண) ஊர்களிலும் நிலம் உடையவர்கள், தன்னுடைய ஆட்சியின் 16-ஆம் ஆண்டுக்கும், 28-ஆம் ஆண்டுக்கும் (கி. பி. 1001-1008) இடையில் ஊர்ச்சபை விதித்த வரியையும் (ஊரிடு வரிப்பாடு), அரசுக்குச் செலுத்த வேண்டிய வரி (இறை)யையும் செலுத்தாமல், இரண்டாண்டு நிரம்பி, மூன்றாவது ஆண்டு தொடங்கி

1. வரிகள் 131: 168.
2. வரி 437.
3. Epigraphia Indica XXII No. 43.
4. S. I. I. Vol II p. 139 F. N.
5. S. I. I. Vol II Page. 162.

யிருக்குமானால், ஊர்ச் சபையார் நிலத்துக்கு உரியவனை வெளியேற்றி, நிலத்தை ஊர்ச் சபையார் நிலமாக்கி விற்றுக் கொள்ளவும், இதே உரிமையை இனி வரும் ஆண்டுகளில் பெறவும், உத்தரவு பிறப்பித்தான். இச் சிறப்பாணை.

“திருவாய்மொழிந்தருளியபடி திருமந்திரஓலை இராஜகேஸரி நல்லூர்க் கிழவன் எழுத்தினாலும், திருமந்திரஓலைநாயகன் மும்முடிசோழபிரமமாராயனும், மும்முடிசோழ போசனும் ஒப்பிட்டும் புகுந்த கேழ்விப்படி 24 ஆம் ஆண்டு நாள் 143னால் வரியிலிட்டது”

என்பது கல்வெட்டில் கண்டது.[1] இக்கல் வெட்டால் இராஜராஜன் பெரும் போர்களில் ஈடுபடாமல் இருந்த காலத்தில் இவன் திருமந்திர ஓலை நாயகமாக இருந்தமை அறியப்பெறும். பெரிய லெய்டன் பட்டயங்களும் இவனைத் திருமந்திர ஓலைநாயகமாகக் குறிக்கின்றன.



### குந்தவை விண்ணகர நிர்வாகி

இராஜராஜனின் தமக்கை ஆகிய ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் தாதாபுரம் (நல்லூர் நாட்டு இராசராசபுரம்) என்னும் ஊரில், குந்தவை விண்ணகர், இரவிகுல மாணிக்க ஈஸ்வரம், குந்தவை ஜினாலயம் என்ற மூன்று ஆலயங்களை எடுப்பித்தார்.[2] இவற்றுள் ஒன்றாகிய குந்தவை விண்ணகரம் என்னும் பெருமாள் கோயிலின் நிர்வாகப் பொறுப்பாளனாகச் சேனாபதி மும்முடிசோழப் பிரமமாராயன் இருந்தான். இச்செய்தி இராஜராஜனின் 25-ஆம் ஆண்டுக்கு உரிய தாதாபுரம் கல்வெட்டில் கண்டது.[3]

### தஞ்சைக் கோயிலில் திருச்சுற்றாலை எடுத்தமை

திருக்கோயிலின் நான்குபுறமும் திருமதிலை ஒட்டி அமையும் மாளிகைப் பகுதி திருச்சுற்று மாளிகை எனப்படும். தஞ்சாவூர்ப் பிரகதீஸ்வரர் கோயிலில் மதிலை ஒட்டித் திருச்சுற்று மாளிகைப்பகுதி அமைக்கப்பட்டுள்ளது. இத் திருச் சுற்று மாளிகையில்

“ஸ்வஸ்திஸ்ரீ ஏதத்-விஸ்வ ந்ருபஸ்ரேணி-மௌலிமாலோப லாளிதம் ஸாஸநம்-ராஜராஜஸ்யராஜ-கேஸரிவர்மண: உ-உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் திருவாய் மொழிந்தருள இத்திருச்சுற்று மாளிகை எடுப்பித்தான் சேனாதிபதி சோழமண்டலத்து உய்யக்கொண்டான் வளநாட்டு வெண்ணாட்டு அமண்குடியான கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலத்து ஸ்ரீ கிருஷ்ணன் இராமனான மும்முடி சோழப் பிரமமாராயன்” என்னும் கல்வெட்டுக் கிழக்குப் பிரகாரத்திலும், வடக்குப்பிரகாரத்திலும் ஆக மூன்று இடங்களில்[4] காணப்பெறுகிறது. மாவேந்தன் இராஜராஜன் இட்ட கட்டளைப்படி தஞ்சாவூர்ப் பெரியகோயில் திருச்சுற்றுமதிலும், மதில்மேல் அமைந்த நந்திகளும், திசைத் தெய்வங்களுக்கு அவ்வத் திசைகளில் அமைக்கப்பட்டுள்ள ஆலயங்களும், கேரளாந்தகன், இராஜராஜன் திருவாயில்களும் ஸ்ரீ கிருஷ்ணன் இராமனின் தெய்வக் கலைப்பணிகள் எனலாம்.

---

1. S.I.I. Vol. IIII Part. I Pages 14-15.
2. 8 of 1919.
3. 10 of 1918.
4. S.I.I. Vol. II, Part III Ins No. 33, 38, 45. இந்நூல் பின்னிணைப்புக் காண்க.



7

### எழுந்தருள்வித்த திருமேனி

ஸ்ரீகிருஷ்ணன் இராமன் தஞ்சைப் பெரிய கோயிலில் அர்த்த நாரீஸ்வரர் திருமேனியை எழுந்தருள்வித்தான்.[1] இத்திருமேனி| இராஜராஜனின் 29-ஆவது ஆண்டு வரை எழுந்தருள்விக்கப் பெற்ற திருமேனிகளில் ஒன்றாகும்.

இவன் எழுந்தருள் வித்த திருமேனி கலைச்சிறப்புடையது: உமையொரு பாகர், அர்த்த நாரீஸ்வரர் எனப்பெறுவர். வாமபாகம் உமைக்கும். வலது பாகம் சிவபெருமானுக்கும் உரியது.

அர்த்த நாரீஸ்வரர் திருமேனி இரண்டு கரங்கள் உடையதாகவோ, நான்கு கரங்கள் உடையதாகவோ மூன்று கரங்கள் உடையதாகவோ படைக்கப்பெறும். மூன்று கரங்கள் உடையதாக இருந்தால், சிவபெருமானுக்கு உரிய வலது பக்கத்தில் இரண்டு திருக்கரங்களும், உமாதேவிக்கு உரிய இடது பக்கத்தில் ஒரு திருக்கரமும் அமையும். இவன் எழுந்தருள்வித்த திருமேனி மூன்று திருக்கரங்களுடையது.

அர்த்த நாரீஸ்வரர் திருமேனி இரண்டு நிறங்களுடையது. ஆகமங்கள், வலப்புறம் சிவப்பு நிறமும் இடப்புறம் இளிப்பச்சை அல்லது கருநிறமும் உடையது எனக்கூறும்.[2] இத் திருமேனியின் வலப்புறம் செம்பின் நிறம் கொண்டது; இடப்புறம் செம்பின்மேல் பித்தளை பூசப்பெற்று நிறம் வேறுபடுத்திக் காட்டப்பெற்றது.

"பாதாதிகேசாந்தம் முக்காலே ஒருவிரல் உசரத்து ஈஸ்வரபாகம் இரண்டு ஸ்ரீஹஸ்தமும் உமாபாகம் ஒரு ஸ்ரீஹஸ்தமும் உமாபாகம் செம்பின்மேல் பித்தளை கொண்டு பூசிக் கனமாக எழுந்தருள்வித்த அர்த்த நாரீஸ்வரர் திருமேனி ஒன்று" என்பது கல்வெட்டுப் பகுதி. இத் திருமேனிக்கு, இரத்ன நியாசம்[3] செய்த பத்மம் ஒன்று கொடுத்தான்; இது $2\frac{1}{2}$ விரல் நீளம் உடையது. பீடம் ஒன்று தந்தான்; இது முக்கால் முழம் 2 விரல் 2 தோரை நீளம், $10\frac{1}{2}$ தோரை அகலம், 5 விரல் உயரம் உடையது. பிரபை ஒன்று தந்தான்; இது 2 விரல் கனமும் $2\frac{1}{2}$ முழச் சுற்றளவும் உடையது.

### இவர்க்குக் கொடுத்தன

மும்முடி சோழப் பிரமமாராயன் தான் எழுந்தருள்வித்த அர்த்த நாரீஸ்வரர் திருமேனிக்குப் பல அணிகலன்களைத் தந்தான்.

**ஸ்ரீ முடி:** ஒரு திருமுடி கொடுத்தான். இதனுள் ஒப்புமுத்து, குறுமுத்து, வட்டம், அனுவட்டம், ஒப்புமுத்து ஆக 121 முத்துக்கள் கோக்கப்பட்டு[4] இருந்தன; குறுமுத்துக்கள் ஏழும் பளிங்கு வயிரம் 11ம் கட்டப்பெற்று இருந்தன. இதன் முழு எடை 30 கழஞ்சு 3 மஞ்சாடி; விலை 50 காசு.

---

1. S.I.I. Vol. II, Pages 162-166.
2. Elements of Hindu Iconography—R. Gopinatha Rao Vol. II, Part I, Pages. 321-32.
3. திருமேனிகளை உரிய பீடத்தில் அமைக்கும்போது பல இரத்தினக் கற்களைப் பீடத்தில் இட்டுப் பின்னர்ப் பொருத்துதல்–இரதனநியாசம் செய்தல்; செப்பு உருவங்களுக்குப் பிரதிஷ்டை செய்வதாய் இச்செயல் அமையும் — திரு. இரா. நாகசாமி M.A. அவர்கள் - தமிழகக் கோயிற் கலைகள் பக்கம் 101
4. கட்டுதல், தடவிக் கட்டுதல் - பொதிந்து இறுக்கப்பட்டவை. இது கோக்கப் பட்டது.

**திருமாலை:** இவன் கொடுத்த ஒரு திருமாலையில் 10 குறுமுத்துக்களும், 26 பளிங்கு வயிரங்களும், 7 பொத்திக்களும் கட்டப்பெற்று இருந்தன; இது 6 கழஞ்சு 7 மஞ்சாடி நிறை; விலை 12 காசு.

**வீரப்பட்டம்:** வீரப்பட்டத்தில் குறுமுத்து முதலான பலவகை முத்துக்கள் 111 கோக்கப்பெற்று இருந்தன; பொன்னின் நெருஞ்சிப் பூச்செயல்[1] ஒன்று உட்பட இது 4 கழஞ்சு 3 மஞ்சாடி எடை; விலை 3 காசு.

**பாஹுவலயம்:** பாகுவலயம் ஒன்று தடவிக்கட்டிய 3 பளிங்குகளை உடையது; இதன் எடை 2 கழஞ்சு 8 மஞ்சாடி குன்றி; விலை 5 காசு. மற்றொன்று மூன்று பளிங்குகளை உடையது; 2 கழஞ்சு 2 மஞ்சாடி 1 குன்றி; எடை விலை 5 காசு.

**திருஉதரபந்தனம்:** இது தடவிக்கட்டின 3 பளிங்குகளையும் 2 பளிங்கு வயிரங்களையும் உடையது; $3\frac{1}{2}$ கழஞ்சு 1 மஞ்சாடி நிறை; விலை 7 காசு.

**திருப்பொற்பூ:** இவன் பொன்னால் ஆகிய 30 பூக்களைக் கொடுத்தான். எடையால் அறுவகைப்பட்ட இவற்றின் மொத்த எடை 119 கழஞ்சு, 6 மஞ்சாடி, 1 குன்றியாகும்.

**திருக்கைக்காறை:** இவன் அளித்தவை மூன்று; அவற்றுள் ஒன்று $1\frac{1}{2}$ கழஞ்சு 3 மஞ்சாடி 1 குன்றி எடையுடையது; மற்றொன்று $1\frac{1}{2}$ கழஞ்சு 2 மஞ்சாடி எடையினது. மூன்றாவது $1\frac{1}{2}$ கழஞ்சு 2 மஞ்சாடி எடையுடையது.

**திருவடிக்காறை:** ஒன்று $1\frac{3}{4}$ கழஞ்சு 4 மஞ்சாடி 1 குன்றி எடையுடையது; இரண்டாவது 2 கழஞ்சு 7 மஞ்சாடி 1 குன்றி எடையுடையது; பொன்னால் ஆகியது.

**திருப்பட்டிகை:** இத் திருப்பட்டிகை $1\frac{3}{4}$ கழஞ்சு 2 மஞ்சாடி எடை உடையது; பொன்னால் ஆகியது.

இவற்றின் மொத்தவிலைமதிப்புச் சுமார் 669375 ரூபாய்களாகும்.

## 3. மும்முடி சோழபோசன்

'ஈராயிரவன் பல்லவயனான மும்முடி சோழபோசன்' என்பான் முதல் இராஜராஜன் இவன் மகன் இராசேந்திரன் ஆகியோர் காலத்தில் இருந்த அரசியல் தலைவருள் குறிப்பிடத்தக்க ஒருவன். இவன் 'சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் இருந்த பாம்புணிக்கூற்றத்தில் இருந்த அரைசூர் என்னும் ஊரின் தலைவன். ஈராயிரவன் பல்லவயன் என்பது இவன் பெயர். 'மும்முடி சோழபோசன்' என்பது இராஜராஜன் காலத்தில் வழங்கிய பட்டப்பெயர். இப் பெயர் இராசேந்திரன் காலத்தில் 'உத்தம சோழப் பல்லவரையன்' என மாறிற்று. இத் தலைவன் இராஜராஜனின் லெய்டன் செப்பேடுகளில் மூன்றிடங்களில் குறிக்கப்பெறுகிறான். ஆனைமங்கலச் செப்பேட்டிலும் உக்கல் கல்வெட்டிலும் இவன் பெயர் காணப்படுகிறது.

ஈராயிரவன் பல்லவயனான மும்முடி சோழபோசன் தஞ்சைப் பெரிய கோயிலில் அறுபான்மும்மை நாயன்மாருள் ஒருவரான சண்டிகேஸ்வரருக்குச் செப்புத் திருமேனி எழுந்தருள்வித்தமையை ஒரு கல்வெட்டு[2] விவரிக்கிறது. இத் திருமேனி

1. நெருஞ்சிப் பூவினைப் போலப் பொன்னால் செய்யப்பெற்றது. தாமரைப் பூச்செயல் திருப்பொற் பூவும் தஞ்சைக் கல்வெட்டொன்றில் கண்டது.
2. S.I.I. II, எண். 55.

ஒரு முழம் ஆறு விரல் ஆறு தோரை உயரமும் இரண்டு திருக்கரங்களும் உடையது. இத்திருமேனி, 'பதின்மூவிரல் நீளத்தில் இரண்டு விரல் சுற்றில் கனமாகச் செய்யப் பட்ட மழு' வினைப்பிடித்து நின்றதாக அமைக்கப்பட்டது. இத் திருமேனிக்குச் சார்த்தி யருள இவன் களாவம் ஒன்றும் ஏகவல்லி ஒன்றும் வடம் ஒன்றும் தந்துள்ளான்.

மும்முடி சோழபோசன் திருவிளக்குக்கு நன்கொடைகள் தந்திருந்தமையைச் சாசனங்கள் குறிக்கின்றன. இவன் எழுந்தருள்வித்த இத்திருமேனிக்குத் திருஅமுதுபடி உள்ளிட்ட நிவந்தங்கட்கு முதற்பொருள் வைக்கப்பட்டிருந்த செய்தியை இராஜேந் திரன் காலத்திய சாசனம் ஒன்று[1] உணர்த்துகிறது.

## 4. கோவன் அண்ணுமலையான கேரளாந்தக விழுப்பரையன் கொடுத்தன

இவன் ராஜராஜனின் 29-ஆம் ஆட்சியாண்டில் தஞ்சைப் பெரியகோவிலில் ஆற்றிய அறப்பணிகளை இரண்டு கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. இவன் இயற்பெயர் 'கோவன் அண்ணுமலை'; பட்டப்பெயர் 'கேரளாந்தக விழுப்பரையன்'; இவன் இராஜ ராஜனுடைய அரசியல் அலுவலருள் 'சிறுதனத்துப் பெருந்தரம்' என்னும் நிலையினன்.

இவன் தஞ்சைப் பெரியகோயிலில் 'பிருங்கிசர்' செப்புத்திருமேனி கண்டான். 'பிருங்கீசரின் சிவ வழிபாடும், இவர்க்குச் சிவனருளால்மூன்றும் பாதம் கிட்டியமையும்' கந்தபுராணம் முதலான நூல்களுட் கண்டது. இவன் எழுந்தருள்வித்த 'பிருங்கிசர் திருமேனி' ஒருமுழம் இரண்டரை விரலுயரமுடையது. மூன்று ஸ்ரீ பாதமும் மூன்று ஸ்ரீ ஹஸ்தங்களும் உடையது. கனமாகச் செய்யப்பெற்றது. இவன் இவர்க்கு முத்துக்களாலாய திரிசரம் ஒன்றும் உருத்திராக்கம் உடைய கண்டநாண் ஒன்றும் தந்தான். மூன்று திருக்கைக்காறைகளும், மூன்று திருவடிக்காறைகளும், மூன்று திருவடிக்காறைகளும் பொன்னுற் செய்தளித்தான்.[2] இப்பொன்னணிகளின் மொத்த எடை சுமார் 15 கிராம்கள் (6 கழஞ்சு 14 மஞ்சாடி 1 குன்றி) ஆகும் விலை 2658 ரூ.

இவனே இக்கோயிலில் சூர்யதேவர் திருமேனியும் செய்தளித்தான். இவர் திருமேனி ஒருமுழம் இரண்டு ஸ்ரீ ஹஸ்தமும் உடையது. பத்மமும் பீடமும் உடைய இதற்கு இவன் பல அணிகளை அளித்தான். பாசமாலை, கொட்டு, ஸ்ரீ சந்தம், களாவம் என்னும் அணிகளைத் தந்தான்; இவை முத்துக்களாலும் மணிகளாலுமாகியவை. மொத்தம் 41½ காசு மதிப்புடையன. (விலை மதிப்பு ரு. 8082) இவனே இதற்குப் பொன் னுலாகிய திருக்கம்பி திருகைக்காறை ஒவ்வொன்று தந்தான்[3].

## 5. இராஜராஜ மூவேந்த வேளார்

இராஜராஜன் மற்றும் இராசேந்திர சோழன் காலத்திய அரசியல் தலைவருள் ஒருவன் 'உதைய திவாகரன் தில்லையாளியாரான இராஜராஜ மூவேந்த வேளாராவன்.' லெய்டன் செப்பேடுகளில் (வரி 96) குறிக்கப்பெறும் இவன் தஞ்சைப் பெரிய கோயி லில் 'கிராதார்ஜுன தேவர்' திருமேனி எழுந்தருள் வித்திருந்த செய்தியை இராசேந்திரன்

1. S.I.I. II, எண். 11.
2. S.I.I. Vol: II, எண். 48.
3. S.I I. II, எண். 56.

காலத்துக் கல்வெட்டுக்கள் இரண்டு கூறும்.[1] இவற்றுள் ஒன்று 'இவன் இத்திருமேனிக்குத் திருவமுது முதலானவற்றுக்காகப் பதின்மூன்று காசுகள் தந்தமை' கூறுகிறது. கிராதார்ஜுன மூர்த்தி திருக்கோலம் 'சிவபெருமானின் லீலா மூர்த்தித் திருக்கோலங்கள் இருபத்தைந்தில்' ஒன்றென்பது காரணாகமத்துட் கண்டது. சிவபெருமான் 'கிராத' வடிவினராக வந்து அருச்சுனனோடு போரிட்டமையும் பாசுபதாஸ்த்ரம் தந்தமையும் புராணங்கள் புகலும் உண்மை. இத்திருவுருவம் இவ்வடிவை ஒட்டியே அமைக்கப்பட்டிருக்கும் எனினும் இத்திருமேனியின் அமைப்பினை விளக்கும் கல்வெட்டுக் குறிப்புக்கள் கிடைத்தில.

### 6. இராஜராஜக் கத்தியரையன்

இவன் இராஜராஜ சோழனுடைய பெருந்தனத்து அரசியல் அலுவலருள் ஒருவனாவான். இவன் கண்டையன் என்னும் பெயரினன். இராஜராஜக் கத்தியரையன் என்பது சிறப்புப் பெயர். இவன் 'கத்தியரையன்' என்பவனின் மகன். இக்கண்டையனை இராஜராஜக் கத்தியரையன் தஞ்சை ராஜராஜேச்வரத்தில் இராஜராஜனின் 29-ஆமாண்டில் 'காளாபிடாரி' திருமேனி ஒன்றினை எழுந்தருள்வித்துள்ளான். இது 'ஆஸனத்துக்குமேல் கேஸம் வரை' செல்லப் பதினறுவிரல் உயரமும் நான்கு திருக்கரங்களும் உடையதாகப் பீடம் பிரபை முதலானவற்றுடன் கனமாக எழுந்தருள்விக்கப்பெற்றதாகும் என்பது கல்வெட்டில் கண்டது.[2]

### 7. பராந்தகப் பல்லவரையன்

இராஜராஜ சோழனின் பெருந்தரத்து அரசியல் அலுவலருள் ஒருவனாகிய 'வேளானுதித்தனை பிராந்தகப் பல்லவரையன்' என்பான் இராஜராஜனின் 29-ஆமாண்டில் நான்கு திருமேனிகள் எழுந்தருள்வித்துள்ளான்.[3] 'ஆஸனம் முதல் கேஸம் வரை' 14½ விரல் உயரமும் நாற்கரங்களும் கொண்டு சுகாசன நிலையில் உமாசகிதர்; 'ஆசனத்தினின்றும் கேஸம் லரை' 11½ விரல் உயரத்து எழுந்தருளி இருந்தாராக இவர் நம்பிராட்டியார் உமாபரமேஸ்வரியார்; பாதாதி கேஸாந்தம் 5½ விரல் உயரமும் இருதிருக்கரமும் உடையராய் நின்றாராகச் சுப்பிரமணிய தேவர்; ஐவிரல் உயரமும் நாலுஸ்ரீ ஹஸ்தமும் உடையராகக் கணபதியார் திருமேனிகளை இவன் எழுந்தருள்வித்தமை இக் கல்வெட்டில் கண்ட செய்தியாம்.

### 8. வடுகன் எழுந்தருள்வித்த திருமேனி

'வடுகன்' என்பவன் இராஜராஜனின் 29-ஆமாண்டில் தஞ்சைப் பெரிய கோயிலில் 'துர்க்காபரமேச்வரி' திருமேனியினை எழுந்தருள்வித்தான்.[4] இவன் சோழமண்டலத்திலிருந்த நித்த விநோத வளநாட்டில் இருந்த நல்லூர் நாட்டூர்களில் ஒன்றான 'பஞ்சவன்மாதேவி சதுர்வேதிமங்கலத்தினன். இவன் செய்வித்த இத் திருமேனி முக்கால்முழம் நான்கு விரல் ஆறு தோரை உயரமும் நான்கு திருக்கரங்களும் உடையதாகக் கனமாகச் செய்விக்கப்பட்டது, இதற்கு இவன் பத்மமும் பீடமும்

1. S.I.I. Vol. II, No. 9 and 10-
2. S. I. I. II எண். 81.
3. S. I. I. II எண். 32.
4. S.I.I. II, எண். 79.

செய்வித்திருந்தான். தான் எழுந்தருள்வித்த துர்க்கா பரமேஸ்வரியார்க்கு இவன் பல அணிகலன்களை அளித்துள்ளான். 'வடுகவாளி' இரண்டும் 'முத்துமாத்திரை' மூன்றும் 'பஞ்சசரி' ஒன்றும் 'களாவம்' ஒன்றும் 'ஏகாவல்லி' ஒன்றும் 'மாணிக்கத்தாலி' ஒன்றும் 'முத்துச் சூடகம்' நான்கும் 'திருக்கால் வடம்' இரண்டும் தந்தான். இவை முத்து முதலான மணிகளாலாகியவை; இவற்றின் மொத்த விலை மதிப்பு 27 காசுகளாம். இவனே பொன்னாலான திருக்கம்பி, தாலிவடம், திருப்பட்டிகை, திருக்காற்காறை ஈச்சொப்பிகை இரண்டு ஆகியவற்றை இத் திருமேனிக்களித்தான். இப்பொன்னணிகளின் மொத்த எடை 83 கிராம்கள் (38 கழஞ்சு 1 மஞ்சாடி) ஆகும். (விலை 14940 ரூ.)

### 9. இடையன் நள்ளாறன் எழுந்தருள்வித்த திருவுரு

அருண்மொழிதேவ வளநாட்டு மங்கலநாட்டு மங்கலத்தைச்சேர்ந்த 'இடையன் நள்ளாறன்' என்பவன் 'வில்லாளிக்குக் குருக்களாக' ஒரு பிரதிமம் எழுந்தருள்வித்தான் என்று இராஜராஜன் கல்வெட்டுக் கூறுகிறது. மனிதர்க்கு எடுப்பிக்கும் செப்பு விக்கிரஹங்களே பிரதிமம் எனப்பெறும். இது எவருக்கு எழுந்தருள்விக்கப்பட்டது என்பது முதலான விவரங்கள் தெரியவில்லை, இப் பிரதிமத்துக்குத் திருவிளக்கு எரிப்பிப்பதற்காகக் 'குருக்கள் ஈஸான சிவபண்டிதர்' என்பார் 32 காசுகள் தந்திருந்ததனை அக்கல்வெட்டுக் குறிக்கிறது.

### பரிவார ஆலயங்கள்

முதல் ராஜராஜசோழன் காலத்தில் தஞ்சைப் பெரிய கோயிலில் இருந்த பரிவார ஆலயங்கள் பற்றிக் கல்வெட்டுக்களில் காணப்பெறும் குறிப்புக்கள் சிலவற்றைக் காண்போம்.

### 1. ஆலயத்துப்பிள்ளையார் கணபதியார்

தஞ்சைப் பெரிய கோவிலில் மேலைத் திருச்சுற்றுமாளிகையில் 'பரிவாராலயத்துப் பிள்ளையார் கணபதியார்' சுற்றாலயம் இருந்தது. இப்பிள்ளையாரை எழுந்தருள்வித்த சோழமாமன்னன் இராஜராஜன் இதற்குப் பொன்னாலான அணிகலன்களைக் கொடுத்ததுடன் வாழைப்பழத் திருவமுது செய்தருளச் செய்துள்ள ஏற்பாடுகளை இந்நூலில் உள்ள கல்வெட்டு ஒன்றில் விரிவாகக் காணலாம்.

கல்வெட்டுக்களில் இப்பிள்ளையார் 'பரிவாரலாயத்துப் பிள்ளையார் கணபதியார்' எனவும் 'ஆலயத்துப் பிள்ளையார் கணபதியார்' எனவும் கூறப்பெறுவர். இவர்க்களிக்கப்பட்ட கொடைகளுட் சில சாசனங்களுட் கூறப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு:

முதல் இராஜராஜன் காலத்தில் அரவணையானான மாலரி கேஸவன்' என்பான் 'பரிவாராலயத்துப் பிள்ளையார் கணபதியாருக்கு இலங்கை நாட்டு அமைப்பு முறை (ஈழப்பரிசு Ceylon Fashion)ப்படி எண்சதுரமாக ஒரு பித்தளைப் படிக்கம் செய்து தந்துள்ளான். இது அறுபத்தொன்பது பலம் நிறையுடையது, மூன்றுகாசு விலையினது. இவன் தஞ்சைப் பெருங்கோயிலில் 'ஸ்ரீ கார்யக் கண்காணிநாயகம்' ஆக இருந்தவன் என்பதும் பாண்டி நாடான ராஜராஜ மண்டலத்தில் திருக் கானப்பேர் கூற்றத் திருந்த கொடும்பாளூரின் தலைவன் என்பதும் அக்கல்வெட்டிற் கண்டது. [2]

1. S.I.I. Vol. II, No. 95
2. S.I.I. Vol. II, No. 36.

க்ஷத்ரிய சிகாமணி வளநாட்டுச் செற்றூர்க் கூற்றத்து மருதத்தூரில் இருந்த மருதத்தூருடையான் மதுராந்தகன் பராந்தகன் என்பான் இராஜராஜன் காலத்தில் பதினொரு முத்துக்கள் கோக்கப் பட்ட நான்கு கழஞ்சு எட்டு மஞ்சாடி குன்றி எடையுடைய ஒருகாசு விலை மதிப்புடைய நெற்றிச்சுட்டி ஒன்றும் எட்டரை கழஞ்சு இரண்டு மஞ்சாடி எடை மதிப்புடைய பொன்னாலான திருப்பட்டம் ஒன்றும் ஆறரை கழஞ்சு எடையுள்ள பொற்பூ இரண்டும் ஆலயத்துப் பிள்ளையாருக்கு அளித்துள்ளான் இவனே இராஜேந்திரன் காலத்தில் பதின்மூன்று கழஞ்செடையுடைய பொன்னாலான பூணூல் ஒன்று கொடுத்துள்ளான். இவை சுமார் 71 கிராம் எடை யுடையனவாகும்.[1] (விலை மதிப்பு ரூ. 12780)

இராஜராஜன் காலத்தில் பரிவார ஆலயத்துப் பிள்ளையார்க்குக் 'காஞ்சன் கொண்டையன்' என்பான் இருபத்தொன்பது பலம் எடையுடைய வெண்கலத் தளிகை ஒன்று தந்துள்ளான்.[2] இவன் ஸ்ரீ ராஜராஜ தேவர் பணிமகன்; புரவுவரித்திணைக்களம் (நிலவரிக் கழகம்) என்னும் அலுவலகத்தில் 'வரிப் பொத்தக நாயக'மாக இருந்தவன். பாண்டியகுலாசனி வளநாட்டுப் புறக்கிளியூர் நாட்டுக் காமதமங்கலமுடையான் ஆவான்.

தஞ்சாவூர்ப் புறம்படியில் இருந்த மளிகை வியாபாரியருள் ஒருவனான நாராயணன் காமப்பைச் செட்டி என்பவன் சங்கிட்டு அடைத்த கற்கண்டு ஒன்றும் 'திரள் மணிவடம்' ஒன்றும் அளித்துள்ளான்.[3]

### 3. சண்டீசர் ஆலயம்

'சண்டிகேஸ்வரர் ஆலயம்' முதல் ராஜராஜசோழன் எடுப்பித்த பரிவார ஆலயங்களுள் ஒன்றாகும். இவ்வாலயத்தின் மேல் வைக்கச் செப்புக்குடங்கள் அளிக்கப்பெற்ற செய்தியை இராசேந்திரனின் இரண்டாமாண்டுக் கல்வெட்டுக் குறிக்கிறது.[4] இக் கொடையளித்தவன் பொய்கைநாடு கிழவனுவான். இச் செப்புக்குடங்கள் மூன்றாகும் செம்பின்மேல் பொன் (பொன்கடுக்கின) தகடுகளால் மூடப்பெற்றவை. இவற்றுட் செப்புக்குடத்தின் எடை 1191 கழஞ்சு (சுமார் $2\frac{1}{2}$ கிலோ) எடையாகும். பொன்னின் எடை 37.5 கிராம்களாகும். (விலை மதிப்பு ரூ. 6745)

### 3. திசைத்தேவர்களின் சுற்றாலயங்கள்

தஞ்சைப் பெரிய கோவில் திருச்சுற்றாலயத்தில் தத்தமக்குரிய இடங்களில், எண் திசைத் தெய்வங்கள் கோயில் கொண்டெழுந்தருளியிருந்தனர். இவ்வாலயங்களின்மேல் வைக்க ராஜராஜதேவரின் 29-ஆமாண்டில் இராஜராஜனின் குருவான ஈசானசிவ பண்டிதர் செப்புக்குடங்களைத் தந்துள்ளார். இவை பொற்றகடுகள் பரப்பப் பட்டவை. இவற்றின் விவரம் வருமாறு :—

---

1. S. I. I. Vol. II எண். 87
2. S. I. I. V. II No. 88
3. S. I. I. II No. 89
4. S.I.I. Vol. II, எண். 60.

| திசைத்தெய்வம் | பொன் | செம்பு |
|---|---|---|
| 1. | 15 கழஞ்சு | — |
| 2. | $10\frac{1}{4}$ ,, | — |
| 3. நைரிதியார் | $10\frac{1}{4}$ ,, | — |
| 4. அக்னிதேவர் | 10 ,, | 82 |
| 5. ஜா | 10 ,, | 500 |
| 6. யமராஜா | 15 ,, | — |
| 7. வருணராஜா | 10 ,, | $540\frac{1}{2}$ |
| | $80\frac{1}{2}$ கழஞ்சு | |

இதனுள் இந்திரனுக்கு ஸ்தூபிக்குடமளிக்கப்பட்டமை கூறப்பெறவில்லை.[1] இச் செப்புக்குடங்களின்மேல் வேயப்பட்ட பொன் சுமார் 175.4 கிராம்களாகும். (விலை சுமார் 31500 ரூபாய்)

## திருவிழாக்கள்

தஞ்சைப் பெருங்கோயில் நித்திய வழிபாட்டில் மேலோங்கி இருந்தது போலவே நைமித்திக வழிபாட்டிலும் சிறந்திருந்தது. தஞ்சைப் பெருங்கோயிலில்,

| | | |
|---|---|---|
| மஹோத்சவம் (ஆட்டைப் பெரிய திருவிழா) | 9 | நாட்கள் |
| திருச்சதையத் திருநாள் | 12 | ,, |
| திருக் கார்த்திகை நாள் எழுந்தருளும் விழா | 1 | நாள் |
| ஸங்கிராந்தி நாள் | 12 | நாட்கள் |
| ஆக | 34 | நாட்கள் |

திருவிழாக்கள் நடைபெற்றன.

ஆட்டைப் பெரிய திருவிழா நாட்கள் பன்னிரண்டனுள் முதல்நாள் 'திருக் கொடியேற்றுநாள்; ஆட்டைப் பெரிய திருவிழா திருக்கொடி ஏற்றும் நாளன்று இசைவல்லார் ஐவர் (கடிகையார்) விழா நிகழ்ச்சியைத் திருப்பறைஅறைவித்து அறிவிப்பர். இதுபோலவே இத்திருவிழாவில் 'ஆடவல்லார்' திருமேனி 'எழுந்தருளும் மூன்றுநாட்களிலும்' "ஆடவல்லார் எழுந்தருளும் நாள் இன்றுள்ளிட்டு மூன்றுநாள்" என்று பறையறைந்தறிவிப்பர். இப்பறையறைவு செய்விப்பவர்கட்கு ஒருபணிக்கு ஒருவருக்கு அரைக்காசு வீதம் ஐவருக்கு இரண்டரை காசுகள் ஊதியம் தரப்பெற்றது. அபூர்விகள் கிடைக்காமல் போனாலோ, ஒருவரே இரு பறையறைவுகளும் செய்ய வேண்டியிருந்தாலோ ஒருவனுக்கே ஒருகாசு ஊதியமாகத் தரப் பெற்றது. இதற்காக ராஜேந்திரசிங்கவளநாட்டு, மண்ணி நாட்டு நாட்டார்மங்கலத்தைச் சேர்ந்த இசை வல்லுநனும் (கடிகையான்) முதல் ராஜராஜனின் திருவாய்க்கேள்வியாகப் பணி யாற்றியவனுமான 'ராஜகேஸரி கோதண்டராமனான ஜயங்கொண்ட சோழக் கடிகை மாராயன்' என்பவன் நாற்பது காசுகளை முதற்பொருளாக வைத்தான். ராஜேந்திர சிங்கவளநாட்டுத் தனியூர் வீரநாராயணச் சதுர்வேதிமங்கலத்துச் சபையினர் காசொன்றுக்கு அரைக்கால் காசு வட்டிவீதத்தில் இம் முதற்பொருள்கொண்டு ஆண்டுக்கு ஐந்துகாசு செலுத்தினர் என்பது கல்வெட்டில் கண்டது.[2]

1. S. I. I. II. எண். 91.
2. S. I. I. II No. 25

இத்திருவிழா நாட்களில் 'தூபத்தோடு காட்டும் தீபத்துக்குக் கற்பூரத் திரியிட்டு எரிய' வைப்பதற்காக முதற்பொருள் தென்னவன் மூவேந்த வேளானாலும் ஈசாநசிவ பண்டிதராலும் தரப்பட்டுள்ளது.[1]

வேறொருசாசனம் 'கொடியேற்ற வலம் செய்யும் நாளை' ஒன்பது நாட்களில் இருந்து பிரிக்கிறது. இருபத்துநான்கு திருவிழா நாட்களில் நாள் ஒன்றுக்குத் திருவிழா வில் உடையாரைச் சேவித்துவந்த சிவயோகிகள் பதின்மருக்கு உடையார் சாலையில் திருவமுது படைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தமை இக் கல்வெட்டுக் குறிக்கும் செய்தியாகும்.[2]

**திருச்சதையநாள் விழா** இராஜராஜசோழனின் ஜன்மநக்ஷத்திரநாளான சதைய நாளில் கொண்டாடப்பட்ட விழாவாகும். இம் மன்னன் ஐப்பசி மாதம் சதையநாளில் பிறந்தவனாவான். சதையநாளில் பதின்மர் சிவயோகிகட்குச் சாலையில் உணவிடப் பட்டது. இந்நாட்களில் ஆடியருளும் திருமஞ்சன நீரிலும் தண்ணீர்மீதிலும் ஒரு நாளைக்கு ஏலஅரிசி ஒரு ஆழாக்கும், பெருஞ்சண்பகமொட்டு ஒரு ஆழாக்கும், இடப் பெற்றுள்ளன என்று ஒரு கல்வெட்டால்[3] அறியலாகிறது. திருச்சதையநாள் பன்னிரண்டனுக்கும் 'திருவிழா எழுந்தருளின தேவற்கு'த் திருஅமுது செய்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டமையை ஒரு கல்வெட்டுக் காட்டுகிறது.[4]

**ஸங்கிராந்திநாள் விழா** 12 நாட்கள் கொண்டாடப்பட்டது. சிவயோகிகட்கு உண வுக்கும் தேவர்க்குத் திருவமுது படையலுக்கும் ஏற்பாடுகள் செய்விக்கப்பட் டிருந்தன. இத் திருநாளில் ஆடியருளும் நீரிலும் தண்ணீரிலும் ஏல அரிசியும் பெருஞ் சண்பகமொட்டும் இடப்பட்டதுடன் இலாமிச்சையும் இடப்பட்டுள்ளது. ராஜ ராஜீஸ்வரம் உடையாருக்கும் தக்ஷிணமேருவிடங்கருக்கும் இலாமிச்சை மட்டும் அளிக்கப்பட்டுள்ளமை கூறும் கல்வெட்டுப்பகுதியால் இந்நாட்களில் எழுந்தருளிய தேவர் தக்ஷிணமேருவிடங்கராதல் கூடும் என அறியலாம்.[5]

**திருக்கார்த்திகை எழுந்தருளும் விழா.** இது கார்த்திகைமாதத்துக் கார்த்திகைநாள் விழா. இந்நாளில் திருவிழா எழுந்தருளும் தேவற்குத் திருவமுதுபடிக்கு ஏற்பாடு செய்யப்பட்டமையையும் கற்பூரத்திரியிட்டெரிய ஏற்பாடு செய்யப்பட்டதனையும் ஒரு சாசனம்[6] கூறும்.

**சைவாசார்யர் பூசனை**

தமிழகத்தில் பலதிருக்கோயில்கள் பன்னெடுங்காலமாகச் சைவாசார்யர்களால் பூசனை செய்யப்பட்டு வந்துள்ளன. தஞ்சைப் பெரிய கோயிலில் சைவாசார்யரால்

1. S.I.I. II, No. 26 and 9.
2. S.I.I. II, எண். 28.
3. S.I.I. II, No. 24.
4. S.I.I. II, No. 26.
5. S.I.I. II, எண். 24 வரி 24-5.
6. S.I.I. II, No. 26.

பூசனை மேற்கொள்ளப்பட்டமை சாசனக் குறிப்புக்களால் அறியப் பெறும். இராஜ ராஜனின் சமகாலச் சாசனங்களில் அதுபற்றிய குறிப்புக்கள் இல்லையாயினும் இராசேந்திரனின் இரண்டாமாண்டுச் சாசனத்திலேயே இது பற்றிய குறிப்புள்ளது.

"கோப்பரகேஸரிவன்மரான உடையார் ஸ்ரீ ராஜேந்ரசோழ தேவர்க்கியாண்டு 19-ஆவது நாள் இருநூற்று நாற்பத்திரண்டிஞல்.......... உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் கோயில் ஆசார்யபோகம் நம் முடையார் ஸர்வசிவபண்டித சைவாசார்யருக்கும்" என்றும்[1]

"ஸ்ரீ ராஜேந்ரசோழ தேவற்கு யாண்டு இரண்டாவது உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் சைவாசார்யந் பவன பிடாரன்"

என்றும் அமைந்துள்ள சாசனத் தொடர்களால் இக்கோயிலில் சைவாசார்யர் பூசனை புரிந்தமை உறுதியாகப் பெறப்படும்.

ராஜேந்திர சோழனின் இரண்டாமாண்டில் தஞ்சைப் பெரிய கோயிலில் சைவாசார்யராய் இருந்த 'பவனபிடாரன்' என்பார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் கோயிலில் ஸ்தூபிக் குடம் ஒன்று வைத்துள்ளார். இதன்மேல் ஆறுகழஞ்சே இரண்டுமஞ்சாடி பொன் பாவப்பட்டிருந்தது. இது ஐநூற்று நாற்பத்தைந்து கழஞ்சு எடையுடையது.

முதலாம் இராசேந்திரன் தன்னுடைய 19-ஆம் ஆட்சி ஆண்டில் (1031ல்) கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலில் இருந்த 'முடிகொண்ட சோழன்' திருமாளிகையில் வடபக்கத்துத் தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் இருந்து சர்வசிவபண்டித சைவாசார்யருக்குத் தானம் செய்தான்.

அதன்படி சர்வசிவபண்டிதருக்கும், அவருடைய சிஷ்யரும், சிஷ்யர்களுக்குச் சிஷ்யரும் ஆய் ஆர்யதேசத்திலும், மத்தியதேசத்திலும், கௌடதேசத்திலும் உள்ளாராய்த் தகுதியுடையராய் இருப்பார்க்கு, ஆண்டாண்டுதோறும், தஞ்சைப் பெரியகோயில் பொருள் நிலையத்தே நிறைச்சளவாக ஆடவல்லான் என்னும் மரக்காலால் இரண்டாயிரம் கலம் நெல் தரப்பெற்றது.[4]

இங்ஙனம் தன் ஆசாரியருக்குத் தானம் செய்தமையின் முதலாம் இராசேந்திரன் தன் ஆசாரியரிடத்தில் பற்றும் மதிப்பும் உடையவன் என்பது பெறப்படும். தஞ்சைப் பெரிய கோயில் பண்டாரத்தில் இருந்து நெல் கொடுக்கப் பட்டிருந்தலால் இவருக்கும் இக்கோயிற்கும் உள்ள தொடர்பு புலப்படும்.[5]

### பூஜைக்கு நிவந்தங்கள்

தஞ்சைப் பெரிய கோயில் உடையார்க்கும் இங்கெழுந்தருள்விக்கப்பெற்றிருந்த விக்கிரஹங்கட்கும் பல நிவந்தங்கள் நித்ய நைமித்திக வழிபாட்டின் பொருட்டுத் தரப் பெற்றிருந்தன. இராஜராஜன் திருவிளக்குக்குக் கொடுத்த நிவந்தக் கல்வெட்டுக்கள்

1. S.I.I. Vol. II, No. 20.
2. S.I.I. Vol. II, No. 9.
3. எண். 91.
4. எண். 20.
5. Sarvasiva pandita mentioned in No. 20 dated during the 19th year of the samə king was Apparently a successor of Pavana pidaran in the office of Saiva Acharya of the Temple. S. I. I. Vol. II Page 413. 90 intro.

சோழ அரசியரும் அலுவலரும் பொதுமக்களும் திருவிளக்கு நிவந்தங்கள் தந்தமையைக் காட்டுகின்றன. உடையார் திருநொந்தா விளக்கொன்றில் கற்பூரத் திரியிட்டு எரிய* தினந்தோறும் மஞ்சாடிக் கர்ப்பூரம்வீதமாக ஓராண்டுக்குப் பதினெண் கழஞ்சு கற்பூரத் தேவைக்காக 'ராஜகேஸரி நல்லூர்க்கிழவன் காரூயில் எடுத்தபாதம்' என்பான் முதற்பொருள் தந்தமையை இராஜராஜன் காலத்திய சாசனம் காட்டும்.

ராஜராஜனின் 29-ஆமாண்டுக் கல்வெட்டொன்று,

''ராஜராஜீஸ்வரமுடையார்க்கும் தக்ஷிணமேருவிடங்கர்க்கும் தூபத்தொடு காட்டும் தீபத்துக்குக் கற்பூரத் திரியிட்டெரியவைத்த பொலிசைக் காசு'' என்று கூறுதலால் தூபம் தீபம் பூசையில் இடம்பெற்றமை பெறப்படும்[1].

இராஜராஜன் காலச் சாசனங்கள் மூன்றுகால பூஜை தஞ்சைப் பெரிய கோயிலில் நடந்தமையைக் காட்டுகின்றன. 'உடையார்க்கு மூன்றுசந்தியும் அமுது செய்விக்க'ப்பட்டமை ராஜேந்திரன் கல்வெட்டுக்களிலும் கூறப்பெறும். காலை உச்சியம்போது மாலை என்பவை இவை.

இறைவன் அபிஷேகம் கொள்ளும் காலத்து நாடொறும் விளாமிச்சை, பெரும்சண்பகமொட்டு, ஏல அரிசி கலக்கப்பட்ட நன்னீரால் திருமஞ்சனமாட்டுவிக்கப் பெற்றார். உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார் ஆடியருளும் திருமஞ்சன நீரிலும் தண்ணீர்மீதிலும் மூன்று சந்திக்கும் ஷை பொருள்களை இட ராஜராஜனின் சிறுதனத்துப் பணிமகனை அருமொழிதேவ வளநாட்டுப் புலியூர் நாட்டுக் காடன் கணவதி என்பான் நிவந்தமளித்துள்ளான். இராஜராஜன் காலத்ததான இக் கல்வெட்டுத் தினந்தோறும் ஏலவரிசி ஒரு ஆழாக்கும் பெருஞ்சண்பகமொட்டு ஒரு ஆழாக்கும் இலாமிச்சை ஆறு பலமும் கலக்கப்பட்டதாகக் கூறும்[2]. இதனால் மூன்று சந்தியும் பூசனையும் அபிஷேகமும் நிகழ்ந்தமை புலனாகும்.

தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருள்விக்கப்பெற்ற திருமேனிகட்கும் வழிபாடு, திருவமுதுபடி இறையுருவங்கட்குச் சாத்தும் திருப்பள்ளித்தாமம், திருப்பரிசட்டம் முதலானவற்றுக்கு இராஜராஜன் காலம் முதலாகவே நிவந்தங்கள் தரப்பெற்றுள்ளன.[3] இராஜராஜன் எழுந்தருள்வித்த சந்திரசேகரர்க்கும் நம்பிராட்டியார்க்கும்[4] தக்ஷிணமேருவிடங்கர்க்கும்[5] கிராதார்ச்சுன தேவர்க்கும்[6] திருஅமுதுபடி உள்ளிட்ட நிவந்தங்கட்குத் தரப்பட்டிருந்த தான விவரங்களை இராஜேந்திரன் காலக் கல்வெட்டுக்கள் கூறுகிற்கும்.

---

* விளக்குத் திரியின் நுனியில் சிறிதளவு கர்ப்பூரத்தை வைத்துத் திரித்தல் 'கற்பூரத்திரியிடுதல்' ஆகும். விளக்கு எளிமையாகப் பற்ற இம்முறை கையாளப்பட்டதெனலாம்.

1. S. I. I.II. எண். 27.
2. S. I. I. II. எண். 24.
3. S.I.I. II, எண். 8, 9, 13.
4. IBID. 54.
5. IBID, Nos. 15-20.
6. IBID. Nos. 9-10.

அக்கால நித்திய வழிபாட்டுத்தேவை எவ்வாறு இருந்தது? என்பதனைப் பல சாசனப்பகுதிகள் விளக்குகின்றன. இராஜராஜன் காலத்திய குந்தவையின் சாசன மொன்று பொன்மாளிகைத் துஞ்சியதேவர் திருமேனிக்குத் திருவமுதுபடிக்கு

| | ஒருபோதுக்கு | ஒருநாட்குத் தேவையான நெல் (2 போதுக்கு மட்டும்) அல்லது காசு |
|---|---|---|
| போனகப்பழ அரிசி | — இருநாழி | |
| நெய்யமுது | — 2½ செவிடு | |
| கறியமுது | — 3 வகைக் கறிகள் | |
| பருப்பு | — உழக்கு | தூணி |
| சர்க்கரை | — கஃசு (¼ பலம்) | இருநாழி |
| பொறிக்கறி நெய் | — 1¼ செவிடு | உரி |
| வாழைப்பழம் | — 1 | ஆழாக்கு |
| தயிரமுது | — உரி | |
| கடுகு, மிளகு, உப்பு, விறகு | — — | |
| வெற்றிலை | — 4 | |
| பாக்கு | — 8 | |

பிறதேவை ஆண்டுக்கு

| | | |
|---|---|---|
| திருப்பரிசட்டம் | — 26 | 2 காசு |
| திருநமனிகை | — 2 | |
| திருவொற்றுடை | — 4 | 2 காசு |
| திருமேற்கட்டி | — 2 | 2 ,, |
| திருப்பாவாடை | — 16 | 4 ,, |
| திருப்பள்ளித்தாமம் | ஒருநாள் ½ அக்கம். | ஆண்டுக்கு 15 காசு |

எனவும் கூறப்பட்டுள்ளமை அக்காலத்தில் நித்திய வழிபாடு மிகவும் சிறந்திருந் தமையை விளக்கும் சான்றுகளுள் ஒன்றாகும்.[1]

### தஞ்சைக் கல்வெட்டுக்களில் கூத்து

இராஜராஜனின் தளிச் சேரிப் பெண்டிர் நிவந்தக் கல்வெட்டில்,

'மறைக் காட்டுக் கணவதியான திருவெள்ளறைச் சாக்கை'

என்பான் குறிக்கப்படுகிறான். இவன் 'சாக்கைக் கூத்தில்' வல்லவன் என்பது இவன் பெயரால் போதரும்.

கூத்து, ஆரியக் கூத்து, தமிழ்க்கூத்து என்று இருவகைப்படும். ஆரியக் கூத் தென்பது புராண இதிகாசக் கதை தழுவி வரும் கூத்தென்பர் அறிஞர். திருவாவடு துறையில் உள்ள முதல் இராஜராஜனின் ஒன்பதாமாண்டுக் கல்வெட்டொன்று[2] 'ஆரி யக் கூத்தாடியவன் ஒருவனைச்' 'சாக்கைக்காணியுடையவன்' என்று கூறுகிறது. 'கீழைப் பழூர்' 'காமரசவல்லி' முதலான ஊர்களில்[3] சாக்கைக் கூத்து நடத்த நிவந்தங்கள்

1. IBID. எண். 6.
2. 120 of 19 5.
3. 250 of 1926; 650 of 1914.

தரப்பட்டுள்ளன. திருவிடை மருதூரில் 'கித்திமறைக்காடனான திருவெள்ளறைச் சாக்கை' என்பவனுக்கு ஆரியக்கூத்தாட நிவந்தம் தரப்பெற்றுள்ளது[1] இவற்றை எல்லாம் நோக்கும்போது ஆரியக்கூத்து வல்லவரே சாக்கைக் கூத்திலும் வல்லவராக இருந்தமைபுலப்படும்,

சேரன் செங்குட்டுவன் வஞ்சிமாநகரில்,

'உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவள் ஆடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கையன் ஆடலின் மகிழ்ந்து'

இன்புற்றமை சிலம்பு செப்பும் செய்தி[2] இக்காலத்தும் சாக்கைக்கூத்து மலையாள நாட்டில் 'சாக்கையார் கூத்து' என்னும் பெயருடன் நிலவுகிறது என்பர்.

சிவபெருமான் ஆடிய நடனவகைகளுள் சாந்திக்கூத்து என்பதும் ஒன்று. 'சாந்திக்கூத்தே இறைவன் இன்பம் ஏந்திநின்றுடிய ஈரிருநடம்' எனப் பழம் நூல்கள் கூறும். அவை 1. சொக்கம். 2. மெய். 3. அவிநயம். 4. நாடகம் ஆகும், இராஜேந்திரசோழன் காலத்துத் தஞ்சைக் கல்வெட்டொன்று 'சாந்திக் கூத்து[3]'ப்பற்றிக் குறிக்கிறது. சாந்திக் கூத்தில் வல்லவனாக இருந்த 'சாந்திக் கூத்தன்' திருவாலன் திருமுதுக்குன்றனான விஜயராஜேந்ர ஆசார்யன் என்பவன் தஞ்சைப்பெரியகோயிலில் வைகாசிப் பெரியதிருவிழாவில் 'இராஜராஜேஸ்வர நாடகம்' என்னும் நாடகத்தை நடித்தான்[4]. இதற்காக இவனுக்கும் இவன் வர்க்கத்தாருக்கும் நாளொன்றுக்கு ஒருதூணி நெல் வீதம் ஆண்டொன்றுக்கு நூற்றிருபது கலம் நெல் தரப்பட்டுள்ளது என்பது இக்கல்வெட்டில் கண்டது. இதனுள் குறிப்பிடப்பட்டுள்ள 'இராஜராஜேஸ்வர நாடகம்' இன்று கிடைக்கவில்லை எனினும் இது இராஜராஜன் தஞ்சைப் பெரிய கோயில் எடுத்த வரலாறு கூறுவதாதல் கூடும் எனலாம்.

### கோயில் பணியாளர் ஊதியம்

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் பணிபுரியப் பலவகைப் பணியாளர்களை நியமித்துள்ள இராஜராஜசோழன் அவரவர்க்குரிய ஊதியம் இவ்வளவு என்பதனையும் தெளிவுறுத்தியுள்ளான். திருக்கோயில் பணியாளர்களும் அவர்க்குரிய ஊதியமும் பின்வருமாறு :

| பணியாளர் | ஊதிய விபரம் |
|---|---|
| பண்டாரிகள் | இப்பகுதி சிதைந்துள்ளது |
| திருப்பரிசாரகம் செய்வார் | நாள் 1க்கு ஒரு பதக்கு நெல் |
| நிலையாய் தீக்ஷித்தார் | நாள் 1க்கு 3 குறுணி நெல் |
| கணக்கெழுதுவான் | ஆண்டுக்கு 200 கல நெல் |
| கீழ்க்கணக்கு | ஆண்டுக்கு 75 கல நெல் |

1. S.I.I. Vol. V 718.
2. கல்லெழுத்துக்களில் பக்கம் 9.
3. என்னால் எழுதப்பட்ட கல்வெட்டுத் தேன்துளிகள், பக்கம் 79-93 காண்க.
4. S. I. I. Vol. II எண். 67

| | |
|---|---|
| தளிச்சேரிப் பெண்டுகள் | ஆண்டுக்கு 100 கலம் நெல் |
| திருமெய்க்காப்பு | ஆண்டுக்கு 100 கலம் நெல் |
| திருப்பதியம் பாடுவோர் | நாள் ஒன்றுக்கு 3 குறுணி நெல் |
| உடுக்கை வாசிப்போன் | ,, ,, |
| கொட்டிமத்தளம் வாசிப்போன் | ,, ,, |

ஷை பணியாளர்களை அன்றி இன்னும் பல கோயில் ஊழியர்களின் ஊதியப் பட்டியல் இந்நூலில் உள்ள தளிச்சேரிப் பெண்டிர் நிவந்தக் கல்வெட்டு விளக்கவுரையில் கொடுக்கப்பட்டுள்ளது. இவற்றைக் காணும்போது அக்காலப்பணியாளர் நல்ல ஊதிய நிரக்குடையராக இருந்தமை பெறப்படுகிறது.

இராஜராஜன் தஞ்சைப் பெரிய கோயில் அலுவலர்க்கு அளித்த ஊதியத்தைப் பிறஇடங்களில் அதே வேலைக்குச் சமகாலத்தில் அல்லது பிற்காலத்தில் அளிக்கப்பட்ட ஊதியத்துடன் ஒப்புநோக்கி அறிவோம்.

திரு மெய்க்காப்பாளர்களுக்கு ஒரு நாளைக்கு ஒரு குறுணி நெல்லும், ஆண்டொன்றுக்கு ஆடைகட்காக 2 கழஞ்சு பொன்னும் தரப்பெற்றமை இராஜராஜனுக்கு முன் அரசுபுரிந்த உத்தமசோழனால் அளிக்கப்பட்ட சென்னை அருங்காட்சியகச் செப்பேட்டில்கண்டது. ஆண்டொன்றுக்கு மெய்க்காப்பாளருக்கு 30½ கலம்நெல் ஆண்டுதியமாகத்தரப்பட்டது; இருகழஞ்சு பொன்னுக்கு மதிப்புச் சுமார் 32 கலம். எனவே 62½ கல நெல் தரப்பட்டுள்ளது. இப்பணிக்கே தஞ்சையில் 100 கல நெல் தரப்பட்டுள்ளது என்பது ஒப்பு நோக்கிஅறிதற்பாலதாம்.

கி. பி. 1018க்குரிய கல்வெட்டொன்று சமையற் கலைஞர் ஒருவர்க்கு நாள் ஒன்றுக்கு 4 நாழி நெல்லூதியம் என்கிறது.[1] தஞ்சையில் 'பரிசாரகம் செய்யும் மாணிக்கு' 1 பதக்கு நெல் தரப்பட்டுள்ளது. இது முன்னதனைவிட நான்கு மடங்கு அதிகமான சம்பளம் ஆகும்

திருவாமாத்தூரில் உள்ள 1030க்குரிய கல்வெட்டொன்று[2] பூங்காக்களுக்கு நீர் இறைத்தல், பூப்பறித்தல் ஆகிய பணிகளைப் புரிவோருக்கு ஒரு நாளைக்கு 8 நாழி நெல் சம்பளம்; பூமாலை தொடுக்கும் பெண்பணியாளருக்கு இதில் பாதி (4 நாழி) என்று கூறும். தஞ்சைக் கல்வெட்டில் திருப்பள்ளித் தாமம் தொடுப்பாருக்கு ஒரு நாளைக்கு 1 பதக்கு (16 நாழி) நெல் தரப்பட்டமை கூறப்பெறும். இது 4 மடங்கு அதிகமாகும்.

இதுபோன்று பல கல்வெட்டுக்களில் கூறப்பெறும் ஊதியங்களோடு ஒப்பிடுங்காலத்தில் தஞ்சைப் பெருங்கோயிலில் பணி புரிந்தவர்களுக்கு 'மிக உயர்ந்த ஊதியம்' தரப்பெற்றமை புலப்படுகிறது.

---

1. 267 of 1910. இதே ஊதியம் 1115-ல் குறிக்கப்பெறும். (281 of 1910) வைணவ பிரம்மச்சாரிகளுக்கும் திருமுக்கூடலில் இராஜேந்திரசோழன் காலத்தில் ஒரு நாளைக்கு ஒருவனுக்கு 4 நாழி நெல்தான் தரப்பெற்றிருக்கிறது. 175 of 1915 also see, The Colas Old Ed. Vol. II Part I page 368.

2. 18 of 1922.

## பல்வகைப் பண்டம்—விலைநிலை

முதல் ராஜராஜசோழன் காலத்தில் பொருள்களின் விலை நிலைமையைப் பல கல்வெட்டுக்கள் காட்டுகின்றன; சில கல்வெட்டுக்கள் பண்டமாற்று முறையில்—நெல்லடிப்படையில் கூறுவன. சில காசில் விலை கூறுவன.

பொய்கைநாடு கிழவன் என்பவன் திருவிழா எழுந்தருளும் திருமேனிகட்குத் திருவிழா எழுந்தருளும் நாட்களில் திருவமுது படிக்கு நிவந்தம் தந்தான். ஒரு நாளைக்கு இன்னின்ன பொருள்கள் தேவை? அதன் நெல் மதிப்பு இவ்வளவு? 13 நாட்களுக்கும் மொத்த நெல் இவ்வளவு" என்று அச்சாசனம் தெளிவாகக் கூறுகிறது.[1]

| தேவையான பொருள் | | | | | | | | | | சமமான நெல் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | நா | உரி | உழ | ஆ | செ | க | தூ | ப | கு | நா | உரி | உ | ஆ | செ |
| 1. பழஅரிசி | | | | | | | 2 | | | 4 | 1 | | | |
| 2. பருப்பு | 1 | | 1 | 1 | | | | | | 5 | 1 | | 1 | |
| 3. மிளகு | | | | 1 | 1¾ | | | | | 2 | | 1 | 1 | 1 |
| 4. சீரகம் | | | | | ¾ | | | | | 4 | | | | |
| 5. சர்க்கரை 3 பலம் க.·.சரை. | | | | | | | | | | 2 | 1 | | 1 | 4 |
| 6. நெய் | | | 1 | 1 | 4¾ | | | | | 1 | 7 | | | |
| 7. புளி 8 பலம் | | | | | | | | | | 1 | | | | |
| 8. தயிர் | 3 | | | | | | | | | 1 | | | | |
| 9. கொள்ளு | | | | | 3 | | | | | | 1 | | | |
| 10. வாழைப்பழம் | 18 | | | | | | | | | 5 | | | | |
| 11. கறிகாய் | | | | | | | | | | 6 | | | | |
| 12. உப்பு | | | 1 | 1 | | | | | | | | 1 | 1 | |
| 13. சாப்பாட்டுக்கு. இலை 30. | 12 | | | | | | | | | 2 | | | | |
| 14. பாக்கு 30 வெற்றிலை 60. | | | | | | | | | | 4 | 1 | | | |
| 15. சிதாரி கலசு | | | | | | | | | | 1 | | | | |
| 16. விறகு | | | | | | | | | | 6 | | | | |
| ஒருநாள் நெல் தேவை | | | | | | 1 | 1 | 1 | | | | | | |

என்பது இக் கல்வெட்டில் கண்டது. இதிலிருந்து நெல் விலையும் உப்பு விலையும் சமமாக இருந்தமையும், பருப்பு நெல்லை விட ஐந்துமடங்கு அதிகமாகவும், தயிர் நெல்லைவிட இருமடங்கு குறைவாகவும் மதிப்புற்றிருந்தது என்பதும் தெரியவரும்.

1. S. I. I. Vol. II. No. 26.

இத்தகைய பலசாசனங்களின் மூலம் இராஜராஜன் காலத்தில் பொருள்களுக் கிருந்த விலைமதிப்பு ஓரளவு அறியப்பெறும். அறியப் பெறும் பொருள்—விலை மதிப்புப் பற்றிய பட்டிகை பின்வருமாறு :—

| எண். | பொருள் | அளவு | விலை காசு/நெல். | க எண் |
|---|---|---|---|---|
| 1. | ஏல அரிசி | குறுணி நானாழி | 1 காசு | 24 |
| 2. | பெருஞ் செண்பக மொட்டு. | பதக்கு | 1 காசு | 24 |
| 3. | இலாமிச்சம் | 605 பலம் | 1 காசு | 24 |
| 4. | பருப்பு | 1 நா. 1 உ 1ஆ நாழி | 5 நா. 1 உரி 1 ஆ. 3 நாழி நெல் | 35 |
| 5. | மிளகு | ஒருஆழாக்கு $1\frac{3}{4}$ செவிடு | | |
| 6. | சீரகம் | $\frac{4}{5}$ செவிடு | 4 நாழி நெல் | |
| 7. | சர்க்கரை | 3 பலம் 1 கஃசரை | 2 நா. 1 உரி. 1 ஆ. 1 செ. | |
| 8. | நெய் | உழக்கு | குறுணி நெல் | 35 |
| 9. | புளி | 8 பலம் | 1 நாழி | |
| 10. | தயிர் | 2 நாழி | நாழி நெல் | 35 |
| 11. | கொள்ளு | 3 செவிடு | 1 உரி | |
| 12. | வாழைப்பழம் | 18 பழம் | 5 நா. நெய் | |
| | | 1200 | 1 காசு | 37 |
| 13, | உப்பு | 1 உழக்கு 1 ஆழாக்கு | 1 உழச்கு 1 ஆழக்கு | |
| 14. | குருத்திலை | 12 குருத்திலை | 2 நாழி நெல் | |
| 15. | வெற்றிலை. பாக்கு | 12 பாக் 24 வெற்றிலை | நாழி உரி நெல் | |
| 16. | சிதாரி | கால்பலம் | 1 நாழி | |
| 17. | கர்ப்பூரம் | 3 கழஞ்சு | 1 காசு | |
| 18. | ஆடு | மூன்று அல்லது 4 | 1 காசு | |
| 19. | ஆடு | இரண்டு | அக்கம். 1 | |
| 20. | ஆடு | ஆறு | எருமை. 1 | |
| 21. | ஆடு | இரண்டு | பசு 1 | |
| 22, | பசு | ஆறு | காசு 4 | |
| 23. | எருமை | எருமை 1 | காசு 2 | |

இராஜராஜன் காசு—சில குறிப்புக்கள்

இராஜராஜன் காலத்திய காசு பற்றிய மதிப்பினை இவ்வளவு ஆடு, பசு, எருமை கர்ப்பூரம் எனக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

காசு என்று சோழர் சாசனங்களுட் கூறப்பெறும் நாணயம் பொன்னாலான நாணயமாகும்.

இந்நாணயத்தின் எடை முதலியன பற்றிக் காணுமுன் இதன் மதிப்புப் பற்றி மேலும் அறிவோம். கி.பி. 1099-க்குரிய திருப்பனந்தாள் கல்வெட்டொன்று[1] 1 காசுக்கு = 30 பலம் செம்பு = $26\frac{2}{3}$ பலம் வெள்ளி = 70 பலம் தாரா (Alloy) பெறலாம் எனக் கூறும். முதல் குலோத்துங்கன் காலத்திய கல்வெட்டொன்று 100 காசுகட்கு 433 கழஞ்சு வெள்ளி பெறலாம் என்று காட்டும்.[2]

இராஜராஜன் காலத்தில் 'மதுராந்தகதேவன் மாடை' என்னும் நாணயம் இருந்தது. முதல் இராஜராஜனின் 31-ஆமாண்டில் குறிக்கப்பெறும் இந்நாணயம்[3] பொன் மாற்று நிலையறிய உதவிய பொது உரையாகும்.[4] இது ஒரு பொன் அதாவது ஒரு கழஞ்சு எடையுடையது. இந்நாணயம் $9\frac{1}{2}$ மாற்றுடையதாகவும்[5] 2 காசு மதிப்புடையதாகவும்[6] முதல் குலோத்துங்கன் காலத்திலும் குறிக்கப்பெறும்.

இராஜராஜன் காலத்தில் மாடையும் காசும்[7] வழக்கில் இருந்தமை சாசனங்களால் அறியப்படும், இராஜராஜன் காலத்துக்கு முன்னதான இரண்டாமாதித்தன் கால நான்காமாண்டுக் கல்வெட்டொன்று

20 காசுகள் = 10 கழஞ்சு

என்றுகூறும்.[8] இதே கணக்கீடு பிற்காலத்தும் கூறப்பெறுகிறது.[9] இதிலிருந்து

1 கழஞ்சு = 2 காசு எனவும்.

ஒரு காசு என்பது 10 மஞ்சாடி; 20 குன்றி; (சுமார் **11 Gram**) எடையுடன் அமைந்ததொரு பொன்னாலான நாணயம் எனவும் பெறப்படும். முதல் ராஜராஜ சோழனுடைய தஞ்சைக் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெறும் நாணயமான 'காசு' என்பது இதுவேயாகும். ஆயின் இன்று ஆய்வாளர்க்குக் கிடைத்துள்ள காசுகளில் சரியாக இவ்வெடையுள்ள காசு கிடைக்கவில்லை எனலாம்.[10]

---

1. 46 of 1914 A.R.E. 1915 II 23.
2. 211 of 1922 1 காசுக்குச் சுமார் 10 கிராம் வெள்ளி விற்றது. இதன்படி வெள்ளி மிகவும் கிராக்கியாக இருந்தது ஆகலாம்.
3. 203 of 1025 228 of 1923.
4. Maduranthakadevan Madai served as the standard of fitness for testing gold-K.A.N. The Colas page 444 also see 140 of 1913. A.R.E. 1913. II. 22.
5. 17 of 1893; 18 of 1911.
6. 90 of 1928.
7. 141 of 1912. 484 of 1925.
8. 241 of 1923.
9. 203 of 1925.
10. தமிழக அரசு தொல்லியல் துறை வெளியீடான டாக்டர் திரு. R. நாகசாமி அவர்களின் Tamil Coins. - A Study என்னும் நூலில் பக்கம். 38-39 லும் திரு. நீலகண்ட சாஸ்த்திரியாரின் The Colas என்ற நூலில் 444 லும் விவரங்கள் காணலாம்.

தஞ்சைக் கல்வெட்டுக்களில் அக்கம் என்றொரு சிறுகாசு குறிக்கப் பெறும். இது காசின் 1/12 பாகம் ஆகும். காசின் 1/20 பாகம் மா என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்படும்.[1]

**காசும் நெல்லும்**

பல்வகைப் பண்ட விலைகளை நெல்லின் மூலமும் காசின் மூலமும் அறியக் கல்வெட்டுக்கள் துணை புரிகின்றன. ஒருசில கல்வெட்டுக்களில் மட்டுமே நெல்லின் மதிப்புக் கழஞ்சு அல்லது காசில் கூறப்பெற்றுள்ளது. அவற்றுட் சிலவற்றின் மூலம் 1 காசுக்கு இத்தனைக் கலம் நெல் சமம் என்பது பெறப்படும். விவரம் வருமாறு:[2]

| எண் | அரசன் | ஊர் | ஆண்டு | 1 கழஞ்சுக்கு நெல் | 1 காசுக்கு நெல் | |
|---|---|---|---|---|---|---|
| 1. | இராஜராஜன் | திருவல்லம் | 992 | 13½ கலம் | [6¾ கலம்] | 218 of 1921 |
| 2. | இராஜேந்திரன் | ,, | 1015 | 13½ கலம் | [6¾ கலம்] | 176 of 1915 |
| 3. | வீரராஜேந்திரன் | திருமுக்கூடல் | — | 16 கலம் | [8 கலம்[ | 182 of 1915 |
| 4. | இராஜராஜன் | திருப்புகலூர் | 1006 | [16 கலம்] | 8 கலம் | 68 of 1928 |
| 5. | இராஜேந்திரன் | சிதம்பரம் | — | [17 கலம்] | 8½ கலம் | 118 of 1883 |
| 6. | ராஜகேஸரி | பண்டார வாடை. | — | 15 கலம் | [7½ கலம்] | 282 of 1927 |

[இப்பட்டியலுள் அடைப்புக் குறிக்குள் கண்ட நெல்லளவு மாற்றப்பட்டது. மற்றொன்று கல்வெட்டில் உள்ளது.]

இப்பட்டியலிலிருந்து இராஜராஜன் காலத்தில் ஒரு கழஞ்சு பொன் கொண்டு 15-16 கலம் நெல்லும் காசு ஒன்றுக்கு 7½–8 கலம் நெல்லும் வாங்கினர் என்பது புலனாகும்.

**இராஜராஜன் கால விலைகள்—ஒப்பியலாய்வு**

இராஜராஜன் காலத்தில் காசின் மதிப்பு ½ கழஞ்சு. ஒரு கிராம் பொன் 180 ரூபாய் என்றால் இக்காசு தற்கால மதிப்புக்கு 196.875 பைசா மதிப்புடையதாகும். இவ்வடிப்படையில் நோக்கும்போது நெல் காசு ஒன்றுக்கு 68 of 1928-இன்படி 16 கலமாக இராஜராஜன் காலத்தில் இருந்தமை பெறப்படுவதன் அடிப்படையில்,

| | | | |
|---|---|---|---|
| ஒரு கலம் நெல் விலை | — | 22.50 | ரூபாய் |
| ஒரு குறுணி (மரக்கால்) நெல் | = | 1.87 | ரூபாய் |
| 1 படி நெல் | = | 0.23 | ரூபாய் |

என்று மதிப்பிடவியலும்.

---

1. 273 of 1292 and The Colas Vol. II part I P. 462.
2. காசிற்கு 2¾ கலம் நெல்லும் விற்றிருக்கிறது. 7 கலமும் விற்றதுண்டு. இத்தகைய கல்வெட்டுகள் பல உண்டு. இவ்விலைகள் கல்வெட்டு இருக்கும் இடம், நெல் விளைச்சல், அரசியல் சூழ்நிலை காரணமாக அமைவன. பொதுவாக அமைவதான மதிப்பே இங்குத் தரப்பட்டுள்ளது.

ஏலக்காய் முதலான பொருள்களின் மதிப்பையும் தற்கால ரூபாய்களில் ஓரளவு ஒப்பிட்டு விலை மதிப்பிடலாம்.

| | | | ரூ.பை |
|---|---|---|---|
| 1. | ஏல அரிசி ஒரு படி | — | 15.00 |
| 2. | பெருஞ்சண்பகமொட்டு ஒருபடி | — | 11.25 |
| 3. | இலாமிச்சை 1 பலம் (35 கிராம்) | — | 0-27 |
| 4. | பருப்பு 1 படி | — | 0.70 |
| 5. | மிளகு 1 படி (சுமார்) | — | 1.87 |
| 6. | சீரகம் 1 படி (சுமார்) | — | 7,50 |
| 7. | நெய் 1 படி (சுமார்) | — | 7.48 |
| 8. | புளி 1 வீசை (1400 கிராம்) | = | 1.17 |
| 9. | தயிர் 1 படி | = | 0.78 |
| 10. | வாழைப்பழம் (ஒருவகை) 12 | = | 0.75 |
| | மற்றொருவகை ,, | = | 1.96 |
| 11. | உப்பு 1 படி | = | 0.23 |
| 12. | கற்பூரம் 10 கிராம் | = | 27.48 |
| 13. | ஆடு ஒருவகை ஒன்று | = | 60.00 |
| | மறுவகை ,, | = | 45.00 |
| 14. | பசு ஒன்று | = | 130.00 |

என்பது பெறப்படுகிறது.

இவ்விலைகளை இதே காலத்தில் சோழநாட்டில் பிற ஒரு சில இடங்களில் இருந்த விலைகளுடன் ஒப்பிட்டு நோக்கினால் தஞ்சையிலும் அதன் புறங்களிலும் விலையேற்றம் இருந்தமை அறியப்பெறும்.

**தஞ்சைக் கல்வெட்டு—பொன் மாற்றும்முத்துக்களும்**

தற்போது 24 காரட் 22 காரட் என்று பொன் மாற்றினைக் குறிப்பிடுகிறோமல்லவா? இராஜராஜன் தந்த பொன்னகைகளும் பிறர் தந்தனவும் எத்தனை 'காரட்' மதிப்புடையன என ஆய்வோம்.

தஞ்சைக் கல்வெட்டுக்களில்,

"தண்டவாணிக்குக் கால்மாற்றுத் தண்ணியபொன்"

என்று பல கல்வெட்டுக்களில் உள்ளது. முதல் குந்தவை மட்டும் தன் கல்வெட்டொன்றில்,

"தண்டவாணிக்குக் கால்மாற்றுத் தண்ணியபொன்"
"தண்டவாணிக்கு ஒருமாற்றுத் தண்ணியபொன்"

என்று இரண்டுவகைகளைத் தந்துள்ளாள்.

'பத்தரை மாற்று' என்னும் பொது அளவை தமிழகத்திலிருந்த தொல்லளவை ஆகும். மாற்றறிவோர் மாற்றுக்காணத் 'தண்டவாணி' என்னும் உரையறியாணியை உபயோகித்தனர். இவ்வாணியால் உரைகாணப்பட்டுப் பத்தரைமாற்றுத் தங்கத் தரத்தில் $\frac{1}{32}$ தரக் கூறுபாட்டுக் குறைவு உடையது[1] தண்டவாணிக்குக் கால்மாற்றுத் தண்ணிய பொன் ஆகும் என்பர்.

---

1. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் — அருஞ்சொற் பொருட் குறிப்பு—சா. கணேசன் பக்கம் 7. தமிழக அரசு தொல்லியல்துறை வெளியீடு.

'கால்மாற்று; ஒருமாற்று' எவை எனக் காண வேறு சில கல்வெட்டுக்கள் துணை புரியும். குலோத்துங்கசோழன் காலச் சாசனங்கள் சிலவற்றில் 'மதுராந்தகன் மாடை' என்பது 1 கழஞ்சு; 9½ மாறி; 2 காசுக்குச் சமம் என்றுள்ளது[1] வேறு ஒரு கல்வெட்டு[2] 9½ மாற்றுடைய 1 கழஞ்சு பொன்னுக்கு 8.66 கழஞ்சு வெள்ளி சமம் என்று கூறும். இவற்றில் இருந்து 9½ மாற்றுடைய பொன் அக்காலத்தில் வழக்கில் இருந்தது என்பது பெறப்பெறும். முதல் குந்தவை நான் அரங்கனியத்தந்த பொன்னில் 1500 கழஞ்சு 'தண்டவாணிக்கு ஒருமாற்றுத் தண்ணியது' என்று கல்வெட்டில் உள்ளது. இது 10½ — 1 மாற்று = 9½ மாற்றுடையது என அறியலாம். இவ்வாறே 'கால்மாற்றுத் தண்ணி'யதற்கும் கணக்கிட்டால் இராஜராஜன் தந்தன 10¼ மாற்றுடையன என்பது பெறப்படும்.

முத்துக்களின் தரம்: இராஜராஜன் மிகவும் விலைமதிப்புடைய முதல்தரமான நவரத்தினங்களைக் கோயிலுக்களித்திருந்தான். அங்கே 'மூலரத்னபண்டாரம்' என்றொரு கருவூலம் இருந்தது. இராஜராஜன், தஞ்சைக் கோயிலுக்குத் தந்த மணிகளைக் குறிப்பிடும்போது 'இரண்டாம் தரத்தில் கோத்த முத்து' என்று காணப்படும். இரண்டாம் தரம் என்பதற்கு 'இரண்டாம் முறை' என்று சாசன ஆய்வாளர் பொருள் கொள்வர். இம்முத்துக்கள் குறைபாடுகள் பலவற்றை உடையன. இவற்றுள் சிலவகையானவை மனிதர் அணியக்கூடாதவை என நூல்களுள் கூறப்படுவன. [எனவே இவ்வகையான முத்துக்களையும் 'வினையின் நீங்கியவனை' இறையவனுக்கு அளித்துள்ளான் இப்பெருமன்னன்.] எவ்வாறாயினும் இரண்டாம் தரத்தில் என்று குறிக்கப் பெறும் முத்துக்கள் தரக்குறைவு உடையவையாக இருத்தலின் தரம்—தரக் கூறுபாடு என்றே பொருள் கொள்ளவேண்டியுள்ளது[3] இராஜராஜன் தந்துள்ள முத்து மாணிக்க வகைகள் அனைத்தும் இந்நூலில் உள்ள அருஞ்சொற்பொருளில் விரிவாகத் தொகுக்கப் பட்டுள்ளன.

**இராஜராஜன் கால வட்டி விகிதம்**

தஞ்சைப் பெருங்கோயிலில் முதற்பொருளாக வைக்கப்பட்டிருந்த காசுகள் வட்டிக்கு விடப்பட்டு அவ்வட்டியால் உரிய நிவந்தங்கள் நடத்தப்பட்டன என்பது இராஜராஜன், இராஜேந்திரன் காலக் கல்வெட்டுக்களில் கண்டது.

வட்டி ஆண்டொன்றுக்கு இவ்வளவு எனப் பெறப்படுவதும் திங்கள் ஒன்றுக்கு இவ்வளவு எனப் பெறப்படுவதும் உண்டு. சுமார் 12½% வட்டி விகிதம் அக்காலத்தில் வழக்கத்தில் இருந்தது என்பதனையும் நாளொன்றுக்கு இவ்வளவு என அவ்வட்டித் தொகை பிரிக்கப்பட்டு வாழைப்பழமாகச் செலுத்தியமையையும் இந்நூலில் உள்ள 25-ஆம் கல்வெட்டுக் காட்டும்.

தஞ்சைக் கல்வெட்டுக்கள் வேறு சிலவற்றால் திங்கள் ஒன்றுக்கு இவ்வளவு அக்கம் என்ற விகிதம் இருந்தமை பெறப்படும். காசு ஒன்றுக்கு 1 மாதத்துக்கு அரைக்கால் அக்கம்—"காசின்வாய்த் திங்கள் அரைக்கால் அக்கப் பொலிசையாக" என்று கூறப்படும். இதுவும் 12½% வட்டியே யாகும்.

---

1. 90 of 1928.
2. 211 of 1922
3. The Pearls of the second Quality - என்பது ஆங்கில மொழிபெயர்ப்பு. S. I. I. Vol. II page 47. para 7.

வட்டித் தொகை நெல்லாகவும் பெறப்படும். காசு ஒன்றுக்கு ஆண்டொன்றுக்கு 3 குறுணி நெல் *ராஜராஜன் காலத்தில் தஞ்சையில் வழங்கிய வட்டியளவாகும். என்பது பல சாசனங்களால் அறியப் பெறுகின்றது.*

*தஞ்சைக் கோயில் சாசனங்கள் சில அக்காலமக்கள் திருமுறை தேவாரங்களில் ஈடுபாடு கொண்டு அப்பெயர்களைத் தம் பெயராகச் சூடிக் கொண்டமையை உணர்த்து கின்றன, தஞ்சைப் பெருநகரில் இருந்த தெருக்களின் பெயர்களை அறியத் துணைசெய் கின்றன. சில இராஜராஜன் கொடுத்த ஊர்களைப் பற்றிக் கூறும் சாசனங்களை ஆராய்ந்தால்* சோழமண்டலத்தில் ஒரு வேலியின் $\frac{1}{52,\ 428,\ 800,\ 000}$ பகுதிகூட அளக்கப்பட்டு நிலவியல் பதிவேடுகளில் பதிவுசெய்யப்பட்டிருந்தமை பெறப்படும்.[1] இந்நூலில் கல்வெட்டெண் 13 இல் உள்ள ஊர்களின் அளவைகள் கூறப்பட்டுள்ள முறையை அச் சாசனத்துள் கூறப்படும் நான்கு ஊர்களைக்கொண்டு விளக்குவோம். *இத்தகைய சான்றுகள்*[2]

| No. | Name of the village. | Extent of the whole land. | Land free from taxes. | Land paying taxes. | Amount of gold. | |
|---|---|---|---|---|---|---|
| | | | | | *kaśu.* | *mañjâḍi.* |
| 1 | Veṇṇi. | $21\frac{1}{2} + \frac{1}{160} + \frac{1}{320}(\frac{2}{20} + \frac{3}{80}) + (\frac{1}{320})^2(\frac{3}{4} + \frac{1}{20})$. | $4\frac{1}{160} + \frac{1}{320}(\frac{2}{20} + \frac{1}{40})$. | $17\frac{1}{2} + \frac{1}{320}(\frac{2}{20} + \frac{1}{80}) + (\frac{1}{320})^2(\frac{3}{4} + \frac{1}{80})$. | 93 | $3\frac{1}{10} + \frac{1}{40}$ |
| 2 | Pûdamaṅgalam. | $25\frac{3}{4} + \frac{2}{20} + \frac{1}{40} + \frac{1}{160} + \frac{1}{320} + \frac{1}{320}(\frac{3}{4} + \frac{3}{20} + \frac{3}{80} + \frac{1}{160}) + (\frac{1}{320})^2 \times \frac{1}{2}$. | $\frac{1}{2} + \frac{3}{20} + \frac{3}{80} + \frac{1}{320} + \frac{1}{320}(\frac{2}{20} + \frac{3}{160} + \frac{1}{320})$. | $25\frac{2}{20} + \frac{3}{80} + \frac{1}{160} + \frac{1}{320}(\frac{2}{20} + \frac{1}{320}) + (\frac{1}{320})^2 \times \frac{1}{2}$. | $246\frac{1}{2}$ | $\frac{3}{10} + \frac{3}{40}$ |
| 3 | Miduvêli. | $3\frac{1}{4} + \frac{1}{160} \times \frac{3}{20}$. | $\frac{2}{20} + \frac{1}{80} + \frac{1}{160} + \frac{1}{320} + \frac{1}{320}(\frac{3}{4} + \frac{3}{20} + \frac{1}{40} + \frac{1}{320}) + (\frac{1}{320})^2(\frac{1}{2} + \frac{3}{20})$. | $3\frac{1}{40} + \frac{1}{320}(\frac{1}{2} + \frac{1}{20} + \frac{1}{160}) + (\frac{1}{320})^2 \times \frac{3}{20}$. | $30\frac{1}{4}$ | $\frac{3}{10} + \frac{3}{40}$ |
| 4 | Nagarakkâri-kuṟichchi. | $2\frac{3}{4} + \frac{1}{20} + \frac{3}{80} + \frac{1}{160} + \frac{1}{320} + \frac{1}{320}(\frac{5}{80} + \frac{1}{160} + \frac{1}{320}) + (\frac{1}{320})^2 \times \frac{4}{20}$. | .... | $2\frac{3}{4} + \frac{1}{20} + \frac{3}{80} + \frac{1}{160} + \frac{1}{320} + \frac{1}{320}(\frac{6}{80} + \frac{1}{160} + \frac{1}{320}) + (\frac{1}{320})^2 \times \frac{4}{20}$. | 28 | $9\frac{7}{10} + \frac{1}{80}$ |
| 5 | Vaḍatâmarai. | $6\frac{3}{4} + \frac{2}{20} + \frac{1}{80} + \frac{1}{320}(\frac{1}{2} + \frac{1}{40} + \frac{1}{320}) + (\frac{1}{320})^2(\frac{1}{2} + \frac{2}{20})$. | $\frac{3}{80} + \frac{1}{160} + \frac{1}{320} + \frac{1}{320} \times \frac{2}{20}$. | $6\frac{3}{4} + \frac{1}{320} + \frac{1}{320}(\frac{3}{20} + \frac{1}{40} + \frac{1}{320}) + (\frac{1}{320})^2(\frac{1}{2} + \frac{3}{20})$. | $64\frac{3}{4}$ | $1\frac{3}{10} + \frac{3}{40}$ |
| 6 | Veṇṇi-Tiṟappâṉpaḷḷi. | $10\frac{1}{2} + \frac{2}{20} + \frac{1}{80} + \frac{1}{160} + \frac{1}{320}(\frac{1}{2} + \frac{3}{20} + \frac{1}{80}) + (\frac{1}{320})^2(\frac{3}{4} + \frac{1}{20})$. | $2\frac{1}{2} + \frac{4}{20} + \frac{3}{80} + \frac{1}{160} + \frac{1}{320} + \frac{1}{320}(\frac{3}{4} + \frac{3}{80} + \frac{1}{80} + \frac{1}{160}) + (\frac{1}{320})^2 \times \frac{3}{20}$. | $7\frac{3}{4} + \frac{2}{20} + \frac{1}{80} + \frac{1}{160} + \frac{1}{320}(\frac{1}{2} + \frac{3}{20} + \frac{3}{80} + \frac{1}{160}) + (\frac{1}{320})^2 \times \frac{3}{20}$. | $77\frac{3}{4}$ | 1 |
| | Total .. | $70\frac{3}{4} + \frac{4}{20} + \frac{1}{40} + \frac{1}{320} + \frac{1}{320}(\frac{4}{20} + \frac{3}{80}) + (\frac{1}{320})^2(\frac{3}{4} + \frac{3}{20})$. | $7\frac{3}{4} + \frac{1}{20} + \frac{1}{40} + \frac{1}{160} + \frac{1}{320}(\frac{3}{4} + \frac{1}{20} + \frac{1}{80} + \frac{1}{320})$. | $63\frac{2}{20} + \frac{3}{80} + \frac{1}{160} + \frac{1}{320}(\frac{2}{20} + \frac{1}{80} + \frac{1}{160} + \frac{1}{320}) + (\frac{1}{320})^2(\frac{3}{4} + \frac{3}{20})$. | 541 | $1\frac{3}{10}$ |

*தமிழகத்தில் நிலவிய நுண்ணிய கணக்கீட்டு முறையைத் தெளிவுறக் காட்டும்· இவற்றை எல்லாம் காணுங்கால் இராஜராஜன் காலத்திய மஹோன்னதமான அரசியல் நிலைமை ஓரளவு புலனாகும்.*

1. S. I. I. Vol. II Intro [6]
2. S. I. I. Vol. II page 66 F. N.

# 2. கல்வெட்டமைப்புமுறை

## I. பொதுச் செய்தி

முதல் ராஜராஜசோழனின் தஞ்சைக் கல்வெட்டுக்களின் அமைப்புமுறையினைச் சுருக்கமாகக் காண்போம்.

**மங்கலச் சொல்**

கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் மங்கலச் சொற்களுடன் தொடங்குவன. சாசனத் தொடக்கத்தில் 'ஸ்வஸ்திஸ்ரீ' 'சுபமஸ்து' 'நமசிவாய' முதலான மங்கலச் சொற்கள் காணப்படும். இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள எல்லாக் கல்வெட்டுக் களும் 'ஸ்வஸ்திஸ்ரீ' என்னும் மங்கலச் சொல்லுடன் தொடங்குகின்றன. இம் மங்கலச் சொற்கு 'மங்களம் உண்டாகட்டும்' என்று பொருள்.

**மங்கலச் சொல்லைத் தொடர்ந்து**

இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள கல்வெட்டுக்களில் மங்கலச் சொல்லை அடுத்துக் கல்வெட்டுத் தொடரும் முறையில் நான்கு வகைகள் உள்ளன. அவை பின் வருமாறு :—

1. 'ஏதத்' எனத் துவங்கும் வடமொழிச் சுலோகமும் மெய்க்கீர்த்தியும் இடம் பெறுதல்.[1]
2. மெய்க்கீர்த்தி மட்டும் இடம்பெறுதல்.
3. 'ஏதத்' எனத் துவங்கும் வடமொழிச் சுலோகம் மட்டும் இடம் பெறுதல்.
4. மேயில் எவையும் இடம்பெறாமை.

**அரசன் பெயர், ஆண்டு**

அரசன் பெயர், ஆட்சியாண்டுடன் கூறப்பெறும். நாள் குறிப்பிடப்படுவதும் உண்டு.

அரசன் இன்ன இடத்தில் இருந்து இத்தானத்தைச் செய்தான் என்று குறிப் பிடுவதும் உண்டு.[2] இந்நூலில் ஒரு கல்வெட்டில் தஞ்சைக்கோயிலில் (அரண்மனை) 'இருமடிசோழன் திருமஞ்சனசாலை' என்னும் பகுதியில் இருந்து தானம் செய்தமை கூறப்பட்டுள்ளது.

இத்தொகுப்பில் உள்ள கல்வெட்டுக்கள் பல 'யாண்டு 29 வரை' என்ற ஆண்டுக் குறிப்புடையனவாகும்.

சில சாசனங்கள் ஓரிடத்தில் இடம் போதாமையால் மற்றொரு இடத்தில் வெட் டப்படுவதுண்டு. அவற்றுள் மங்கலச் சொல்லை அடுத்து (உடனடியாகக்) கல்வெட் டுச் செய்தி தொடரும்.

**கல்வெட்டுச் செய்தி**

ஆட்சியாண்டு கூறும் பகுதியை அடுத்துக் கல்வெட்டில் கூறப்பெறும் கொடைச் செய்தி தெளிவாகக் கூறப்பெறும். கல்வெட்டில் கூறப்பெறும் அளவைக்குரிய எடை கல் முதலானவை முதலிலேயே குறிக்கப்பெறும்.

---

1. எண். 1.
2. சாசனம் எண். 1. காண்க.

"ரத்னத்தின் திருவாபரணங்கள் ... தக்ஷிணமேருவிடங்கன் என்னும் காசுக் கல்லால் நிறை எடுத்தன"

என்பது போல அமையும். இக் கல்வெட்டு இந்த இடத்தில் வெட்டப்பட்டது என்பது போன்ற விவரங்கள் அதன்பின் கூறப்படுவதுண்டு. தானமான்ய விவரங்கள் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளமை இக் கல்வெட்டுக்களின் சிறப்புக் கூறுபாடாகும்.

காப்புரை

சாசன இறுதியில் 'இதனைக் காத்தார் அடி இரண்டும் என்முடிமேலின' என்றோ 'அழிவு செய்தான் இன்ன துன்பமுறுவான்' என்றோ கூறும் பகுதி காப்புரை எனப்படும். இப்பகுதி இத்தொகுப்பில் உள்ள கல்வெட்டுக்கள் எவற்றிலும் இல்லை.

## II. சாசனச் சுலோகம்

முதல் ராஜராஜசோழனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள் நான்கனுள் வடமொழிச் சுலோகம் ஒன்று காணப்பெறுகின்றது. இது 'ஏதத்' எனத் துவங்குவது. 'அனுஷ்டுப்' என்னும் யாப்பாலானது. இச் சுலோகம் ஒரு கல்வெட்டில் மங்கலச் சொல்லுக்கும் மெய்க்கீர்த்திக்கும் இடையில் உள்ளது. வேறு மூன்று கல்வெட்டுக்களில் இச்சுலோகம் மட்டும் உள்ளது (மெய்க்கீர்த்தி இல்லை).

**ஏதத் விஸ்வ ந்ருபஸ்ரேணி**
**மௌலி மாலோப லாளிதம்**
**ஶாஸனம் ராஜ ராஜஸ்ய**
**ராஜ கேஸரி வர்மண:**

என்பது சுலோகம்.

"(தன்னை வணங்கும்) முடிமன்னர் கூட்டத்தினரின் கிரீடங்களின் வைரங்களினால் ஒளிவிளக்கம்பெற்ற (பாதங்களையுடைய) ஸ்ரீ ராஜராஜன் எனப்படும் ராஜகேஸரிவர்மனுடைய சாசனம் இது".

என்பது இதன் பொருள். "ராஜராஜன் ராஜகேஸரி வர்மன் என்னும் பெயரைப் பட்டப்பெயராக மட்டும் கொள்ளாமல் அரசர் பலராரும் வணங்கப்பெற்றமை காரணமாகத் தனக்கேயுரிய சிறப்புப் பெயராகவும் கொண்டிருந்தவன்" என்பது தோன்ற இச் சுலோகம் அமைந்துள்ளது. 'அரசருட் சிங்கம்போன்றவன்' என்று பொருள்படும் இப்பெயர் (ராஜகேஸரி) சோழவரசர் மாறிமாறிச் சூடிக்கொண்ட பொதுச் சிறப்புப் பெயர்கள் இரண்டனுள் ஒன்று (மற்றொன்று பரகேஸரி) ஆகும். சில கல்வெட்டுக்கள் இவனை 'ராஜராஜ கேஸரி' எனறு கூறுதல் இங்கு அறிதற்பாலதாகும்.[1]

இராஜராஜன் காலத்ததான லெய்டன் பட்டயங்கள் இரண்டிலும் இத்தகைய ஸ்லோகம் பட்டயப் பூட்டுவாயில் உள்ள இலச்சினை (Seal) யில் உள்ளது[2] என்பர்.

இச் சுலோகம் இராஜராஜனுடைய தஞ்சைச் சாசனங்கள் நான்கில் மட்டுமே காணப்படும் அரியதொரு சுலோகமாகும்.[3] இவற்றுள் முதலாவது இவனுடைய 26-ஆமாண்டு 20-ஆம் நாளுக்குரிய கல்வெட்டு. ஏனைய 29-ஆமாண்டுக்குரியனவாகும்.

1. 298 of 1908 338 of 1927.
2. Dr. Burgess A. S. S. S I. Vol. IV p 204 and 224 S.I.I. Vol. II part p 8 F.N.
3. நீலகண்ட சாஸ்த்ரியார், Thecolas. பழைய பதிப்பு Part. I உள்ள ராஜராஜன் கல்வெட்டுக்கள் தொகுப்புக் காண்க.

மெய்க்கீர்த்திகளைத் தனக்கெனத் தனியாக வகுத்துக்கொண்டது போலத் தனக்கெனத் தனியானதொரு வடமொழிச் சுலோகத்தையும் இராஜராஜன் கொண்டிருந்தான். இம்முறையில் பிற்காலச் சோழவரசர்க்குத் தனித்தனியாக வடமொழிச் சுலோகங்கள் கல்வெட்டுக்களில் பொறிக்கப்படவில்லை. எனினும் திருவையாறு பஞ்சநதீஸ்வரர் கோயிலில் உள்ள 'தக்ஷிணகைலாசம்' என்னும் ஆலயக் கீழைச் சுவரில்

ஸ்வஸ்திஸ்ரீ

ராஜாத் ராஜன்ய மகுடஸ்ரேணி
ரத்னேஷு சாசனம்
ஏதத் ராஜேந்ர சோளஸ்ய
பரகேஸரி வர்மண:

என்னும் இப்பகுதி கல்வெட்டாக[1] அமைக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் முதல் இராஜேந்திரசோழனுக்கும் ஒரு சாசனச் சுலோகமிருந்தமை அறியப்பெறுகிறதாயினும் அது கல்வெட்டுககளின் தொடக்கத்தில் இடம்பெறவில்லை என்பது இங்கு அறியத்தக்கதொன்றாகும்.

## III. இராஜராஜனின் மெய்க்கீர்த்தி

இராஜராஜன் தன் கல்வெட்டுக்களில் 'மெய்க்கீர்த்தி'யை இடம்பெறச் செய்தான். இராஜராஜன் மெய்க்கீர்த்தித் 'திருமகள் போல' எனத் துவங்குவதாகும். மெய்க்கீர்த்திகள், ஆட்சியாண்டுகள் வளரவளர வளரும் இயல்பு படைத்தவை; வேந்தர்கள் வரலாறு, போர்வென்றிகள் அறியப் பெரிதும் துணைபுரியக்கூடியவை. இராஜராஜன் காட்டிய இம்மெய்க்கீர்த்தி முறையைத் தமிழகத்தை ஆண்ட சோழரும் பாண்டியரும் பின்பற்றினர். மெய்க்கீர்த்தியின் தொடக்கத்தைக் கூறினாலேயே அரசர் இவர் எனக் கூறத்தக்க அளவில் வெவ்வேறு மங்கலச் சொற்களால் மெய்க்கீர்த்திகள் தொடங்கப்பெற்றன. மெய்க்கீர்த்தியின் இலக்கணத்தைச்

சீர்நான் காகி இரண்டடித் தொடையால்
வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்
அந்தத் தவன்வர லாறு சொல்லியும்
அவளுடன் வாழ்கெனச் சொல்லியும் மற்றவன்
இயற்பெயர் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறம்பட உரைப்பது சீர்மெய்க் கீர்த்தி.

என்னும் பாட்டியல் பகுதியால் உணரலாம்.

முதல் இராஜராஜசோழனின் எட்டாம் ஆட்சியாண்டு முதல் (கி.பி. 993) அவனுடைய மெய்க்கீர்த்திச் சாசனங்களில் இடம் பெறுகிறது.

1. S.I.I. Vol. V, எண். 513. 214 of 1894.

திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளி
வேங்கைநாடும் கங்கபாடியும்
குடமலைநாடும் கொல்லமும் கலிங்கமும்
முரட்டொழிற் சிங்களர் ஈழமண்டலமும்
இரட்டபாடி ஏழரை இலக்கமும்
முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும்
திண்டிறல் வென்றித் தண்டாற்கொண்டதன்
எழில்வள ரூழியுள் எல்லா யாண்டும்
தொழுதக விளங்கும் யாண்டே
செழியரைத் தேசுகொள்.
(கோராஜ கேஸரி பன்மரான... ராஜராஜதேவர்)

என்பது மெய்க்கீர்த்தி.

இம் மெய்க்கீர்த்தியில் இராஜராஜனுடைய வெற்றிகள் மிகச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. விளக்கம் வருமாறு:—

**காந்தளூர்ச்சாலை கலமறுத்தல் :** இப்போர் கி.பி. 988-ல் நடந்தது. காந்தளூர்ச் சாலை என்பது திருவனந்தபுரத்தின் ஒரு பகுதி. வலியசாலை என்று கூறுவர். இது ஒரு கடற்கரைப்பட்டினம். இங்குச் சேரருடன் போர் நிகழ்ந்தது. இராஜராஜன் காலத்துச் சேரவரசனை 'பாஸ்கரரவிவர்மன்' இராஜராஜனுடைய தூதனை 'உதகை' என்ற இடத்தில் சிறையிலிட்டான். ஆகையால் இராஜராஜன், காந்தளூர்ச் சாலையில் போர் நிகழ்த்தி வென்றான்; இப்போரில் சேரமன்னது மரக்கலங்களை (கப்பற் படையை) அழித்தான்.

சிலர் 'சாலை' என்பதற்கு 'உணவுச்சாலை' என்றும், 'கலமறுத்தல்' என்பதற்கு 'இத்தனை மாணவர்க்கு உணவு அளிக்கலாம் என்று வரையறை செய்தல்' எனவும் தருவர். இவ்வுரை பொருந்தாது என்பர் சிலர்.

**வேங்கிநாட்டுப்போர் :** வேங்கைநாடு என்பது கிருஷ்ணை கோதாவரியாறுகட்கு இடையில் கீழ்க் கடலைச் சார்ந்து அமைந்தநாடு. அங்குக் கீழைச் சாளுக்கியர் ஆண்டு வந்தனர். சக்திவர்மன் என்பான் தன் தாயத்தினரால் நாடிழந்து இராஜராஜனை உதவி கேட்டான். இராஜராஜன் வேங்கிநாட்டிற்குத் தெற்கேயுள்ள நாடுகளை வென்று கி.பி. 999-ல் வேங்கிநாட்டரசனையும் வென்று சக்திவர்மனை வேங்கிநாட்டு அரசனாக்கினான். (வேங்கிநாடு சோழர் ஆட்சிக்கு உட்படுத்தப்பெறவில்லை.)

**கங்கபாடி :** மைசூர்ப்பகுதிக்குத் தெற்கு, சேலம் ஜில்லாவின் வடக்கு ஆகிய நிலப் பகுதியைத் தன்னகத்துக் கொண்டது இதன் தலைநகர் தலைக்காடு.

**நுளம்பபாடி :** மைசூர்ப்பகுதியின் கிழக்கும், பெல்லாரி ஜில்லாவும் அடங்கிய நிலப்பகுதி.

**தடிகைபாடி :** மைசூர்ப்பகுதியைத் தன்னகத்துக்கொண்ட நிலப்பகுதி.

**குடமலைநாடு :** இந்நாளில் குடகு என்று இது வழங்கப்பெறும். பணசோகே என்ற இடத்தில் போர் நடந்தது.

**கொல்லம் :** சேரனோடு நடத்திய இரண்டாம் போர் இது.

**கலிங்கம் :** கோதாவரியாற்றிற்கும் மகாநதிக்கும் இடையில் வங்காள விரிகுடாக் கடலைச் சார்ந்த நிலப்பகுதி. அங்கு விமலாதித்தன் என்பான் ஆண்டுவந்தான். அவன் வேங்கிநாட்டு அரசனாகிய விமலாதித்தனுக்கு இடையூறு விளைவித்தான் போலும். ஆகவே இராஜராஜனது மகன் இராஜேந்திரன் கலிங்க நாட்டின்மேல் படையெடுத்து வென்றான்.

**ஈழத்துப்போர் :** ஈழ மண்டலம் என்று இலங்கை குறிக்கப்பட்டுள்ளது. 'முரட்டொழில் ஈழமண்டலம்' என்றும், 'எண்டிசை புகழ்தர ஈழமண்டலம்' என்றும் கல்வெட்டுக்களில் கூறப்படுவதால், சிங்களர் மிக்க ஆற்றலுடன் போர் செய்தனர் என்று அறியலாம். ஈழத்தில் அந்நாளில் ஆண்டவன் ஐந்தாம் மகிந்தன் என்பவன் ஆவன். இப்படையெழுச்சி 991-இல் நிகழ்ந்தது. ஐந்தாம் மகிந்தன் தோற்று, ஈழ மண்டலத்தின் தென்பகுதியிலுள்ள ரோகணத்துக்கு ஓடிவிட்டான். ஈழத்தின் வடபகுதி சோழர் ஆட்சிக்கு உள்ளாயிற்று.

**இரட்டபாடி ஏழரையிலக்கம் :** இரட்டபாடி என்பது துங்கபத்திரை யாற்றுக்கு வடக்குக்கரையில் இருந்த நிலப்பகுதி. ஏழரையிலக்கம் என்றமையால் இப்பகுதி 7½ இலக்கம் ஊர்களையுடையது; அல்லது 7½ இலக்கம் வருவாய் உடையது என்று பொருள்படும். இது ஏறத்தாழக் கி.பி. 1007-ல் மேலைச்சாளுக்கியரோடு, இராஜராஜன் காலத்தில் இராஜேந்திரனால் நடத்தப்பெற்ற போராகும்.

**முன்னீர்ப்பழந்தீவு பன்னீராயிரம் :** இராஜராஜனது போர்ச்செயல்களுள் இறுதியில் நிகழ்ந்தது. முன்னீர்ப்பழந்தீவு பன்னீராயிரமும் கைப்பற்றுதற்பொருட்டு நிகழ்ந்த போரேயாகும். இது அரபிக்கடலில் உள்ள மால் தீவுகளைக் குறிக்கும். தான் வென்ற சேரநாட்டுக்கு இப் பழந்தீவிலிருந்தவர்களால் ஏற்பட்ட இடையூறுகளை நீக்குதற்பொருட்டு இராஜராஜன் தனது பெரிய கப்பற்படையினுதவியால் இத் தீவுகளைக் கைப்பற்றினான்.

இனிச் **"செழியரைத் தேசுகொள்"** என்றமையான் பாண்டியர்களை வென்றமையும் அறியப்படும். செழியர் என்று பன்மையிலுள்ளமையின் இவனால் வென்றடக்கப்பட்ட பாண்டியர்கள் ஒருவரின் மேற்பட்டவராதல் வேண்டும் என்றறியலாம். திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் குறிக்கப்பட்ட அமரபுயங்கன் என்பான், அப்பாண்டியர்க்குத் தலைவனாதல் கூடும். சேரர்களோடு போர் புரியச் சென்றபோது இடையில் மறித்தவன் இவ்வமரபுயங்கன்; இவனை வென்றடக்கிய பிறகே சேரவரசனோடு இராஜராஜன் போர்புரிந்தான்.

# 3. அளவைகள்

## 1. பொன் முதலியன நிறுத்தலவை

(கல்வெட்டெண் 1,8,9, 10)

| | |
|---|---|
| 4 நெல்லெடை | — 1 குன்றிமணி |
| 2 குன்றிமணி | — 1 மஞ்சாடி |
| 2 மஞ்சாடி | — 1 பணவெடை |
| 10 பணவெடை | — 1 கழஞ்சு |
| 8 பண எடை | — 1 வராகனெடை |
| 4 கழஞ்சு | — 1 கஃசு |
| 4 கஃசு | — 1 பலம் |

## 2. நீட்டல் அளவு

(கல்வெட்டெண் 2-7)

| | |
|---|---|
| 8 எள் | = 1 நெல் |
| 8 நெல் | — 1 விரல் ( $\frac{3}{4}$") |
| 12 விரல் | — 1 சாண் ( 9") |
| 2 சாண் | — 1 முழம் (18") |
| 4 முழம் | — 1 பாகம் |

## 3. பெய்தல் அளவை

(கல்வெட்டெண் 13-15)

| | |
|---|---|
| 360 நெல் | — 1 செவிடு |
| 5 செவிடு | — 1 ஆழாக்கு |
| 2 ஆழாக்கு | — 1 உழக்கு |
| 2 உழக்கு | — 1 உரி |
| 2 உரி | — 1 படி |
| 8 படி | — 1 மரக்கால் or குறுணி |
| 2 குறுணி | — 1 பதக்கு |
| 2 பதக்கு | — 1 தூணி |
| 5 மரக்கால் | — 1 பறை |
| 80 பறை | — 1 கரிசை |
| 48=96 படி | — 1 கலம் |
| 3 தூணி | — 1 கலம் |
| 120 படி | — 1 பொதி |

ஆதாரம்: கையேடு பக்கம் 287. (சா. கணேசன்) நீலகண்டசாஸ்திரியார்—சோழர் வரலாறு—தொகுதி 2. பகுதி 1. பக்கம் 461-2.

# 4. தொல்லெழுத்து—சிலசெய்திகள்

இச் சாசனத் தொகுப்பில் உள்ள 25 கல்வெட்டுக்கள் சிலவற்றின் 'மைப்'படங்களின் புகைப்படங்கள் (Estampage Photographs) அருகில் வெளியிடப்பெற்றுள்ளன. அவற்றில் அமையும் எழுத்து முறைகள் இருவகையின.

**1, தமிழ் எழுத்து**

இன்றைக்கு 1000 ஆண்டுகளுக்கு முன்னுல் தமிழகத்தில் வழங்கிய 'தாமிளி' எனவும் 'அசோகன் பிராமியின் தென்னுட்டமைப்பு முறை' எனவும் 'லேனு எழுத்துக்கள்' எனவும் கூறப்பெறும் எழுத்துக்களின் வளர்ச்சியே இன்றைய தமிழ் வரிவடிவங்களாகும். பிராமி தமிழகத்தில் 'தமிழ்' 'வட்டெழுத்து' என இருவகையாக வளர்ந்தமையைச் 'செங்கம் நடுகற்கள்' பலவற்றின் எழுத்துக்கள் காட்டும். 'பிராமியின்' வளர்ச்சிநிலையினவாகிய தமிழ் எழுத்துக்களே இராஜராஜன் காலத் தமிழ் எழுத்துக்களாகும்.

**2. கிரந்த எழுத்து**

வடமொழி எழுத்துக்களை எழுதத் தமிழர் கையாண்ட தனி ஒரு வரிவடிவ எழுத்துக்கள் 'தமிழ்க் கிரந்தம்' எனப்படும். இவையும் 'அசோகன் பிராமி'யில் இருந்து வளர்ந்தவையாகும். சோழ, பாண்டிய, பல்லவ சமஸ்கிருத சாசனங்கள் பெரும்பாலும் இவ்வெழுத்திலேயே அமைந்துள்ளன. தமிழ்ச் சாசனங்களின் இடையிடையிடையே வரும் வடசொற்கள் யாவும் இவ்வெழுத்துக்களிலேயே எழுதப்பெறும். இன்று நம் மனைவராலும் சாதாரணமாகக் கையாளப்படும் ஜ, ஷ ஸ ஹ ஶ முதலான எழுத்துக்கள் யாவும் பழங்கிரந்த எழுத்துக்களின் வளர்ச்சி வடிவங்களேயாகும். இராஜராஜன் காலச் சாசனங்களில் காணப்பெறும் சுலோகமும் வடசொற்களும் இவ்வெழுத்துக்களிலேயே எழுதப்பட்டுள்ளன.

இராஜராஜன் காலச் சாசன எழுத்துக்களை நன்கறியவேண்டுமானுல் அதற்கு முன்னும் பின்னும் வழங்கிய எழுத்து வடிவங்களில் பயிற்சிதேவை. இப்பயிற்சியை அளிக்கத்தக்க 'ப்ராசீனலிபிமாலா' என்னும் நூலில் இருந்து எடுக்கப்பட்ட சில படங்கள் இதன்பின் வெளியிடப்பட்டுள்ளன.

இந் நூலில் உள்ள சாசனமூலங்களை அவற்றின் மைப்படப் புகைப்படங்களுடன் ஒப்பிட்டு நோக்குதல், எழுத்து வளர்ச்சிமுறைபற்றி விளக்கப் பிரசுரிக்கப்பட்டுள்ள புகைப்படங்களை நன்கறிதல், அதன்பின் கோயில்களில் உள்ள சோழர்காலக் கல்வெட்டுக்களை எழுத்துவளர்ச்சிப் பட்டியல் துணையுடன் படிக்க முயலுதல் முதலானவற்றைப் புரிந்தால் தொல்லெழுத்தில் பயிற்சிபெறுதல் கைகூடுவதாகும்.

# I தமிழ் எழுத்து.

## வளர்ச்சி நிலை.

### 1. பரமேசுவர வர்மனின் கூரம் செப்பேடு



### 2. நந்திவர்ம பல்லவரின் — காசாக்குடி பட்டயம்.



### 3. நந்தி வர்மன் — உதயேந்திரம் செப்பேடு



7. முதல் ராஜேந்திரன் — திருமலை சாசனம்.




8. பர்மா தேசக் கல்வெட்டுகள்




9. விஜயநகர சாசனங்களில்







நூற்றாண்டு
Century
அ
ஆ
இ
ஈ
உ
ஊ
எ
ஏ
ஐ
ஒ
ஓ
கி.மு. 3
கி.பி. 2
கி.பி. 3
கி.பி. 4
கி.பி. 5
கி.பி. 6
கி.பி. 7
கி.பி. 8
கி.பி. 9
கி.பி. 10
கி.பி. 11
கி.பி. 12
கி.பி. 13
கி.பி. 14
கி.பி. 15
கி.பி. 16
கி.பி. 17
கி.பி. 18
கி.பி. 19


நூற்றாண்டு
Century
க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன்
கி.மு. 3
கி.பி. 2
கி.பி. 3
கி.பி. 4
கி.பி. 5
கி.பி. 6
கி.பி. 7
கி.பி. 8
கி.பி. 9
கி.பி. 10
கி.பி. 11
கி.பி. 12
கி.பி. 13
கி.பி. 14
கி.பி. 15
கி.பி. 16
கி.பி. 17
கி.பி. 18
கி.பி. 19

கிரந்த எழுத்து

தற்கால வடிவம்

ग्रन्थ लिपि.



## IV கிரந்த எழுத்துக்கள் வளர்ச்சி நிலை

### 1. மாமல்லபுரம் கல்வெட்டு



### 2. ராஜசிம்மன் - காஞ்சி சாசனம்



### 3. கூரம் செப்பேடு



### 4. மாமல்லை - அதிரணசண்டேச்சுரம்



## V கிரந்தம் — வளர்ச்சிப் பட்டியல்.



## தமிழ் எண்ணும், இலக்கமும். கல்வெட்டுக்களில் கண்டவண்ணம்

[சா. கணேசன்]

| இந்திய எண் அல்லது அராபிய 1 எண் | A.D. 2.C. கி.பி 2.ம் | A.D. 3.C கி.பி 3.ம் | A.D 4.C. கி.பி. 4.ம் | A.D. 10 C. கி.பி. 10.ம். பாண். | A.D. 11.C. கி.பி. 11 ம சோ. | A.D. 13.C. கி.பி. 13.ம் சோழ | A.D. 15.C. கி.பி 15.ம். பாண் | A.D. 18.C. கி.பி. 18.ம | A.D 20.C இன்று |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1/16 | ? | ? | ? | ഡ | ഡ | ഡ | ഡ | ഡ | ഡ |
| 1/8 | ? | ? | ? | ஹு | ஹு | ஹு | ஹு | ஹு | ஹு |
| 1/4 | ? | ? | ? | வ | வ | வ | வ | வ | வ |
| 1/2 | ? | ? | ? | ரு | ரு | ஓ | இ | இ | இ |
| 3/4 | ? | ? | ? | ஒத | ஒத | ஒத | ஒத | ஜ | ஜ |
| 1 | — | \ | \ | + | + | Ŧ | க | க | க |
| 2 | = | \\ | \\ | 2 | 2 | 2 | 2 | உ | உ |

# இலக்கம்–எண் எழுத்துக்கள்

## Numerals and Figures

| | | | |
|---|---|---|---|
| வந | முந்திரி | Mundiri | 1/320 |
| ே | அரைக்காணி | Araikkāṇi | 1/160 |
| ேவந | அரைக்காணி முந்திரி | Araikkāṇi Mundiri | 3/320 |
| 8 | காணி | Kāṇi | 1/80 |
| ஜே | கால் வீசம் | Kálviśam | 1/64 |
| சு | அரைமா | Araimā | 1/40 |
| சூ | அரை வீசம் | Araiviśam | 1/32 |
| சூ | முக்காணி | Mukkāṇi | 3/80 |
| சூஉ | முக்கால் வீசம் | Mukkālviśam | 3/64 |
| ப | ஒருமா | Orumā | 1/20 |
| ல | மாகாணி (வீசம்) | Mākāṇi (Viśam) | 1/16 |
| ஒ | இருமா | Irumā | 1/10 |
| ஹ | அரைக்கால் | Araikkāl | 1/8 |
| ஹ | மூன்றுமா | Mūṇrumā | 3/20 |
| ஙூ | மூன்று வீசம் | Mūṇṛuviśam | 3/16 |
| சப | நாலுமா | Nālumā | 1/5 |
| வ | கால் | Kāl | 1/4 |
| இ | அரை | Arai | 1/2 |
| ஞ | முக்கால் | Mukkāl | 3/4 |
| ௧ | ஒன்று | Oṅṛu | 1 |
| ௨ | இரண்டு | Iraṅḍu | 2 |
| ௩ | மூன்று | Mūṅṛu | 3 |
| ௪ | நான்கு | Nāṅgu | 4 |
| ௫ | ஐந்து | Aindu | 5 |
| ௬ | ஆறு | Āru | 6 |
| ௭ | ஏழு | Ēḷu | 7 |
| ௮ | எட்டு | Eṭṭu | 8 |
| ௯ | ஒன்பது | Oṅpadu | 9 |
| ௰ | பத்து | Pattu | 10 |

# பின்ன எண்கள்

| | | |
|---|---|---|
| ஒத | முக்கால் | $\frac{3}{4}$ |
| ஒ | அரை | $\frac{1}{2}$ |
| வ | கால் | $\frac{1}{4}$ |
| கு | நாலுமா | $\frac{1}{5}$ |
| ஙி | மும்மா முக்காணி அல்லது மூன்று வீசம் | $\frac{3}{16}$ |
| ஙு | மும்மா | $\frac{3}{20}$ |
| ஹ | அரைக்கால் | $\frac{1}{8}$ |
| உ | இருமா | $\frac{1}{10}$ |
| ப8 | மாகாணி அல்லது வீசம் | $\frac{1}{16}$ |
| ப | ஒருமா | $\frac{1}{20}$ |
| கூ | முக்காணி | $\frac{3}{80}$ |
| சு | அரைமா | $\frac{1}{40}$ |

4. பாலபாடம்—பக்—291, 2

| | | |
|---|---|---|
| ஃ | காணி | $\frac{1}{80}$ |
| ப | அரைக்காணி | $\frac{1}{160}$ |
| வத | முந்திரி | $\frac{1}{320}$ |
| கி தை | கீழ் முக்கால் | $\frac{3}{1,280}$ |
| கி ற | கீழரை | $\frac{1}{640}$ |
| கீ வ | கீழ்க்கால் | $\frac{1}{1,280}$ |
| கி சு | கீழ் நாலுமா | $\frac{1}{1,600}$ |
| கி ஙு | கீழ் மூன்று வீசம் | $\frac{3}{5,120}$ |
| கி ங | கீழ் மும்மா | $\frac{3}{6,400}$ |
| கி ஷு | கீழரைக் கால் | $\frac{1}{2,560}$ |
| கி உ | கீழிருமா | $\frac{1}{3,200}$ |

| | | |
|---|---|---|
| கீ_பஉ | கீழ்வீசம் | $\frac{1}{5,120}$ |
| கீ_ப | கீழொருமா | $\frac{1}{6,400}$ |
| கீ_கூ | கீழ்முக்காணி | $\frac{3}{25,600}$ |
| கீ_சு | கீழரைமா | $\frac{1}{12,800}$ |
| கீ_உ | கீழ்காணி | $\frac{1}{25,600}$ |
| கீ_ப | கீழரைக்காணி | $\frac{1}{51,200}$ |
| கீ_வத | கீழ்முந்திரி | $\frac{1}{1,08,400}$ |
| | இம்மி | $\frac{1}{10,75,200}$ |
| | அதிகாரம் | $\frac{1}{18,38,400}$ |



தஞ்சைப் பெரிய கோயில் வெளிபுறத் தோற்றம். © A.S.I. சென்னை



கேரளாந்தகன் திருவாசல் — முதல்கோபுரம் © A.S.I. சென்னை



இராஜராஜன் திருவாயில் -- இரண்டாம் கோபுரம் © A.S.I. சென்னை



தஞ்சைப் பெரிய கோயில் ஸ்ரீவிமானம் © A.S.I. சென்னை.



ஸ்ரீவிமானம் — உட்புறமிருந்து எடுக்கப்பட்ட காட்சி. கட்டுமான நுட்பம் காட்டுவது

© A.S.I. சென்னை



சண்டேசர் ஆலயம் — ராஜராஜன் காலம் © பிரென்ச் இந்தியக் கலைக் கழகம்,
பாண்டிச்சேரி.



ஆடவல்லார் — ராஜராஜன் எழுந்தருள் வித்தது © A.S.I. சென்னை



ஆடவல்லார் — வழிபடுசிலை © தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டுத் துறை



நந்தி மண்டபம் © தமிழக அரசு தொல்லியல் துறை



பெரிய கோயிலில் உள்ள போகசக்தி — ராஜராஜன் காலம்

© பிரென்ச் இந்தியக் கலைக்கழகம், பாண்டிச்சேரி



திரிபுராந்தகர் — தஞ்சைக் கலைக்கூடம்.
'தஞ்சையழகர் இது' என்பர் ஆய்வாளர்
© தமிழக அரசு தொல்லியல் துறை



ராஜராஜன் ஓவியம்—தஞ்சை — முகத்தோற்றம்.
© தமிழக அரசு
தொல்லியல் துறை



தஞ்சைப் பெரிய கோவிலில் உள்ள ராஜராஜன் பிரதிமம்.

© தமிழக அரசு | தொல்லியல் துறை



தஞ்சைப் பெரிய கோயில் ஓவியங்களில் ராஜராஜனும் மனைவியரும்

© A.S.I. சென்னை



இராஜ ராஜனும் கருவூர்த் தேவரும் — தஞ்சை ஓவியம்



இராஜராஜன் — கௌதம சாராபாய் அருங் காட்சியகம்

—From South Indian Bronzes — By சிவராமமூர்த்தி



உலோகமஹாதேவி

— From South Indian Bronzes — By சிவராமமூர்த்தி



ராஜராஜனும் லோகமஹாதேவியும் — திருவிசலூர் சிற்பம்—திருப்பணிக்குப்பின்
© பிரெஞ்ச் இந்தியக் கலைக்கழகம், பாண்டிச்சேரி



ஷ சிற்பம்—திருப்பணிக்கு முன் © தமிழக அரசு தொல்லியல் துறை



இராஜராஜன் — ஆக்கூர். © பிரெஞ்ச் இந்தியக் கலைக் கழகம், பாண்டிச்சேரி



சிவபாதசேகரன் ஸ்ரீ ராஜராஜனுன் — திருக்கோடிகா பிரெஞ்ச் பாண்டிச்சேரி




கருவூராரும இராஜராஜனும் தஞ்சை சரஸ்வதிச்சிலையின் அருகில் உள்ளது.



சரஸ்வதி

சுவரும்—இராஜராஜனும் புடைப்புச்சிற்பமும்

© பிரெஞ்ச் இந்தியக் கலைக்கழகம், பாண்டிச்சேரி




ஓவியங்கள் அமையும் அந்தராளத் திருச்சுற்று — தஞ்சை © A.S.I. சென்னை



திருமுறை ஓதுவோர் — தஞ்சை ஓவியம் © A.S.I. சென்னை



நாட்டிய மகளிர்—தஞ்சை ஓவியம்     © A.S.I. சென்னை





வித்யாதரர் — தஞ்சை ஓவியம் © A.S.I. சென்னை



சுந்தரர் திருமணச் சமையல் — ஓவியம் © A.S.I. சென்னை



சிவபெருமான் வேதியராக வருகிறார் — ஓவியம் © A.S.I. சென்னை



தடுத்தாட்கொள்ள வாதிடுதல் — ஓவியம்     © A.S.I. சென்னை




சுந்தரர் யானையேறிக் கயிலைசெல்லல் © A.S.I. சென்னை



சேரமான் பெருமாள் குதிரை ஏறிக் கயிலைசெல்லல் © A.S.I. சென்னை



தில்லை நடராசர்—தஞ்சை ஓவியம்  © A.S.I. சென்னை



மனைவியருடன் ராஜராஜன் வணங்குதல் © A.S.I. சென்னை



கயிலைக் காட்ச்சி—ஒரு பகுதி © A.S.I. சென்னை




நாட்டியச் சிற்பத்தில் ஒன்று — © A.S.I. சென்னை




பாசுபதாஸ்திரக் காட்சி · © A.S.I. சென்னை




கருவூர்த்தேவர்—பிற்காலம்　　© A.S.I. சென்னை



ஸ்ரீவிமானத்தில் சிவபாதசேகரன் கல்வெட்டு © A.S.I. சென்னை

உ
ஸ்வஸ்திஸ்ரீ

# சிவபாதசேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள்







தஞ்சைப் பெரிய கோவிலுக்கு முதல் ராஜராஜசோழன் அளித்த
அறக்கொடைகளைக் கூறும்
கல்வெட்டுக்கள்
மூலமும் செய்திச் சுருக்கமும்



கல்வெட்டு மூலங்கள் சிலவற்றின் எதிரில் தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள மூல சாசனத்தின் மைப்படியின் நிழற்படம் வெளியிடப்பட்டுள்ளது. பழங்கால எழுத்துக்களைப் பயில விரும்புவோர் தற்கால எழுத்தில் அச்சிடப்பட்டுள்ள கல்வெட்டு மூலத்தையும் வெளியிடப்பட்டுள்ள அதன் மைப்படியினையும் ஒப்புநோக்கிக் கற்றால் சோழர்காலத் தொல்லெழுத்தியலில் மிக எளிதில் தேர்ச்சி பெறல் கூடும்.

## கல்வெட்டெண். 1

## (S.I.I. Vol. II. No. 1.)

தஞ்சைப்பெருவுடையார் கோயில் ஸ்ரீ விமானத்தின் வடபுறச் சுவரிலும் மேற்புறச் சுவரிலும் இக்கல்வெட்டு வெட்டப்பெற்றுள்ளது. இது முதல் இராஜராஜ சோழனின் 26-ஆம் ஆட்சியாண்டு (கி.பி. 1110) இருபதாம் நாளுக்குரிய கல்வெட்டாகும். இதுவே தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் முற்பட்டதாகும்.

சாசனம் ஸ்வஸ்திஸ்ரீ எனத் துவங்குகிறது. அதனையடுத்து இராஜராஜனுக்குரியதொரு வடமொழிச் சுலோகம் காணப்படுகிறது. அதன்பின் மெய்க்கீர்த்தியும் கல்வெட்டும் தொடர்கின்றன.

கல்வெட்டில் இராஜராஜன் தஞ்சைப் பெரிய கோயிலுக்குப் பொன்னாலான அணிகலன்களும் பரிகலன்களும் அளித்தமை விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இதனுள் இராஜராஜன் தனது

| | | | | |
|---|---|---|---|---|
| 25-ஆம் | ஆட்சியாண்டு | 312-ஆம் | நாளிலும் | |
| 26 | ,, | ,, | 14 ,, | ,, |
| 26 | ,, | ,, | 27 ,, | ,, |
| 25 | ,, | ,, | 275 ,, | ,, |
| 26 | ,, | ,, | 104 ,, | ,, |
| 26 | ,, | ,, | 318 ,, | ,, |
| 26 | ,, | ,, | 319 ,, | ,, |

23-ஆமாண்டு முதல் 29-ஆமாண்டுவரையிலும்

தஞ்சைக் கோயிற்களித்த கொடைகள் ஒன்றன்பின் ஒன்றாகச் சொல்லப்பட்டுள்ளன.

இவன் தந்த கொடைகளுள் • முற்பட்டதாக (25-ஆம் ஆண்டு 275-ஆம் நாள்) உள்ளது. பெரியகோயில் விமானத்துச் செம்பின் ஸ்தூபித்தறியில் வைக்கப் பொன்னாலான தகடுகள் பொதிக்கப்பட்ட செப்புக்குடம் தந்தமையே ஆகும். இதனால் இந்நாளில் கோயிற்பணி முற்றுப்பெற்றமை புலனாகும்.

இவன் பொன்னாலாகிய இரண்டு விக்கிரஹங்களைச் செய்தளித்தமை இதனுட் கண்டது. அவை, 1. ஸ்ரீபலி எழுந்தருளும் பொன்னின் கொள்கைத் தேவர் 2. க்ஷேத்ரபால தேவர் என்பனவாகும்.

பொன்னை நிறுக்கப் பயன்படுத்தப்பட்ட காசுக் கல் தில்லைக்கூத்தன் பெயரால் 'ஆடவல்லான்' என்று வழங்கப்பட்டமையும் இராஜராஜன் மேலைச்சாளுக்கிய அரசன் சத்யாச்ரயனை வென்றபின் பொற்பூக்கள் அட்டிப்பெருவுடையார் திருவடி தொழுதமையும் கோயிற்குத் தரப்பட்ட பொற்காளங்கட்குச் 'சிவபாத சேகரன்' எனவும் 'ஸ்ரீ இராஜராஜன்' எனவும் பெயரிடப்பட்டிருந்தமையும் இக் கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ளது.

இக்கல்வெட்டு இராஜராஜனுடைய 26-ஆமாண்டு 319-ஆம் நாளில் கல்லில் வெட்டப்பட்டுள்ளது. தான் தந்த கொடைகளைக் கல்லில் பொறிக்குமாறு இதேயாண்டு 20-ஆம் நாளில் அரசன் உத்தரவிட்டிருக்கிறான். இக் கல்வெட்டில் இவனுடைய 23-ஆமாண்டு முதல் இவ்வரசன் தந்த தானங்கள் குறிக்கப்பட்டுள்ளன. இவற்றைக் காணுங்கால், இராஜராஜன் கோயில் பணி முழுமை பெறும் முன்னமேயே தஞ்சைப் பெருவுடையாருக்குப் பொன்னும் வெள்ளியும் தந்தான் என்பதும் அத் தானங்கள் எல்லாம் தொகுக்கப்பட்டுக் கல்லில் வெட்டப்பட்டன என்பதும் பெறப்படும்.

## TEXT.

### A. North wall.

*First section.*

[1.] ஸ்வஸ்தி ஸ்ரீ: [||*] ஸகல புவநாஸ்ரய ஸ்ரீமேதிநீவல்லப மஹாராஜாதி-
ராஜராஜஸ்ய ராஜகேஸரிவர்ம்மண: ||— [க*] திருமகள் போலப்பெருநிலச்-
செல்வியுந்தனக்கெயுரிமெ பூ-

[2.] ண்டமெ மநக்கொளக்காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளி வெங்கைநாடுங்கங்கபாடியுந்-
தடிகைபாடியும் நுளம்பபாடியுங்குடமலைநாடுங்கொல்ல-

[3.] முங்கலிங்கமும் எண்டிசை புகழ் தர ஈழமண்டலமும் இரட்டபாடி ஏழரை
இலக்கமுந்திண்டிறல் வென்றித்தண்டாற்கொண்ட தன்னெழில் வளரூ-

[4.] ழியுளெல்லாயாண்டுந்தொழுதக விளங்கும் யாண்டெ செழியரைத்தெசு கொள்
கொராஜகெஸரிவர்ம்மரான ஸ்ரீராஜராஜதெவர்க்கு யாண்டு இ-

[5.] ருபத்தாறாவது நாள் இருபதினால் உடையார் ஸ்ரீராஜராஜதெவர் தஞ்சாவூர்க்-
கொயிலினுள்ளால் இருமடிசொழநின் கிழெத்திரும-

[6.] ஞ்சநசாலை டாகஞ்செய்தருளாவிருந்து பாண்டிகுலாஸநிவளநாட்டுத்தஞ்சாவூர்க்கூற்-
றத்துத்தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி

[7.] ஸ்ரீராஜராஜீஸ்வரமுடையார்க்கு நாங்குடுத்தநவும் அக்கன் குடுத்தநவும் நம் பெ-
ண்டுகள் குடுத்தநவும் மற்[று]ம் குடுத்த[ா]ர் குடுத்தநவும்

*Second section.*

[1.] ஸ்ரீவிமாநத்தில்க்கல்லிலெ வெட்டுக என்று திருவாய் மொழிந்தருள வெட்-
டிந [உ*]

[2.] யாண்டு இருபத்தெஞ்சாவது நாள் முன்னூற்றிருபத்திரண்டினால் உடையார்

[3.] ஸ்ரீராஜராஜதெவர் குடுத்த ஸ்ரீபலி எழுந்தருளும் பொன்னின் கொள்கெதெவர்

[4.] ஒருவர் ஆடவல்லானென்னுங்கல்லால் நிறை எண்ணூற்றிருபத்தொன்பதின் க-

[5.] ழஞ்செய் முக்காலெய் மூன்று மஞ்சாடி — [கூ*] நாளதினாலெய் குடுத்த
பொன்னின் வ-

[6.] ஸ்தாலஸ்ரீபலித்தாலம் ஒன்று மெற்படி கல்லால் நிறை கொளாயிரத்துத்தொ-

[7.] ண்ணூற்றெய்ங்கழஞ்சரையெ நாலு மஞ்சாடி — [ச*] யாண்டு இருபத்தாறாவது
நாள் பதிநாலி-

## *Third section.*

[1.] னால் உடையார் ஸ்ரீராஜராஜதேவர் குடுத்த பொன்னின் திருப்பட்டம் ஒன்று
ஆடவல்லானென்னுங்கல்லால் நிறை நானூற்றுத்தொண்ணூற்றொன்பதி-
[2.] ன் கழஞ்சு — [௫*] நாளதிலுலெய் குடுத்த பொன்னின் திருப்பட்டம் ஒன்று
மேற்படி கல்லால் நிறை நானூற்றுத்தொண்ணூற்று நாற்கழஞ்சரையெய்
இரண்டு
[3.] மஞ்சாடி — [௬*] நாளதிலுலெய் குடுத்த பொன்னின் திருப்பட்டம் ஒன்று
மேற்படி கல்லால் நிறை நானூற்றெண்பத்து நாற்கழஞ்சே கால் — [௭*]
நாளதிலுலெ கு-
[4.] டுத்த பொன்னின் திருப்பட்டம் ஒன்று மேற்படி கல்லால் நிறை நானூற்றுத்-
தொண்ணூற்றெழுகழஞ்சரை — [௮*] நாளதிலுலெய் குடுத்த பொன்னின் திருப்ப-
[5.] ட்டம் ஒன்று மேற்படி கல்லால் நிறை நானூற்றுத்தொண்ணூற்றொருகழஞ்-
சரை — [௯*] நாள் இருபத்தேழினால் உடையார் ஸ்ரீராஜராஜதேவர் சிறுதனத்-
[6.] துக்குடுத்த பொன்னின் தளிகை ஒன்று ஆடவல்லானென்னும் கல்லால் நிறை
அறுநூற்றைம்பத்திருகழஞ்செய் எட்டு மஞ்சாடி — [௰*] நாளதி-
[7.] லுலெய் குடுத்த பொன்னின் தளிகை ஒன்று மேற்படி கல்லால் நிறை
நானூற்றுத்தொண்ணூற்று முக்கழஞ்செய் கால் — [௰௧*] நாளதிலுலெய் குடுத்த

## *Fourth section.*

[1.] பொன்னின் மண்டை ஒன்று மேற்படி கல்லால் நிறை முன்னூற்றுத்தொண்-
ணூற்றெழுகழஞ்சே ஆறு
[2.] மஞ்சாடி — [௰௨*] நாளதிலுலெ குடுத்த பொன்னின் மண்டை ஒன்று மேற்படி
கல்லால் நிறை முன்னூற்-
[3.] றுத்தொண்ணூற்று முக்கழஞ்செய் மஞ்சாடி — [௰௩*] நாளதிலுலெய் குடுத்த
பொன்னின் மண்டை ஒன்று
[4.] மேற்படி கல்லால் நிறை முன்னூற்றுத்தொண்ணூற்றெண்கழஞ்செய் குன்றி —
[௰௪*] நாளதிலுலெய் குடு-
[5.] த்த பொன்னின் மண்டை ஒன்று மேற்படி கல்லால் நிறை முன்னூற்றுத்-
தொண்ணூற்று அறுகழஞ்சு — [௰௫*]
[6.] நாளதிலுலெய் குடுத்த பொன்னின் கெண்டி ஒன்று மேற்படி கல்லால் நிறை
இருநூற்றெண்பத்து நா-
[7.] ற்கழஞ்சரை — [௰௬*] நாள் முப்பத்து நாலினால் உடையார் ஸ்ரீராஜரா[ஜ]தே-
வர் சிறுதனத்துக்குடுத்த பொன்னி-

## *Fifth section.*

[1.] ன் தட்டம் ஒன்று ஆடவல்லானென்னுங்கல்லால் நிறை நாற்பதின் கழஞ்செய்
கால் — [௰௭*] யாண்டு இருபத்தைஞ்சாவது நாள் இருநூற்றெழுபத்தைஞ்சினால்
உடையார் ஸ்ரீராஜராஜதேவர் ஸ்ரீராஜராஜீஸ்வரமுடையார் ஸ்ரீவிமானத்துச்செம்-
பின் ஸ்தூபித்தறியில் வைக்கக்குடுத்த செப்புக்குடம் ஒன்று
[2.] நிறை மூவாயிரத்து எண்பத்து முப்பலத்தில் சுருக்கின தகடு பல பொன் ஆ-
டவல்லானென்னுங்கல்லால் நிறை இரண்டாயிரத்துத்தொளாயிரத்து இருபத்தறு-
கழஞ்சரை — [௰௮*] யாண்டு இருபத்தாறாவது நாள் நூற்று நாலினால் உடை-
யார் ஸ்ரீராஜராஜதேவர் ஸ்ரீராஜராஜீஸ்வரமுடையார்க்குக்குடுத்த பொ-
[3.] ன்னின் கிடாரம் ஒன்று ஆடவல்லானென்னும் கல்லால் நிறை பதினோராயி-
ரத்து எழுநூற்று நாற்பத்து இருகழஞ்சு — [௰௯*] நாளதிலுலெய் குடுத்த பொ-
ன்னின் ஒட்டுவட்டில் ஒன்று மேற்படி கல்லால் நிறை நானூற்று எண்பத்-
தெண்கழஞ்சு — [௨௰*] நாளதிலுலெய் குடுத்த பொன்னின் கல-

[4.] சம் ஒன்று மெற்படி கல்லால் நிறெ ஐஞ்ஞூற்று எழுகழஞ்சு — [௨௧*] நாளதி-
ருவெய் குடுத்த பொன்னின் கலசம் ஒன்று மெற்படி கல்லால் நிறெ நா-
னூற்றெண்பத்து முக்கழஞ்சு — [௨௨*] நாளதிருவெய் குடுத்த பொன்னின் கல-
சம் ஒன்று மெற்படி கல்லால் நிறெ நானூற்றுத்தொ-
[5.] ண்ணூற்று இருகழஞ்[சு —] [௨௩*] நாளதிருவெய் குடுத்த பொன்னின் கலசம்
ஒன்று மெற்படி கல்லால் நிறெ நானூற்றுத்தொண்ணூற்றிருகழஞ்செ கால் —
[௨௪*] நாளதிருவெய் குடுத்த பொன்னின் கலசம் ஒன்று மெற்படி கல்லால்
நிறெ ஐஞ்ஞூற்றொருபத்திருகழஞ்சரை — [௨௫*] நா-
[6.] ளதிருவெய் குடுத்த ெ[பா]ன்னின் படிக்ச[ம்] ஒன்று கால் மூன்றும் வளையில்
இரண்டும் உள்ப்பட மெற்படி கல்லால் நிறெ எண்ணூற்றிருகழஞ்சரை —
[௨௬*] நாளதிருவெய் குடுத்த பொன்னின் தட்டம் ஒன்று மெற்படி கல்லால்
நிறெ நாற்பத்தொன்பதின் கழஞ்செ முக்கால் — [௨௭*] நாளதிரு-
[7.] வெய் கு[டு]த்த பொன்னின் தட்டம் ஒன்று மெற்படி கல்லால் நிறெ நாற்-
பத்தொன்பதின் கழஞ்செ முக்கால் — [௨௮*] நாளதிருவெய் குடுத்த பொன்னின்
தட்டம் ஒன்று மெற்படி கல்லால் நிறெ ஐம்பதின் கழஞ்சு — [௨௯*] நாள-
திருவெய் குடுத்த பொன்னின் தட்டம் ஒன்று மெற்படி கல்லால் நிறெ

*Sixth section.*

[1.] நாற்பத்தொன்பதின் கழஞ்செ முக்காலெ இரண்டு மஞ்சாடியுங்குன்றி — [௩௰*]
நாளதிருவெ-
[2.] ய் குடுத்த பொன்னின் குறுமடல் ஒன்று மெற்படி கல்லால் நிறெ தொண்-
ணூற்-
[3.] று எழுகழஞ்சு — [௩௧*] நாளதிருவெய் குடுத்த பொன்னின் மாகவட்டில் ஒன்று
மெற்படி
[4.] கல்லால் நிறெ இருபதின் கழஞ்சு — [௩௨*] யாண்டு இருபத்தாறுவது நாள்
முன்னூற்றொருபத்தெட்டினால் கு-
[5.] டுத்த உடையார் கோயிலில் முழத்தின் கீழ் வெள்ளியின் ஸ்ரீபாதபீடம் ஆறு
தொரை உசரமும் நால் வி-
[6.] ரலெ ஆறு தொரைச்சுற்றும் உடைய பொன்னின் க்ஷேத்ரபாலதேவர் [பா]தா-
திகேஶாந்தம் மூ-
[7.] விரலெ மூன்று தொரை உசரமும் நாலு ஸ்ரீஹஸ்தத்திலும் பிடிச்சருளின ஶூல-
மும் கபாலமு-
[8.] ம் வாளமும் கேடகமும் வெள்ளியின் ஸ்ரீபாதபீடமும் உள்பட நிறை எழுபத்-
திருகழஞ்சரை [௩௩*]

*Seventh section.*

[1.] உடையார் ஸ்ரீராஜராஜதேவர் சேரமானையும் பாண்டியர்களையும் மலைநாட்டு எறிந்து
கொண்ட பண்டாரங்களில் யாண்டு இருபத்தாறுவது நாள் முன்-
[2.] னூற்று ஒருபத்தொன்பதினால் ஸ்ரீராஜராஜேஶ்வரமுடைய பரமஸ்வாமிக்குக்குடுத்த
ெ[பா]ன்னின் சின்னங்கள் ஆடவல்லான் என்னும் கல்லா-
[3.] ல் நிறையெடுத்து கல்லில் வெட்டினபடி [௩௪*] காளாஞ்சி ஒன்று பொன்
ஐஞ்ஞூற்று எண்பத்து அறுகழஞ்சு — [௩௫*] காளாஞ்சி ஒன்று பொன்
அறுநூ-
[4.] ற்று இருபத்து இருகழஞ்சரை — [௩௬*] குடம் ஒன்று பொன் முன்னூற்று
எண்பத்து இருகழஞ்சரை — [௩௭*] குடம் ஒன்று பொன் முன்னூற்று
அறுபத்து எழு-

[5.] கழஞ்சு — [௩௮*] குடம் ஒன்று பொன் முன்னூற்று ஐம்பத்து இருகழஞ்சு — [௩௯*] குடம் ஒன்று பொன் இருநூற்றுத்தொண்ணூற்று நாற்கழஞ்சு — [௪௰*] கறண்டிகைச்-
[6.] செப்பு ஒன்று அடியும் மூழலும் உட்பட பொன் நூற்று இருபத்து ஒருகழஞ்-சரை — [௪௧*] இலைச்செப்பு ஒன்று யாளிக்கால் நாலும் மூழலும் உட்பட பொ-
[7.] ன் நூற்று எண்பத்து ஐங்கழஞ்செ முக்கால் — [௪௨*] இலைச்செப்பு ஒன்று யாளிக்கால் நாலும் [மூ]ழலும் உட்பட பொன் நூற்று நாற்பத்து எழு-கழஞ்சு — [௪௩*]
[8.] தளிகை ஒன்று அடியுட்பட பொன் ஆயிரத்து ஒருநூற்று முப்பத்து ஐங்கழஞ்ச-ரை — [௪௪*] கல[சப்பா]னை ஒன்று [மூ]க்கும் அடியும் உட்பட பொன் நானூற்று எ-

## *Eighth section.*

[1.] ழுபதின் கழஞ்சு — [௪௫*] கலசப்பானை ஒன்று மூக்கும் அடியும் உட்பட பொன் நானூ-
[2.] ற்று முப்பத்து எண்கழஞ்சு — [௪௬*] பொன்னின் கொடி தூக்கத்தில் தலையில் தைச்ச
[3.] பூப்பதினாறு உட்பட எட்டினால் பொன் எழுபத்து எண்கழஞ்செய் முக்கால் [௪௭*] தா-
[4.] ளத்தாள்வட்டில் ஒன்று கருக்கிரண்டும் சிங்கபாதமிரண்டும் உட்பட பொன் நா-
[5.] னூற்று நாற்பத்து எண்கழஞ்சு — [௪௮*] திருமுடி ஒன்று பொன் இருநூற்று எழு-
[6.] பத்து முக்கழஞ்சு — [௪௯*] ஈச்சொப்பிக்கை ஒன்று பொன் இருநூற்று நாற்கழ-
[7.] ஞ்சு — [௫௰*] யாண்டு இருபத்து மூன்றாவது முதல் யாண்டு இருபத்தொன்-பதாவது
[8.] வரை ஸ்ரீராஜராஜீஸ்வரமுடைய பரமஸ்வாமிக்கு உடையார் ஸ்ரீராஜராஜதே-

## *Ninth section.*

[1.] வர் தம் பண்டாரங்களிலும் சேரமானையும் பாண்டியர்களையும் மலைநாட்டு எறிந்து கொண்ட பண்டாரங்களிலும் குடுத்த பொன்னின் சின்ன-
[2.] ங்களும் பொன்னின் திருவாபரணங்களும் உள்ளிட்டன யாண்டு இருபத்தைஞ்-[ச]ாவதும் யாண்டு இருபத்தாறாவதும் இந்த ஜகதிப்படையில் இதனுக்கு முன் கிழக்கடைய கல்லில்
[3.] வெட்டின நீக்கி நின்றன ஆடவல்லானென்னுங்கல்லால் நிறை எடுத்து கல்லில் [வெ]ட்டினபடி — [௫௧*] சேரமானையும் பாண்டியர்களையும் மலைநாட்டு எறிந்து கொண்ட பண்டாரங்களில் குடு-
[4.] த்தன [௫௨*] ஈச்சொப்பிக்கைய் ஒன்று பொன் முப்பத்து நாற்கழஞ்சு — [௫௩*] ஈச்சொப்பிக்கைய் ஒன்று பொன் முப்பத்து முக்கழஞ்சு — [௫௪*] சிவபாதசே-கரனென்றும் ஸ்ரீராஜராஜனென்றும் திருநாமம் வாங்-
[5.] கி கங்கில் ஒன்றும் குழல். இரண்டும் மோதிரம் ஐஞ்சும் உடைய பொன்னின் காளங்கள் — [௫௫*] காளம் ஒன்று பொன் இருநூற்றுத்தொண்ணூற்று நாற்-கழஞ்சரை — [௫௬*] காளம் ஒன்று பொன் இருநூற்று-
[6.] த்தொண்ணூற்று ஐங்கழஞ்செய் கால் — [௫௭*] காளம் ஒன்று பொன் இரு-நூற்றுத்தொண்ணூற்று அறுகழஞ்செய் முக்காலே இரண்டு மஞ்சாடி — [௫௮*] காளம் ஒன்று பொன் இருநூற்றுத்தொண்ணூற்று அறுக-

[7.] முஞ்சாடியாக இரண்டுநால்[1] பொன் ஐஞ்ஞூற்றுத்தொண்ணூற்று முக்கழஞ்சு [—] [௫௯*] காள[ம்] ஒன்று பொன் இருநூற்றுத்தொண்ணூற்று நாற்கழஞ்செய் ஒன்[ப]து மஞ்சாடியுக்குன்றி — [௬௰*] காளம் ஒன்று

[8.] பொன் இருநூற்றுத்தொண்ணூற்றுக்கழஞ்செய் முக்கால் — [௬௧*] காளம் ஒன்று பொன் இருநூற்று எண்பத்து அறுகழஞ்செய் மூன்று மஞ்சாடியு[க்குன்றி] [௬௨*] [கா]ளம் ஒ[ன்]று பொன் இருநூற்றுத்தொண்ணூற்று

## B. West wall.

### *First section.*

[1.] எண்கழஞ்சரையெயிரண்டு மஞ்சாடி — [௬௩*] காளம ஒன்று பொன் இருநூற்று எண்பத்து எழுகழஞ்செய் முக்காலெ நாலு மஞ்சாடியுங்குன்றி — [௬௪*] பண்டாரங்களில் குடுத்தன [௬௫*] காளம் ஒன்று பொன் நூற்று

[2.] அறுபத்து எண்கழஞ்செய் கால் — [௬௬*] காளம் ஒன்று பொன் நூற்று அறுபத்து எண்கழஞ்சு — [௬௭*] ஒற்றை கங்கில் ஒன்றும் குழல் ஒன்றும் உள்பட பொன் நூற்று நாற்பத்து ஒன்பதின் கழஞ்சரை-

[3.] யெ மூன்று மஞ்சாடி — [௬௮*] அடுத்து விளக்கின மொட்டும் பறளையும் உட்பட திருப்பள்ளித்தொங்கல் மகுடங்கள் — [௬௯*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழஞ்சரையெ இ-

[4.] ரண்டு மஞ்சாடியும் குன்றியுக் மூன்றிலால் பொன் நூற்று நாற்பத்து எண்கழஞ்செய் முக்காலெயிரண்டு மஞ்சாடியுங்குன்றி — [௭௰*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின்

[5.] கழஞ்செ முக்காலாக[2] ஐஞ்சினால் பொன் இருநூற்று நாற்பத்து எண்கழஞ்செய் முக்கால் — [௭௧*] . திருப்பள்ளித்தொங்க[ல்] மகுடம் ஒன்று பொன் ஐம்பதின் கழஞ்சாக இரண்டினால். பொன் நூற்றுக்-

[6.] கழஞ்சு — [௭௨*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்[ப]தின் கழஞ்சாக இரண்டினால் பொன் தொண்ணூற்று எண்கழஞ்சு — [௭௩*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன்

[7.] ஐம்பத்து ஒருகழஞ்சு — [௭௪*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழஞ்செ எழுமஞ்சாடியுங்குன்றியாக இரண்டினால் பொன் தொண்ணூற்று எண்கழஞ்செய் முக்கா-

[8.] ல் [—] [௭௫*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் ஐம்பதின் கழஞ்செ இரண்டு மஞ்சாடியுங்குன்றி — [௭௬*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து எண்கழஞ்செ முக்கால் — [௭௭*] திருப்ப-

[9.] ள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் ஐம்பதின் கழஞ்செ முக்காலெ இரண்டு மஞ்சாடியுக்குன்றி — [௭௮*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் ஐம்பதின் கழஞ்செ முக்காலாக இரண்டினால் பொன்

### *Second section.*

[1.] நூற்று ஒருகழஞ்சரை — [௭௯*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழ-

[2.] ஞ்சரை — [௮௰*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழஞ்செ ஆறு மஞ்-

[3.] சாடி — [௮௧*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழஞ்செ கால் — [௮௨*] திருப்பள்-

[4.] ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் நாற்பத்து எண்கழஞ்சரை [—] [அ௩*] திருப்பள்ளித்தொங்கல் மகுடம்

[5.] ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழஞ்செ இரண்டு மஞ்சாடியுங்குன்றி — [அ௪*] திருப்பள்ளித்தொங்கல்

[6.] மகுடம் ஒன்று பொன் நாற்பத்து எண்கழஞ்செ முக்காலெ இரண்டு மஞ்சாடி-யுங்குன்றி — [அ௫*] திருப்ப-

[7.] ள்ளித்தொங்கல் மகுடம் ஒன்று பொன் ஐம்பதின் கழஞ்செ மஞ்சாடி — [அ௬*] திருப்பள்ளித்தொங்கல்

[8.] மகுடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழஞ்செ முக்காலெ இரண்டு மஞ்சாடியுங்குன்றியாக மூன்றினு-

[9.] ல் பொன் நூற்று நாற்பத்து ஒன்பதின் கழஞ்சரையெ இரண்டு மஞ்சாடியுங்-[கு]ன்றி [—] [அ௭*] யவஉூஷதர்ஃ

*Third section.*

[1.] ஃகூஉடிஃ மொட்டு அடுத்து விளக்கின பறளையுட்பட ஐஞ்சினால் பொன் ஐம்பதின் கழஞ்சு — [அஅ*] வண்ணிகைத்திருக்கொற்றக்குடை மகுடம் மொட்டு அடுத்து விளக்கின பறளை

[2.] உள்ப்பட ஒன்று பொன் பதினெங்கழஞ்சரையெ இரண்டு மஞ்சாடியுங்குன்றி — [அ௯*] இலைத்தட்டு ஒன்று பொன் தொளாயிரத்துத்தொண்ணூற்று ஐங்கழ-ஞ்சு — [௯௰*] இலைத்த-

[3.] ட்டு ஒன்று பொன் தொளாயிரத்து எண்பத்து எண்கழஞ்சு — [௯க*] லக்ஷ்ரா-ஞயனை எறிஞு எழுந்தருளி வந்து ஸ்ரீவாடிவஉூஷமாக அட்டித்திருவடித்தொழு-தன [௯உ*] திருப்பொற்பூ

[4.] ஒன்று பொன் பதின் கழஞ்சாக இரண்டினுற்பொன் இருபதின் கழஞ்சு — [௯௩*] திருப்பொற்பூ ஒன்று பொன் ஒன்பதின் கழஞ்செய் முக்காலெ நாலு மஞ்சாடியுங்குன்றியாக பன்னிர-

[5.] ண்டினுற்பொன் நூற்று ஒருபத்து ஒன்பதின் கழஞ்சரையெ நாலு மஞ்சாடி — [௯௪*] திருப்பொற்பூ ஒன்று பொன் ஒன்பதின் கழஞ்செய் முக்காலெ நாலு மஞ்சாடியாக திருப்பொற்பூ-

[6.] ப்பத்தினாற்பொன் தொண்ணூற்று ஒன்பதின் கழஞ்சரை — [௯௫*] திருப்பொற்பூ ஒன்று பொன் ஒன்பதின் கழஞ்செய் முக்காலெ மூன்று மஞ்சாடியுங்குன்றி — [௯௬*] திருப்பொற்பூ ஒன்று

[7.] பொன் கழஞ்செய் முக்காலெ மஞ்சாடி — [௯௭*] தாமரைச்செயல் திருப்பொற்பூ ஒன்று பொன் பதின் முக்கழஞ்செய் ஆறு மஞ்சாடி — [௯அ*] தக்ஷிணமேரு-விடங்கர்க்குச்சார்த்தி அருள-

[8.] க்குடுத்தன — [௯௯*] அஞ்சடுத்து விளக்கின திரள்மணிவடம் ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழஞ்செய் எழுமஞ்சாடியுங்குன்றி — [௱*] ஒப்பன் திருக-கைக்காறை ஒன்று பொன் ஐம்பத்து

[9.] ஒருகழஞ்சரை — [௱க*] ஒப்பன் திரு[க்]கைக்காறை ஒன்று பொன் நாற்பத்து ஐங்கழஞ்சரையெ இரண்டு மஞ்சாடி — [௱உ*] ஒப்பன் திருக்கைக்காறை ஒன்று பொன் நாற்பத்து ஒன்பதின் கழஞ்செய்

*Fourth section.*

[1.] முக்காலெ இரண்டு மஞ்சாடியுங்குன்றி — [௱௩*] ஒப்பன் திருக்கைக்காறை ஒன்று பொன் நாற்பத்து ஐங்கழஞ்செய் முக்கால் — [௱௪*]

[2.] ஒப்பன் திருவடிக்காறை ஒரிணை பொன் தொண்ணூற்று அறுகழஞ்சரை[ர] [௱௫*] [தி]ருப்பட்டிகை ஒன்று பொன் நூற்று நாற்பத்து

[3.] ஒன்பதின் கழஞ்செய் கால் — [ாகூ*] சேரமானையும் பாண்டியர்களையும் மலைநாட்டு
[எ]றிந்து[1] கொண்ட பண்டாரங்க-

[4.] ளில் பொன் கொண்டு செய்து குடுத்த திருப்பட்டம் ஒன்று பொ[ன் ெ]ராளா-
யிரத்து எண்பத்து ஒருகழஞ்செய் கால் — [ாஎ*]

## கல்வெட்டுச் செய்தி

இராஜராஜசோழன் தனது 26-ஆவது ஆட்சியாண்டில் 20-ஆம் நாளன்று தஞ்சாவூர் அரண்மனையில் இருந்த 'இருமடிசோழனின் கிழைத் திருமஞ்சன சாலையில்' வீற்றிருந்து தானம் செய்து,

"பாண்டிய குலாசனி வளநாடு (ஜில்லாவுக்குச் சமமான பரப்பு) என்ற பகுதியில் இருக்கும் தஞ்சாவூர்க் கூற்றத்தில் உள்ள தஞ்சாவூரில் நாம் எடுப்பித்த திருக்கற்றளி யான ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்கு

நாம் கொடுத்தவற்றையும்
அக்கன் (அக்காள்) கொடுத்தவற்றையும்
நம் பெண்டுகள் கொடுத்தவற்றையும்
மற்றும் கொடுத்தார் கொடுத்தனவற்றையும்
ஸ்ரீ விமானத்தில் கல்லிலே வெட்டுக"

என்று உத்தரவு பிறப்பித்தான். அவ்வுத்தரவின்படி வெட்டப்பட்ட இக்கல்வெட்டில் கண்ட கொடைகள் பின்வருமாறு:—

இராஜராஜசோழன் தன் 25-ஆமாண்டு 312-ஆம் நாளில் ஸ்ரீ பலிகொள்ளும் காலத்துப் புறப்பாடு செய்யப்படுவதற்காகப் 'பொன்னின் கொள்கைத்தேவர்' (பலிகொள்ளும் மூர்த்தி) திருவுருவினைப் பொன்னால் செய்தளித்தான். இதே நாளில் 'ஸ்ரீ பலித்தாலம்' ஒன்றும் தந்தான்.

இவன் தன் 25-ஆமாண்டு 275-ஆம் நாளில் பெரிய கோயில் ஸ்ரீ விமானத்தில் உள்ள செம்பினாலான ஸ்தூபித்தறியில் வைப்பதற்காக ஒரு செப்புக்குடம் தந்தான். இது 3083 பலம் (107 கிலோ 905 கிராம்) எடையுடையது. இதன்மேல் பொன்னாலான தகடுகள் பொதிக்கப்பட்டிருந்தன. இப் பொன்னின் எடை 3926½ கழஞ்சு (3 கிலோ 590 கிராம் எடை) ஆகும்.

இவன் 26-ஆமாண்டு 318-ஆம் நாளில் பொன்னாலான 'க்ஷேத்ரபால தேவர்' திருமேனியினை எழுந்தருள்வித்தான். இது பாதாதி கேஸாந்தம் 3 விரல் 3 தோரை உயரமுடையது. சூலம், கபாலம், பாசம், டமருகம் ஏந்திய நான்கு திருக்கரங்களை யுடையது. இதற்கு 6 தோரை உயரம் 4 விரல் 6 தோரை சுற்றளவும் உடைய வெள்ளி யாலான ஒரு ஸ்ரீ பாதபீடம் செய்தளிக்கப்பட்டது. பீடம் உட்பட இதன் நிறை 72½ கழஞ்சாகும்.

இக் கல்வெட்டில் இவன் 26-ஆமாண்டில் பொன்னாலான திருப்பட்டங்கள் (நெற்றிப் பட்டம்)-5; தளிகை (நைவேத்ய பாத்ரம்)-1; மண்டை (கபாலம்)-4; கெண்டி செம்பு)-1; (அகல் வாயுடைய) கிடாரம்-1; ஒட்டுவட்டில் (லேசான வட்டப் பாத்திரம்)-1: கலசம் (செம்பு)-5; படிக்கம்-1; தட்டம் (தாம்பாளம்)-3; குறுமடல் (விபூதிமடல்)-1; மானவட்டில் (புனுகு கிண்ணம்)-1 ஆகியவற்றைத் தந்தமை கூறப் பெற்றுள்ளது.

ஸ்ரீ இராஜராஜன் சேரமானையும் பாண்டியரையும் மலைநாட்டையும் வென்று கைப்பற்றிய கருவூலங்களில் இருந்து கிடைத்த பொன்னால் தன் 29-ஆமாண்டு 311-ஆம் நாளில் ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடைய பரமஸ்வாமிக்குப் பொன்னினாலான அடையாளச் (சின்ன)ங்களாகக் காளாஞ்சி (அர்க்யவட்டை)-2; கறண்டிகைச் செப்பு (சுண்ணாம்புக் கறண்டிகை)-1; இலைச் செப்பு (வெற்றிலைப் பாத்ரம்)-2; தளிகை-1; கலசப்பானை (மூக்குள்ள கெண்டி)-2; பொன்னின் கொடி-2; தாமரைத் தாள்வட்டில் (தாராபிஷேகம் துளையுடைய குழிவட்டில்)-1; திருமுடி-1; ஈச்சொப்பிகை (ஈயோட்டி)-1 முதலியவை தரப்பெற்றன.

இவன் 23-ஆம் ஆண்டு முதல் 29-ஆமாண்டுவரை தந்தனவற்றுள் இதற்குமுன் கல்லில் பொறிக்கப்பெற்றன நீங்கலாக உள்ளன ஈச்சொப்பிகை 2-உம்; 'சிவபாத சேகரன்' என்றும் 'ஸ்ரீ ராஜராஜன்' என்றும் பெயரிடப்பட்டனவும் 'கங்கில் ஒன்றும் குழல் இரண்டும் மோதிரம் ஐந்தும்' உடையனவுமான காளம் (எக்காளம்) 15-ம்; ஒற்றைக்கங்கில் 1-உம்; திருப்பள்ளித் தொங்கல் மகுடம் (ஹாரங்கள் தொங்கும் கிரீடம்) 21-உம்; தவளசத்ர மகுடம் 1-உம்; வண்ணிகை திருக்கொற்றக்குடை 1-உம்; இலைத் தட்டு 1-உம் ஆகும்.

இராஜராஜன், மேலைச்சாளுக்கிய அரசன் சத்யாச்ரயனை வென்றபின் ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரமுடையார்க்குத் திருப்பொற்பூக்கள் 20-உம்; பொன்னாலான தாமரைப்பூ ஒன்றும் ஸ்ரீ பாதபுஷ்பமாகவைத்துப் பெருவுடையார் திருவடி தொழுதனன் என்பது இதனுள் கண்டது.

இவன் தான் எழுந்தருள்வித்த தக்ஷிணமேருவிடங்கர்க்குத் திரள்மணிவடம், திருக்கைக்காறை, திருகாற்காறை, திருப்பட்டிகை முதலானவற்றை அளித்துள்ளான்.

இக் கல்வெட்டில் இராஜராஜன் தந்துள்ள பொன்னணி மற்றும் பாத்திரங்கள் 40042$\frac{3}{4}$ கழஞ்சு 1 குன்றி எடையுடையன. இவை சுமார் 87 கிலோ 593 கிராம்கள் ஆகும். இவற்றின் மொத்த விலைமதிப்பு சுமார் 15766832 ரூபாய்களாகும்.

## கல்வெட்டெண். 2

(S.I.I. Vol. II, No. 29.)

இக் கல்வெட்டுத் தஞ்சைப் பெரிய கோயில் கோபுரத்தின் வலதுபுறம்-கிழக்குத் திருச்சுற்றில் உள்ளதொரு தூணில் வெட்டப்பட்டுள்ளது. இது இராஜராஜன் தன் 29-ஆமாட்சியாண்டில் சண்டிகேச்வரர்க்குத் திருமேனி எழுந்தருள்வித்தமையை விரிவாகக் கூறுகிறது. திருமேனியின் அளவுகள் முழத்தால் (தஞ்சைக்கோயிலில் வழங்கியது கிஷ்கு முழம்) அளந்து தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளன.

அறுபத்துமூவரில் ஒருவரான சண்டிகேஸ்வர நாயனார் வரலாற்றை விளக்கும் வண்ணம் இரு தொகுதிகளாக இத்திருமேனி எழுந்தருள்விக்கப்பட்டுள்ளது. முதல் தொகுதியில் சிவலிங்கம் (மணலிலிங்கம்) சிவாபராதம் செய்து தண்டிக்கப்பட்டு விழுந்து கிடக்கும் தந்தையார், சண்டேஸ்வரர் திருமேனிகளும்; இரண்டாம் தொகுதியில் சண்டேஸ்வரரின் திறம்வியந்து கொன்றைமாலை சூட்டுபவராகச் சிவபெருமானும் ஏற்பாராக அடியவரும் எழுந்தருள்விக்கப்பட்டுள்ளனர். இவ்வரிய திருமேனிகளைச் செம்பில் வடித்து எழுந்தருள்வித்துள்ளமை அடியவர் வரலாற்றில் இராஜராஜனுக்கு இருந்த தோய்வையும் ஆய்வையும் அறிவுறுத்துவதாகும்.

தாழை கருமாணியும் [த]ாழை திருவெங்கடமும் உடன்பிறந்த காரி நார[ா]யணனும்
ஆடவல்லானால் நிசதம் அளக்கக்கடவ செய் [உ]ழக்கு [||—] [சயகூ*] தஞ்சாவூர்[ப்]புறம்-
படி உய்யக்கொண்டான்தெரிந்ததிருமஞ்சனத்தார்வெளத்து இருக்கும் இடையன்
84 அரையன் பர[ம]யனுக்கு நித்தவினோதவளநாட்டு ஆவூர்க்கூற்றத்துச்செம்பங்குடிச்செம்[ப]-
ங்குடையான அமுதன் தேவனை ராஜவித்யாதரவிழுப்பரையன் தன்னை உடையார்
ஸ்ரீராஜராஜதேவர் சொழிப்பொரில ஊத்தை[த அட்]டாமல் என்று கடவ திருவி[ள]க்-
குக்கு தந்த காசில் குடு[த்]த காசு எட்டினால் ஆடு இருபத்து நாலும் ஸேநாபதி குரவன்
[உ]லகளா[க]தானை ராஜராஜ[வி]ஜயராஜனீ தன்னை உடையார் ஸ்ரீராஜராஜதெ[வ]ர்
சொழிப்பொரில் ஊத்தை அட்டாமல் என்று கடவ திருவிளக்குக்கு தந்த பசுவில்
அடுத்த பசு முப்பத்தாறி-
85 னால் ஆடு எழுபத்திர[ண்]டும் ஆக ஆடு தொண்ணூற்றாறினால் திரு[வி]ளக்கு ஒன்றினு[க்]கு
இவன் தானும் இவன் அடைகுடி தஞ்சாவூர்ப்புற[ம்]படி (உய்யக்[கொ]ண்டான்தெரிந்த-
திருமஞ்சனத்தாரவெளத்து) இருக்கும் இடையன் தி . . . . . கயனும் இ[வ்]-
வெளத்து இ[ரு]க்கும் இடையன் கருப்[பன்] கண்டனும் இவ்வெளத்திருக்கும் இடையன்
காடன் [கூ]த்தனும் [1] [வ]ளநாட்டு ஏரியநாட்டுக்கருவுகல்வல்லத்-
திருக்கும் இடையன் பாப்பான் பணையனும் ஆடவல்லானால் நிசதம் [அ]ளக்கக்கடவ
செய உழக்கு |||— [சயக*] ராஜராஜவளநாட்டுகீழ்வெங்கைநாட்டு
86 க்ஷத்ரியசிகாம[ணி]புரத்[து] இருக்கும் இடையன் மாறன் குட்டத்தாழிக்கு உடையார் ஸ்ரீ-
ராஜராஜதெ[வ]வர் திருவிளக்குக்கு தந்த பசு[வி]ல் அடுத்த ப[சு] முப்பத்து நாலினால் ஆடு
அறுபத்தெட்டும் நாகன் று ஒன்றினால் ஆ[டு] ஒன்றும் திரும[ந்திரஒ]லை ராஜ-
கேஸரி[ந]ல்லூர் கி[ழவ]ன் காருயில் [எ]டுத்தபாதம் [தி]ருவிளக்குக்கு தந்த காசில்
குடுத்த காசு நாலினால ஆடு பன்னி[ர]ண்டும் சோ[ண]கள சாவூர் பரஞ்சோதி திருவி-
ளக்குக்கு தந்த காசில குடுத்த காசு ஐஞ்சினால் ஆடு பதினைஞ்சும் ஆக ஆடு தொ[ா]ண்-
ணூற்றாறினால் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானு[ம்] இவ-
87 ன் அடைகுடி ராஜராஜவளநாட்டுக்கீழ்வெங்கைநாட்டு க்ஷத்ரியசிகாமணிபுரத்து இருக்கும்
இடையன் சாத்தன் காரியும் இவ்வூர் இருக்கும் இடையன் கம்பன் தத்தையம் இவ்வூர்
இருக்கும் இடையன் குளிர்கொ[யி]ல் காடனும் இவ்வூர் இருக்]கும் [இ]டையன் [ஐயா]-
ற[ன்] தாழ்[வடு]கனும் ஆடவல்லானால் நிசதம் அளக்[க]க்கடவ செய் உழக்கு [||—]
[சயகு*] வளநாட்டு [3] மியசெங்கிளிநாட்டுக்கிள்ளிகுடி இருக்கும் இடை-
[யன பா]ளூர் ஆயிரவனுக்கு பொய்கைநாடுகிழவன் ஆதித்தன் [ஸூ]ர்யனான தெ-
ன்னவன் மூவேந்தவேளான் திருவிளக்குக்[கு] த-
88 ந்த காசில் குடுத்த காசு இருபத்தெட்டினால் ஆடு எண்பத்து நாலும் திருமந்திரவோலை ராஜ-
கேஸரிநல்[லூ]ர் கிழவ[ன்] காருயில் எடுத்தபாதம் திருவிளக்குக்கு தந்த காசில் குடுத்த
காசு நாலினால் ஆட்டு [1] பன்னிரண்டும் ஆக ஆடு தொண்ணூற்றாறின[ல்] திருவி[ள]க்கு
ஒன்றினுக்கு இவன் தானும் இவன அடைகுடி இவன் மகன் ஆயி[ர]வன் அடிகளும்
உடனபிறந்த பாளூர் [2] நிலை[யு]னும் பாளூர் குரு[க]தனும் வளநாட்டு
மீய்செங்கிளிநாட்டுக்கிள்ளிகுடி இருக்கும் இடை[ய]ன் மழையமன் நக்கனும் ஆடவல்-
லானால் [நிசத]-
89 ம அ[ள]க்கக்கட[வ] செய் உழக்கு |||— [சயகூ*] ராஜராஜவளநாட்டு வெட்டியார்படைவீடான
ஜயங்கொண்டசொழநல்லூர் இருக்கும் இடையன் செரி இளங்கொத[ை]யனுக்கு
பெருந்தரம வயிரி சங்கரன் தன்னை உடை[ய]ார் ஸ்ரீராஜராஜ[தெ]வர் சொ[ழிப்பொ]-
ரில் ஊத்தை அட்டாமல் என்று கடவ திருவிளக்குக்[கு தந்த] காசி[ல்] கு[டு]த்த காசு பதி-
னைறினால் ஆடு நாற்பத்தெட்டும் உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவிளக்குக்கு தந்த
பசுவில் அடுத்த பசு இருபத்து நாலி[னா]ல் ஆடு [நா]ற்பத்தெ[ட்]டும் ஆக ஆடு தொண்-
ணூற்றாறினால் திரு[வி]-
90 ளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி இவன் உடன்பிறந்த செரி
பூ[வ]னும் செரி மா[ற]னும் செ[ச]ரி சூற்[றியும்] ராஜராஜ[வ]ளநாட்டு வெட்டியார்-
படைவீடான ஜயங்கொண்[ட]சொழநல்லூர் இருக்கும் இ[டை]யன் பாண்டன் தாழி-
யும் ஆட[வ]ல்லானால் நிசதம் அளக்கக்கடவ செ[ந]ய் உழக்கு ||— [சயஎ*] தஞ்[சாவூ]ர்
உள்ளாலைப்பாண்டிவெளத்து இருக்கும் இடையன் அழியன் சிவனுக்கு நித்தவினோ-
தவளநாட்டு பா[ம்]புணிக்கூற்றத்து அரைசூர் அரைசூருடையா[ன்] ஈராயிரவன் பல்ல-
வயனான மும்மடிசொழபொ[ப]சன் திருவிளக்-
91 குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு நாற்பத்தெட்டும் பெருந்தரம் ராஜராஜவா[ண]கொவ-
ரையன் திருவிளக்குக்கு த[ந்]த ஆட்டில அடுத்த ஆடு நாற்பத்தெட்டும் ஆக ஆடு
தொண்ணூற்றாறினால் திரு[வி]ளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி

இவன் உடன்பிறந்த அழியன் சிங்கனும் சிறப்பன் காரி [ஊ]ரானும் காரி சி[று]புலியும் காரி ஆ[ச்]சனும் ஆடவல்லானல் நிசதம் அளக்கக்கடவ செய் உழக்கு ||— [௬௰௮*] க்ஷத்ரியஶிகாமணிவளநாட்டுச்சுண்டைமூலைநாட்டுக்கொற்றம[ங்]கலத்து இருக்கும் இடையன் [பி]டாரன் விதி-

92 யனுக்[கு பெ]ருந்தரம் ராஜராஜவாணகொவரையன் திருவிளக்குக்கு [த]ந்த ஆட்டில் அடுத்த ஆடு தொண்ணூற்றொன்பதினால் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி இவன் மகன் விதியன் பூவடி[யு]ம் உடன்பிறந்த பிடாரன் குட்டனும் சிற்றப்பன் மகன் பரமடி விதியனும் க்ஷத்ரியஶிகாமணிவளநாட்டுச்சுண்டை[மூ]லைநாட்டுக்கொற்றமங்கலத்து இருக்கும் இடையன் களரி எணனும் ஆடவ[ல்]லானல் நிசதம் [அ]ளக்கக்கடவ செய் உ[ழ]க்கு |||— [௬௰௯*] [க்ஷ]த்ரியஶிகாமணிவளநாட்டு மீய்பொழி[ல]ாட்டு மெ[ற்கு]டி இ[ரு]-

93 க்கும் இடையன் ஊரான் சுவாமிக்குப்பெருந்தரம் நித்தவிநோதவளநாட்டுப்பாம்புணிக்[கூ]ற்றத்து அரைசூர் அரைசூருடை[ட]யான் ஈராயிரவன் [ப]ல்லவ[ய]னை மும்மடி[ெ]சாழபொசீன் திருவிளக்குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு தொண்ணூற்றொன்பதினால் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி இவன் உடன்பிறந்த ஊரான் களரியும் தன்மருமகன் மண்டை பட்டனும் தன் சிற்றப்பன் மகன் விருந்[த]ன் [க]ாரியும் விருந்தன் ஊரானும் ஆடவல்லான[ல் நி]சதம் அள[க்கக்கட]-

94 வ செ[ய் உ]ழக்கு |||— [௭௰*] க்ஷத்ரிய[ஶி]கவளநாட்டு எரிய்நாட்டுக்கருவுகல்வலத்திருக்கும் இடைய[ன்] நக்கன் காட[னு]க்கு பெருந்தரம் ராஜராஜவாணகொவரை[ய]ன் திருவிளக்குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு தொண்ணூற்றொன்பதினால் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி இவன் உடன்பிறந்த நக்கன் பூதியும் தன் சிறப்பன் மகன் செருவிடை காரியும் இவன் மகன் காரி செருவிடையும் ராஜராஜவளநாட்டுப்[ப]ன்[றி]யூர்நாட்டு[ப்]பெருமுள்ளூர் இருக்கும் இடையன் புகழன் பட்டனும் ஆ[டவ]ல்லான[ல் நிசத]-

95 ம் அளக்[க]க்[க]டவ செய் உழக்கு ||— [௭௰௧*] க்ஷத்ரியஶிகாமணிவளநாட்டுக்கிழ்குநிநாட்டு [1] வ[டவாயிட]த்திருக்கும் இடையன் காடன் சிறுகொள்ளிக்கு உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவிளக்குக்கு தந்த பசுவில் அடுத்த பசு எழினால் ஆடு பதினைம் பெருந்தரம் ராஜராஜவாணகொவரையன் திருவிளக்குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு எண்பத்திரண்டும ஆக ஆடு தொ[ண்]ணூற்றொன்பதினால் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானு[ம்] இ[வ]ன் [அ]டைகுடி இவன் மகன் சிறுகொள்ளி செந்தனும உடன்பிறந்த காடன் செ[சந்]தனும் [ஆ]ட[வ]-

96 ல்லானல் நிசதம் அ[ள]க்கக்கடவ செய் உழக்கு ||— [௭௰௨*] க்ஷத்ரியஶிகாமணிவளநாட்டுக்கிழ்குநிநாட்டு[க்]குறுக்கை இருக்கும் இடையன் காரானை நாரா[ய]ணனுக்கு உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவிளக்குக்கு தந்த பசுவி[ல்] அடுத்த பசு ஆறினால் ஆடு பன்னிரண்டும் பெருந்தரம் வாணகொவரையன் திருவிளக்குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு முப்பதும் ஜநநாதத்தெரிந்தபரிவாரத்தார் திருவிளக்குக்கு த[ந்]த காசி[ல்] அடுத்த காசு [ப]தினெட்டினால் ஆடு ஐம்பத்து நா[லு]ம் [ஆக] ஆடு தொண்ணூற்றொன்பதினால் திருவிளக்கு ஒ[ன்றி]னு-

97 க்கு இவன் தானும் இவன் அடைகுடி இவன் மகன் நாராயணன் கொளியும் உடன்பிற[ந்]த காரானை சூற்றியும் காரானை நாகனு[ம்] ஆடவல்லானல் நிசதம் அளக்கக்கடவ செய் உழக்கு ||— [௭௰௩*] தஞ்சாவூர்ப்புறம்படி ஶிவதா[ஸ]ஞ்சோலையான ராஜராஜப்ரஹ்மமஹாராஜப்படைவீட்டு இருக்கும் இடையன் காரி ம[ா]ணிக்கு உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவிளக்குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு ஐம்பத்திரண்டும் பெருந்தரம் உத்தரங்குடையான் கொன் வீதிவிடங்கனை வில்லவன் மூவெந்தவெளான் தன்னை உடையார் ஸ்ரீராஜரா-

98 ஜதேவர் கொழிப்பொரில் ஊத்தை அட்டாமல் என்று கடவ திருவிளக்குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு நாற்பத்து நாலும் ஆக ஆடு தொண்ணூ[ற்]றொன்பதினால் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தா[னு]ம் இவன் [அ]டைகுடி இவன் தமப்[ப]ன் செந்தன் காரியும் தஞ்சாவூர்ப்புறம்படி ஆனைக்கடுவார்தெருவில் இருக்கும் இடையன் பாப்[ப]ான் களரியும் தஞ்சாவூர்ப்புறம்படி ஶிவதாஸ[ஞ்சோ]லையான ராஜராஜப்ரஹ்மமஹாராஜப்படைவீட்டு இருக்கும் இடையன் பிடாரன் கூத்தனும் இப்படைவீட்டு இருக்கும் இடை-

99 ய[ன் தா]ங்கி குட்டெறனும் ஆ[ட]வல்லானல் நிசதம் அளக்கக்கடவ செய் உழக்கு |||— [௭௰௪*] ராஜேந்த்ரஸிம்ஹவளநாட்டு மிறைக்கூற்றத்துத்தேவதானம் திரு[ப்]பழ[ன]த்து இருக்கும் இடையன் [வ]டுகன் வெம்பனுக்கு வேநாவதி குரவன் உலகளந்தானை ராஜராஜப்ரஹ்மாராயன் தன்னை உடையார் ஸ்ரீராஜராஜதேவர் கொழிப்பொரில் ஊத்தை அட்டாமல என்[று] கடவ திருவிளக்குக்கு தந்த பசு[வி]ல் [அடுத்த ப]சு முப்பத்தாறும்

றத்து [ம]ழையூர் இருக்கும் இடையன் தொளன் இனி[யா]னுக்கு உ[டைய]ார் ஸ்ரீரா-
ஜராஜதேவர் திருவிளக்குக்கு தந்த ப[சு]வில் அ-

108 டுத்த பசு ஆறினால் ஆடு பன்னிரண்டும் பெருந்தரம் ராஜராஜவா[ண]கோவரையன்
திருவிளக்குக்கு தந்த ஆட்டில் [அ]டுத்த ஆடு எண்பத்து நாலும் ஆக ஆடு தொ-
ண்ணூற்றாறினால திருவிளக்கு [ஒ]ன்றினுக்கு இவன் தானும இவன் [அ]டை-
குடி இவன் மகன் இனியான் வடுகனும் உடன்பிறந்த தொளன் மூழங்கனும்
தன் சிற்றப்பன் வி[ட]மன் காரியும் தன் சிற்றப்பன் மகன் தனியன் ஸ்ரீரானும் ஆ-
டவல்[ல]ானால் நிசதம் அளக்கக்கடவ நெ[ந]ய் உழக்கு [||—] [சூய*] வாணகொப்[பா]-
டிவ[ள]நாட்டு மீசெங்கிளிநா[ட்டுக்]களத்தூர் இருக்கும் இடையன் சாத்தன் [அ]ர-
ங்கனு-

109 க்கு [1] மிடுர்[நி]ழான் பூகி சாத்தன் திருவிளக்[கு]க்கு தந்த காசில் குடுத்த காசு இருபத்-
தொன்றினால் ஆடு [2] ஆறுபத்து [மூ]ன்றும் பெரு[ந்த]ரம் வயிரி சங்கரன் தன்னை உடை-
யார் ஸ்ரீராஜராஜதேவ[ர்] கொழிப்பொரில் ஊத்தை அட்டாமல் என்று கடவ திருவி-
ளக்குக்கு தந்த காசில் குடுத்த காசு ஆறினால் ஆடு பதினெட்டும் நித்தவினோத-
வளநாட்டு ஆ[வூ]ர்க்கூற்றத்துச்செம்[ப]ங்குடிச்செம்ப[ங்]குடையான் அமுதன் [3] தே-
வன்னான ராஜ[வி]த்யாதரவிழுப்பன[ர]யன் தன்னை உடைய[ார் ஸ்ரீ]ராஜராஜதேவர்
கொழிப்பொரில் [ஊ]த்தை அட்ட[ா]-

## *Fifth Section.*

110 மல் என்று கடவ [தி]ரு[வி]ளக்குக்கு தந்த காசில் குடுத்த காசு ஐஞ்சினால் ஆடு
[பதினைஞ்சு]ம் ஆக ஆ[டு] தொண்ணூற்று[றி]னால் திருவிள]க்கு ஒன்றினுக்கு இவன்
தானும் இவன் [அ]டை-[குடி] வாணகொப்பாடிவளநாட்டு [மீய்செங்கி]ளிநாட்டு
களத்தூர் இருக்கும் இடையன் மெற்குடையான் நம்பனும் இ[வ்]வூர் இருக்கும்
இடையன் சாத்தன் நிச்ச-

111 னும் இ[வ்]வூர் இருக்கும் இடை[ய]ன் தணக்கன் சூற்றியும் இவ்வூர் இருக்கும்
இடை[ய]ன் கருங்குளவன் சிகிட்டனும் [ஆடவல்]லானால் நிசதம் அளக்கக்கடவ
நெ[ய் உழக்கு ||— [சூயக*] [நித்த]விநோதவள[நாட்டு வெண்ணி]க்கூ[ற்]றத்து பூவ-
னூராகிய க[வ]சிகெஸரிசதுர்வெ[தி]மங்கலம் இருக்கும் இடையன் குருந்தன் சாத்-

112 தனுக்கு பெருந்தரம் நம்பன் கூத்[த]ாடியா[ன] ஜயங்கொண்டசொழப்ரஹ்[ம]மாரா[ஜ]ந்
திரு[விளக்கு]க்கு தந்த [ப]சுவில் அடுத்த பசு நாற்பத்தெட்டி[னா]ல் திருவிளக்கு ஒ[ன்-
றி]னுக்கு இவன் தானும் இவன் அ[டைகுடி இவ]னுட[ன்பி]றந்த குரு[ந்]தன்
காரியும் ராஜராஜவளநாட்டுக்[கீ]ழ்வெங்கைநாட்டு மலையா[ண்] பை[டவீட்]டு
இருக்கும் இடையன்

113 பூவடி பிசங்கனு[ம்] ஆடவல்லானால் நிசதம் அள[க்]கக்கடவ நெய் [உ]ழக்கு ||— [சூயஉ*]
ராஜராஜவளநாட்டு நா[ட்டார்க]ல்லூர் இருக்கும் இடையன் கண்டன் ஐ[ய]னுக்கு
[பெருந்தரம் வயலூர் கிழவ ?]ன் திருமலை [வெண்காடன்] திரு[விளக்குக்கு தந்த]
பசுவில் அடுத்த பசு நாற்பத்தாறும் நம்பன் கூத்தாடியான ஜயங்கொண்டசொழப்ரஹ்ம-
மாராஜன் திருவிளக்குக்கு தந்த

114 [ப]சுவி[ல்] அடுத்த பசு இரண்டும் ஆகப்பசு நாற்பத்தெட்டினால் திருவிளக்கு ஒன்றி-
னுக்கு [இவன்] தானு[ம்] இவன் அடைகுடி இவன் தன் சிற்ற[ப்பன் ஐ]யாறன்
இரா[ய]ரி[யு]ம் ராஜ[ராஜவளநா]ட்டு [நாட்டார் கல்லூர் ?] [இ]ருக்கும் இடையன்
மாறன் பொன்னனும் ஆடவல்லானால் நிசதம் அளக்கக்கடவ நெய் உழக்கு ||—
[சூயந*] ராஜராஜவளநாட்டு-

115 ச்சென்னிமங்கலக்கூற்றத்து ஒலைமங்க[ல*]த்து இருக்கும் இ[டை]யன் அரையன்
சாத்தனுக்கு [பெ]ருந்தரம் கரிகாலக[ண்ணப்ப]ல்லவரையன் திருவி[ளக்கு]க்கு தந்த
ப[சுவி]ல் அடுத்த பசு நாற்[பத்தெட்டினால் ?] [திருவி]ளக்கு ஒ[ன்றினுக்]கு இவன்
தானும் இவன் அடைகுடி. நன்மச்சுனன் காரி சாத்தனும் தன் சிற்றப்பன் ம[க]ன் பட்-
டன் அரையனும் ஆ-

116 ட[வல்]லானால் நிசதம் அளக்கக்கடவ நெய் உழக்கு [||—] [சூயசு*] வா[ணு]கொப்பா[டி]-
வளநாட்டு எரி[ய்]நாட்டுக்க[ருவு]கல்வல்லத்திருக்கும் இடைய[ன்] க[ளியன்] அறி[ஞ்-
சி]க்கு பெருந்தரம் வ[ய]லூர் கிழவன் திருமலை வெ[ண்]காடன் திருவிளக்குக்கு தந்த
[ப]சுவி[ல்] அடுத்த பசு நாற்பத்தெட்டினால் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும்
இவன் அடைகுடி

117 இவன் [ம]கன் அறி[ஞ்]சி சீராமனும் அறிஞ்சி சாத்தனும் [அறி]ஞ்சி பிரமனும் அறிஞ்சி குமார-
[னும்] அறிஞ்சி குட்டத்தாழ்[யு]ம் [வ]ாணு(ழ)[கோ]ஸா[ஸ்ரீ]வளநாட்டு எரி[ய்]நாட்டு[க்க]-
ருவு[க]ல்லவலத்திருக்கும் இடையன் தேவன் வீரனும் ஆடவல்லானால் நிச[த]ம்
அளக்கக்கடவ செய் உழக்கு ||| — [ஸ்வஸ்தி*] ராஜேந்த்ரஸிம்ஹவ[ள]நாட்டு பொய்கைநா-
118 ட்டு ம[ண]ாரா[தி]த்[ய]ச்சதுர்வேதிமங்கலத்துப்பிடாகை குலமா[ணி]க்கத்த இருக்கும் இடையன்
[அ]றிஞ்சிகை மதிசூதனுக்கு பெருந்தரம் வ[ய]லூர் கிழ[வ]ன் திருமலை வெண்காடன்
திருவிளக்குக்கு தந்த பசுவில் அடுத்த பசு நாற்பத்தெட்டினால் திருவிளக்கு [ஒ]ன்-
றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி இவன் உடன்பிறந்த அறிஞ்[சி]
119 நாக[னும்] ராஜேந்த்ரஸிம்ஹவளநாட்டு பொய்கைநாட்[டு ெ]பரும[பு]லியூர் இருக்கும் இடை-
[ய]ன் காளாப் புலியனும் ஆடவல்லானால் நிசதம் அள[க்]க்கட[வ] செய் உழக்கு
||— [ஸ்வஸ்தி*] ராஜேந்த்ரஸிம்ஹவளநாட்டு பொய்கைநாட்டு மணாராதித்[ய]ச்சது[ர்வே]திம-
ங்கலத்து இருக்கும் இடையன் மயிலை சடையனுக்கு பெருந்தரம் வய-
120 லூர் கிழவன் [திரும]லை வெண்காடன் திருவிளக்குக்கு [த]ந்த பசு[வில் அ]டுத்த பசு [ந]ாற்-
பத்தெட்டி[னா]ல் தி]ருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி இவன்
கன்மச்சனன் மாராயன் மழபாடியும் ராஜேந்த்ரஸிம்ஹவளநாட்டு பொய்கைநாட்டு மணா-
ராதித்யச்சதுர்வேதிமங்கலத்துப்பிடாகை நக்கபிரா[ன்கு]டிச்சி இருக்கும் இடையன் முத்த-
121 ழி திருமாலிருஞ்சோ[லை]யும் வாணு(ழ)கோஸாஸ்ரீவள[ந]ாட்டு ஆர்க்கா[ட்டு]க்கூற்றத்து சந்தி-
ரவெலகை இருக்[கு]ம் இடையன் குப்பை ஐயாறனும் ஆடவல்லானால் நிசதம் அளக்கக்கட-
[வ] செய் உழக்கு ||— [ஸ்வஸ்தி*] வாணு(ழ)கோஸாஸ்ரீவளநாட்டுப்பெருங்கொ[ளு]ர்
இருக்கு[ம்*] இடையன் விடமன் காளாம்பூவுக்கு பெருந்தரம் வயலூர் கிழவன் திருமலை
வெண்காடன் திருவிளக்கு-
122 [க்]கு தந்த பசுவில் அடுத்த பசு நாற்பத்தெட்டினால் திரு[விளக்கு] ஒன்றினுக்கு இவன் தானும்
இவ[ன்] அடைகுடி இவன் மகன் காளாம்பூ விடமனும வாணு(ழ)கோஸாஸ்ரீவ[ள]நாட்டுப்-
பெருங்கொளூர் இருக்கும் இடையன் நக்கன மாற[னு]ம் இவ்வூர் இருக்கும் இடையன்
மூவரையன சாத்தனும் இவ்வூர் இருக்கும் இடையன தேவன் ஒற்றியும் ஆடவல்லானா-
123 ல் [நி]சதம் அளக்கக்கடவ செய் உழக்கு ||-- [ஸ்வஸ்தி*] ராஜராஜவள[நாட்டுப்]பொயிற்[கூ]-
ற்றத்து தெ[ன]குடி [இருக்]கும் இடையன் பிடாரன் விளந்தைக்கு பெ[ரு]ந்தரம் கரிகால-
கண[ப்]பல்லவ[வ]ரையன் திருவிளக்குக்கு தந்த பசுவில் அடு[த்]த பசு நாற்பத்தெட்டினால்
திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி [உ]டன்பிறந்த பிடாரன்
சாத்தனும் ராஜராஜவ-
124 ளநாட்டு மங்கலவாயில் இருக்கும் இடையன் கலி[யன் தா]மவனும் இவ்வூர் இருக்கும்
இடையன் கலியன் ஆச்சனும் ஆடவல்லானால் நிசதம் அளக்கக்கடவ செய் உழ-
க்கு ||— [ஸ்வஸ்தி*] நித்தவிநோத[வ]ளநா[ட்டு] வீரசோ[ழ]வளநாட்டுச்சிறுவெண்ணியில
இருக்கும் இடையன் வெம்பன் களரிக்குப்பெருந்தரம் அருமொழிப்[ப]ல்லவரையன்
திருவிள-
125 க்குக்கு தந்த [ப]சுவில் அடுத்த பசு நாற்பத்தெட்டினால் திரு[வி]ளக்கு ஒன்றினுக்கு இவன்
தானு[ம்] இவன் அடைகுடி இவ[ன் உ]டன்பிறந்த வெ[ம்]பன் வாளூரும் நித்தவிநோத-
வளநாட்டு வீரசோ[ழ]வள[நா]ட்டு[ச்சிறுவெண்ணி?]யில் இருக்கும் இடையன்
கேசுவன் வெண்ணியும் ஆடவல்லானால் நிசதம் அளக்கக்கடவ செய் உழக்கு [||— ஸ்வ*]
126 அருமொழிதேவவளநாட்டு தென்மலிநாட்டு கெமெண[வ]ாகிய மதனமஞ்சரிச்சதுர்வேதிமங்க-
லத்து இருக்கும் இடை[யன்] பா[சூ]ர் வாஸுதேவனுக்கு உடையார் ஸ்ரீராஜ-
ராஜீஸ்வரமு உடையார் ஸ்ரீ[வி]யில் [அடுத்]த பசு [இருபத்தைஞ்]சும் பெருந்தரம் [நி]-
த்தவிநோதமஹாராஜன் திருவிளக்குக்கு தந்த பசுவில் அடுத்த பசு இருபத்து மூன்-
றும் ஆகபப-
127 சு நாற்பத்தெட்டினால் [தி]ருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி
அருமொழிதேவவளநாட்டு தென்மலிநாட்டு மதனமஞ்சரிச்சதுர்வேதிமங்கலத்து இரு-
க்கும் இடையன் ஒக்கூர் [ஓம ?]ருதனு[ம்] இவ்வூ[ர் இரு]க்கும் இடையன் வெண்காடன்
விழுப்பரை[ய]னும் ஆடவல்லானால் நிச[த]ம் அளக்கக்கடவ செய் உழக்கு ||— [ஸ்வஸ்தி*]
வா[ணு(ழ)]-
128 [கோ]ஸாஸ்ரீவ[ள]நாட்டுக்கீழ்சூதிநாட்டு நாவலூர் இருக்கும் இடையன் நாகன் சடைய-
னுக்கு உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவிளக்குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு
எழுபத்தெட்டும் பெருந்தர[ம்] நித்தவி[நோ]தை[மஹா]ராஜ[ந்?] திருவிளக்குக்கு தந்த
[ப]சுவில் [அ]டுத்த பசு ஒன்பதினால் [ஆ]டு பதினெட்டும் ஆக ஆடு தொண்ணூற்றாறினால்[1]

129 [திரு]விளக்கு ஒன்றினுக்கு இவ[ன] தானும் இவன் அடை[ட]குடி க்ஷத்ரியசிகாமணிவ[ள]-
நாட்டுக்கிழ்கூற்றுகிநாட்டு [1] காவலூர் இருக்கும் இடையன் காளி கூற்றியும் இவ்வூர் இருக்கும்
இடையன் [ஆர ?]ன் மாறனும் ஆடவல்லானு[ல்] நிசத[ம் அ]ளக்கக்கடவ நெய் உழக்கு
||— [எயஉ*] ராஜராஜவளநாட்டுப்புலிவலக்கூற்றத்துக்க[லே]யன்பாடி இருக்கும் [2]

130 இடையன் சிற்றமன் புகழனுக்குப்பெருந்தரம் ராஜராஜவாணகொவரையன் திருவிளக்-
குக்கு தந்த ஆட்டில் அடுத்த ஆடு தொண்ணூற்றுறினுல் திருவிளக்கு ஒன்றினுக்கு இவ-
[ன் தா]னும் இவன் அடைகுடி இவன் உடன்பிறந்த சிற்றமன் குருக்கனும் ஆடவல்லா-
னுல் நிசதம் அளக்கக்கடவ நெ-

131 [ய் உ]ழக்கு ||— [எயரு*] க்ஷத்ரியசிகாமணிவளநாட்டு எரிய்நாட்டு [வி]ண்ணனெரியான
மும்மடிசொழநல்லூர் இருக்கும் இடையன் வடுகன் குப்பை[க்]குப்பெருந்தரம் ராஜராஜ-
வாணகொவ[ரயன் திரு]விளக்[கு]க்[கு] தந்த ஆட்டில் [3] அடுத்த [ஆ]டு அறுபதும தஞ்-
சாவூர்ப்புறம்படி ராஜவித்யாதரப்பெருந்தெருவில் இருக்[கு]-

132 ம் சொனகன் சாவூர் பரஞ்சொதி திருவிளக்குக்கு தந்த காசில் குடுத்த காசு பன்னிரண்டினுல்
ஆடு முப்பத்தாறும் ஆக ஆடு தொண்ணூற்றுறினுல் திருவிளக்கு ஒ[ன்ற]ினுக்கு இவன்
தானும் இவன் அடைகுடி க்ஷத்ரியசிகாமணிவளநாட்டு [எரிய்ந]ாட்டு விண்ணனெரியான
மும்மடிசொழநல்லூர் இருக்கும்

133 இடைய[ன்] காளி அரையனும் இவ்வூர் இருக்கும் இடையன் செந்தன் காடனும் க்ஷத்ரிய-
சிகாமணிவளநாட்டு வடசிறுவாய்நாட்டு வாளுவமங்கலத்து இருக்கும் இடையன் காளி
முளனியும் இவ்வூர் இருக்கும் இடையன் முள்ளூர் வெம்பனும் ஆடவல்லானுல் நிசதம்
அளக்கக்கடவ நெய் உழக்கு ||— [எயச*]

134 ராஜராஜவளநாட்டுப்பன்றியூர்நாட்டுப்பெருமுள்ளூர் இருக்கும் இடையன் மாறன் காடனு-
க்குத்தஞ்சாவூர்ப்புறம்படி ராஜவித்யாதரப்பெரு[ந்தெ]ருவில் இருக்கும் சொனகன் சாவூர்
பரஞ்சொதி திருவிளக்குக்கு தந்த காசில் குடுத்த காசு பதினைஞ்சினுல் ஆடு நாற்பத்தைஞ்-
சும் பொ[பா]ய்கை[நாடு கிழவ]ன் ஆதித்தன் ஸூர்யனான தென்-

135 னவன் மூவெந்தவெளான் திருவிளக்குக்கு தந்த காசில் குடுத்த காசு பதினுறினுல் ஆடு
நாற்பத்[தெ]ட்டும் உடையார் ஸ்ரீராஜராஜீஸ்வரமு உடையார் பண்டாரத்திட்ட காசு ஒன்-
றினுல் ஆடு மூன்றும் ஆக ஆடு தொண்ணூற்றுறினுல் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன்
தா[னும் இவன் அடைகுடி இ]வன் நன்மாமன் காடன் கண்ட-

136 [னு]ம் தன் சிற்றப்பன் கொமடி கலியனும் தமப்பன் ெ[க]ாமடி [4] ம[ா]றனும் க்ஷத்ரியசிகாம-
ணிவளநாட்டுக்கிழ்கூற்றுகிநாட்டு ந[ா]வலூர் இருக்கும் இடையன் நீலன் எழுவனும் ஆடவல்-
லானுல் நிசதம் அளக்கக்கடவ நெய் உழக்கு ||— [எயகு*] ராஜராஜவளநாட்டுச்சென்னி-
மங்க[லக்கூற்ற]த்த[க்கண்ணிகுடி ?] [இரு]க்கும் இடையன் சிங்கன் கொழு-

137 ம்பனு[க்]குப்பெருந்தரம் கொன் கூற்றியான அரு[மொ]ழிப்பல்லவரையன் [5] திருவிளக்குக்கு
தந்த பசுவில் அடுத்த பசு நாற்பத்தெட்டினுல் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன தானும்
இவன் அடைகுடி இவன் உடன்பிறந்த சிங்கன பொன்னனும் ஆ[ட]வல்லானுல் நிசதம்
அளக்[கக்கடவ] நெய் உழ[க்]கு ||— [எயகூ*] [ராஜ]ராஜவளநாட்டுச்சென்னிமங்க-

*Sixth Section.*

138 [லக்]கூற்றத்துக்கண்[ணி]குடி இருக்கும் இடையன் சிறியான பன்[றிக்]குப்பெருந்தரம்
கொன் கூற்றியான அருமொழிப்பல்லவரையன் [6] திருவிளக்குக்கு தந்த பசுவில் அடுத்த
பசு நாற்பத்தெட்டினுல் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இ[வ]ன் அடை-
[குடி] இவன் நன்[ம]-

139 [ருமக]ன் பாண்[டன்] சிவனும் ஆடவல்லானுல் நிசதம் அளக்கக்கடவ நெய் உழக்கு
[||—] [எயள*] ராஜராஜவளநாட்டுச்சென்னிமங்கலக்கூற்றத்துக்கண்ணி[கு]டி இருக்-
கும் இடையன் க[ல்ல]நக்கனுக்குப்பெருந்த[ரம் கொன் கூற்றியான அருமெ]ாழிப்-
பல்லவரை[யன் [7] திருவிளக்கு]க்கு தந்த [பசுவி]-

140 ல் [அ]டுத்த பசு நாற்பத்தெட்டினுல் திருவிளக்கு ஒன்றி[னுக்கு] ஆடவல்[லானு]ல்
நிச[தம் அ]ளக்கக்கடவ நெய் உழக்கு ||— [எயஅ*] க்ஷத்ரியசிகாமணிவளநாட்டு [மீய்]-
செங்கிளிநாட்டு மங்கலத்து இருக்[கு]ம இடை[ய]ன் குருடன் பெரியானுக்கு[ப்]-
பெருந்தரம்

141 வயி[ரி] அருமொழி[யா]ன கரிகாலகண்டப்பல்லவரையன் திருவிளக்குக்கு தந்த பசுவில்[1] [அடுத்]த பசு முப்பத்தாறும் பெருந்தர[ம் கொ]ன் சூற்றியான [அ]ருமொழிப்-பல்லவரையன் திருவிளக்குக்கு தந்த பசுவில் அடுத்த பசுப்பன்னிரண்டும் [ஆ]கப்பசு நாற்பத்தெட்டினால் [தி]ருவிளக்கு ஒன்றினுக்கு

142 ஆடவல்[ல]ானல் நிசதம் அளக்கக்கடவசெய் உழக்கு ||| — [எய்கூ*] [வாண்டு] க்ஷத்ரியசிகாமணிவளநாட்டுக்கிளி[யூர்]நாட்டு மா[ற]னேரி[2] இருக்கும் இடையன் ஆ[பி]ரவன் உகந்தானுக்கு நம்பிராட்டியார ஒலோகமஹாதே[வியா]ர் எழுந்தருளுவித்த பிச்ச-தேவர்க்கு பல[வ]கை[ப்]பழம்ப -

143 டைகளிலார் தி[ரு]விளக்குக்கு தந்த காசில் குடுத்த காசு முப்[ப]த்[திர]ண்டினால் ஆடு தொண்ணூ[ற்]றுறினல திருவி[ள]க்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி இவனுடன்[பி]றந்த ஆபிரவன் நாச்சனும் தமை[யன் மக]ன் கண்ட[ன]னும் வாண்டு க்ஷ[த்]ரிய[சி]கா[ம]ணிவ[ள]நாட்டு[க்கி]ளியூர்[நாட்டு மாற]னேரி இருக்-

144 கும் இடையன் [ப]ழி . . . . . [ராஜேந்த்ரஸி]ம்ஹவளநாட்டுப்பொய்[கை]நாட்டு மண்ணாரிகேசரிச்சதுர்வேதிமங்கலத்து[3] இருக்கும் இடையன் காமன் ஐயாறனும் ஆடவல்-லானல் நிசதம் அளக்[க]க்கடவ செய் உழக்கு || — [அய*] ராஜராஜவளநாட்டு வரகூர்-நாட்டுப்பூவா[ழ்] இருக்கும் இடையன் [ந]ந்தி[4]

145 தூறனுக்கு உடையார் ஸ்ரீராஜ[ரா]ஜீஸ்வரமுடையார் பண்டாரத்தில் அடுத்த பசு நாற்-பத்தெட்டினால் திருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி அரு-மொழிதேவவளநாட்டுப்புறங்கரம்பைநாட்டுப்பாசி[ப்]புரத்திருக்கும் இடையன் சடை-யன்

146 நிச்சனும் இவ்வூ[ர்] இருக்கும் இடையன் ஆரூடி சாத்[த]னும் ஆடவல்லானல் நிசதம் அளக்கக்கடவ செய் உழக்கு || — [அயக*] அருமொழி[தே]வவளநாட்டு மங்கல-நாட்டு மங்கலத்திருக்கும் இடையன் நள்ளாறன் வில்லாலனக்குக்[குரு]க்களாக எழு-[ந்]த[ருளுவித்த வி]திமத்து -

147 க்குக்குருக்கள் ஸர்வசிவபண்டிதர் திருவிளக்குக்கு தந்த காசில் குடுத்த காசு முப்-பத்திரண்டினால் ஆடு தொண்ணூற்றுறினல் [தி]ருவிளக்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அடைகுடி அருமொழிதேவவளநாட்டு மங்கலநாட்டு மங்கல[த்]திருக்கும் இ[டையன்] . . . . [ந]ாரணனு[ம் ஆட]-

148 வல்லானல் நிசத[ம் அ]ள[க்கக்க]டவ செய் உழக்கு ||| — [அயஉ*] ராஜேந்த்ரஸிம்ஹவளநாட்-டுப்பொய்கைநாட்டு மண்ணாரிகேசரிச்சதுர்வேதிமங்கலத்து இருக்கும் இடையன் [கூ]த்தன் குன்றனுக்கு நம்பிராட்டியார் ஒலோகமஹாதேவியார் எழுந்தருளுவித்த பிச்ச -

. . . . . . . . . .[5]

149 களிலா[ர் திருவி]ள[க்குக்]கு தந்த காசில் கு[டுத்த காசு முப்பத்திரண்]டினல் ஆடு தொண்ணூற்றுறி[னல்] திரு[விள]க்கு ஒன்றினுக்கு இவன் தானும் இவன் அ[டை]குடி இவன் உ[ட]ன்பிறந்த கூத்தன் சூற்றியும் கூத்தன் கலிசூரனும் [கூத்]தன் பாம்பனு[ம்] ராஜேந்த்ரஸிம்ஹவளநாட்டுப்பொய்கைந[ா]ட்டு மண்[ண]ாரிகேசரி-

150 ச்சதுர்வே[திம]ங்[கல]த்து இருக்கும் இடை[யன்] . . . . . . . . . [யும்] ஆட-வல்லான[ல்] நிசதம் அ[ள]க்கக்கடவ செ[ய்] உழக்கு ||| — [அயங*]

கல்வெட்டு 24

## கல்வெட்டுச் செய்தி

இக்கல்வெட்டு முன்னைய கல்வெட்டுப்போலவே அமைந்துள்ளதெனினும் இதனுள் ஒரு விளக்குக்கு 96 ஆடுகள் தரப்பெற்றமை மட்டும் கூறப்பெறுகிறது.

1. 96 ஆடுகளில் இராஜராஜன் தந்தன இவ்வளவு

2. பிறர் தந்தன இவ்வளவு என்னும் வரையறை ஒவ்வொரு தொகுதியிலும் உள்ளது. இராஜராஜசோழன் திருவிளக்குக்காகக் காசுகள் தந்திருந்தமை சாசனப் பகுதியால் தெரிய வருகிறது. பிறரும் ராஜராஜனும் தந்திருந்த காசு அல்லது பசு அல்லது எருமையை ஆடாக மாற்றிக்கொடுத்துள்ள பகுதியில் இருந்து

அக்கம் = ஆடு
காசு 1 = 2 அல்லது 3 ஆடு
பசு 1 = 2 ஆடு
எருமை 1 = ஆடு 6

வாய்பாடு பெறப்பெறுகிறது.

கல்வெட்டுப் பகுதியிலிருந்து இராஜராஜசோழன் காலத்திய அரசியல் அலுவலரும் பிறரும் திருவிளக்குக்கு முதற்பொருளும் கால்நடைகளும் தந்திருந்தமை அறியப் பெறும். அவர் விவரம் வருமாறு ;—

1. பெருந்தரம் உத்தரங்குடையான் கேரள வீதிவிடங்கனை வில்லவன் மூவேந்தவேளான்.

2. பெருந்தரம் உத்தரங்குடையான் கோன் வீதிவிடங்கனை வில்லவன் மூவேந்தவேளான்.

3. பெருந்தரம் மாராயன் இராஜராஜன்.

4. பெருந்தரம்................ .......தயிலய்யன்

5. பெருந்தரம் கண்டராச்சன் பட்டாலகனை நித்தவிநோத விழுப்பரையன்.

6. பெருந்தரம் ஆலத்தூருடையான் காளன் கண்ணப்பனை ராஜகேஸரி மூவேந்தவேளான்.

7. உடையார் ஸ்ரீ ராஜராஜதேவற்கு நடுவிடுக்கை செய்த ராஜேந்திர சிங்க வளநாட்டு மிறைக்கூற்றத்து காமரவல்லிச் சதுர்வேதிமங்கலத்துக் கோட்டையூர் சாவாந்திபட்டன் பூவத்தன் பூவத்தனர்.

8. பெருந்தரம் நித்தவிநோத வளநாட்டு ஆவூர்க்கூற்றத்துச் செம்பங்குடி செம்பங்குடையான் அமுதன் தேவனை ராஜவித்யாதர விழுப்பரையன்.

9. பெருந்தரம் நித்தவிநோத வளநாட்டுப் பாம்புணிக்கூற்றத்து அரைசூர் அரைசூருடையான் ஈராயிரவன் பல்லவயனான மும்முடிசோழபோசன்.

10. உய்யக்கொண்டான் தெரிந்த திருமஞ்சனத்தார் வேளத்துப் பெண்டாட்டி வரகுணன் எழுவத்தூர்.

11. மிடுர்க்கிழான் பூதிசாத்தன்.

12. சேனாபதி குரவன் உலகளந்தானான ராஜராஜ மஹாராயன்.

13. வானவன் மாதேவிப் பெருந்தெருவில் இருக்கும் வியாபாரி ஆச்சன் கோனார் காடனான ராஜவித்யாதர மயிலாட்டி.

14. திருமந்திர ஓலை ராஜகேஸரி நல்லூர்க்கிழவன் நாருயில் எடுத்த பாதம்.

15. பெருந்தரம் ஓலோஹமாராயன்.

16. பெருந்தரம் ராஜகேஸரி மூவேந்த வேளான்.

17. சோளகன் சாவூர்ப் பரஞ்சோதி.

18. பெருந்தரம் வயிரிசங்கரன்.

19. பெருந்தரம் ராஜராஜ வாணகோவரையன்.

20. ராஜேந்ரசிம்ம வளநாட்டு மிறைக்கூற்றத்துப் பிரும்மதேயம் காமரவல்லிச் சதுர்வேதிமங்கலத்து நடுவிருக்கை செய்த கொட்டையூர் சுவரபட்டன் பூவத்தபட்டனார்.

21. பெருந்தரம் நம்பன் கூத்தாடியான ஜயங்கொண்டசோழ பிரும்மமாராயன்.

22. பெருந்தரம் வயலூர்க்கிழவன் திருமலைவெண்காடன்

23. பெருந்தரம் கரிகால கர்ணப் பல்லவரையன்.

24. பெருந்தரம் அருமொழிப் பல்லவரையன்.

25. பெருந்தரம் நித்தவிநோத மஹாராஜன்.

26. பெருந்தரம் கோன்சூற்றியான அருமொழிப் பல்லவராயன்.

27. பெருந்தரம் வயிரி அருமொழியான கரிகால கர்ண பல்லவராயன்.

மேலும் சில குழுவினர் திருவிளக்குக்கொடை தந்துள்ளனர். 1. மூலப் பரிவார விட்டேறான ஜனநாதத்தெரிந்த பரிவாரத்தார். 2, ஜனநாதத் தெரிந்த பரிவாரத்தார், 3. மும்முடிசோழத்தெரிந்த பரிவாரத்தார். 4. பல்வகைப்பழம் படைகளிலார் முதலியோர் அக்குழுவினர்.

ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார்க்குத் திருவிளக்குக் கொடைகள் தரப்பெற்றிருப்பதுபோல இக்கோயிலில் எழுந்தருள்விக்கப்பட்டிருந்த திருமேனிகட்கும் திருவிளக்குக் கொடைகள் அளிக்கப்பட்டிருந்தன. 1. (முதல் ராஜராஜசோழன் எழுந்தருள்வித்த திருமேனி) ஆடவல்லானுக்குத் திருவிளக்கெரிப்பிக்க 'உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் மும்முடிசோழத்தெரிந்த பரிவாரத்தார்' பசுக்களை அளித்திருந்தனர். 2. பொய்கைநாடு கிழவன் உலோகமாதேவி எழுந்தருள்வித்த திருமேனிகட்குத் திருவிளக்குக்குக் கொடை நல்கியிருந்தான்.

இச்சாசனம் தஞ்சையில் எழுந்தருள்விக்கப்பட்டிருந்த இரண்டு திருமேனிகளைக் குறிக்கிறது. 1. இராஜராஜனின் தேவியான இலாடமாதேவி என்பவளால் எழுந்தருள்விக்கப்பட்ட பாசுபதமூர்த்திகள். இதற்குத் திருவிளக்குக்காக இவளே மாடுகள் அளித்துள்ளாள். 2. அருமொழிதேவ வளநாட்டு மங்கலநாட்டு மங்கலத்தில் இருக்கும் 'இடையன் நள்ளாறன்' என்பவன் 'வில்லாளனுக்குக் குருக்களாக' பிரதிமம் எழுந்தருள்வித்திருந்தான். இதற்குக் குருக்கள் 'ஈசானசிவ பண்டிதர் முதற்பொருளைத் திருவிளக்கு நிவந்தமாகத் தந்தார் என்பது கல்வெட்டில் கண்டது.

தஞ்சை நகரப் பகுதிகளாக அறியப்படுவன வருமாறு :—

**தஞ்சை புறம்படி பெருந்தெரு**

1. மும்முடிசோழப் பெருந்தெரு
2. நித்தவிநோதப் பெருந்தெரு
3. வீரசிகாமணிப் பெருந்தெரு
4. வானவன் மாதேவிப் பெருந்தெரு

**தஞ்சை புறம்படி வேளம்**

பஞ்சவன் மாதேவியார் வேளம்

**தஞ்சை கள்ளாலை வேளம்**

பாண்டிவேளம்

**தஞ்சை புறம்படி மடவிளாகம்**

ரௌத்ர மாஹாளத்து மடவிளாகம்

**தஞ்சை புறம்படி படைவீடு**

சிவதாஸன் சோலையான இராஜராஜப் பிரம்ம மஹாராஜன் படைவீடு.

**தஞ்சை புறம்படி கோயில்**

பிரம குட்டம்

## கல்வெட்டெண் 25.

(S.I.I. Vol. II. No. 37).

இக்கல்வெட்டு மேலைத் திருச்சுற்றில் முதல் கோட்டத்தில் இரண்டாம் கல்வெட்டாக வெட்டப் பட்டுள்ளது. இது முதல் ராஜராஜசோழன் 'ஆலயத்துப் பிள்ளையார் கணவதியார்க்கு' வாழைப்பழஅமுது செய்தருளச் செய்த ஏற்பாட்டை விளக்குகிறது. இராஜராஜன் முதற்பொருளாக அளித்த 360 காசுகள் நான்கு அங்காடியாரிடம் பிரித்தளிக்கப் பெற்று வட்டிக்குக் காசுக்குப் பதிலாகத் தினந்தோறும் 150 வாழைப் பழங்கள் பெறப்பட்டு அமுதுசெய்விக்கப்பட்டமையை இக்கல்வெட்டு விளக்குகிறது. இதனுள் காசு ஒன்றுக்கு ஒராண்டுக்கு 1/8 காசு வட்டி என்றுள்ளதனால் $12\frac{1}{2}\%$ வட்டி பெறப்பெற்றமை புலனாகிறது. 'ஒருகாசுக்கு 1200 வாழைப் பழம்' பெறலாம் என்பதனை இச்சாசனம் கூறுகிறது.

### TEXT.

*First section.*

[1.] ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] உடையார் ஸ்ரீ-
[2.] ராஜராஜதெவர் ஆலை-
[3.] [ய]த்துப்பிள்ளையார்
[4.] மணவதியார்க்கு வாழைப்[ப]ழ-
[5.] [ம்]. அமுது செய்தருள உடையார் பண்-
[6.] டார[த்]து பொலி[சை]யூட்டுக்கு வைத்-
[7.] தரு[ளின] காசும் இக்காசு [பொலி]சையூட்டுக்கு
[8.] கொண்[ட அங்]காடிகளுங்கல்[லில் வெ]ட்டியது ||— [க*] [ஆ]லை-
[9.] யத்துப்பிள்[ளை]யார் ம[ண]வ[தியார்]க்கு அமுது செய்-
[10.] தருள நிசதம் வாழைப்பழம் [நூ]ற்றைம்பதாக ஓரா[ட்]-
[11.] [டை]க்கு வந்த வாழைப்[பழ]ம் ஐம்பத்து [நா]ல[ாயி]ரத்து-
[12.] க்கு காசு ஒன்றுக்கு [வா]ழைப்பழம் ஆயிரத்[தி]ருநூறாக
[13.] வந்த கா[சு] நாற்[ப]த்து ஐஞ்சுக்கு காசு ஒன்றுக்கு
[14.] ஆட்டை வட்டம் அரைக்காற்காசு [பொ]லிசை[யூ]-
[15.] ட்டா[க] ச[ந்த்ர]ாதித்யவத் செல்ல வைத்த காசு
[16.] முன்னூற்று [அறுப]து [உ*] [இக்க]ாசி[ல்] தஞ்ச[ா]-
[17.] ஊர்க்[கூ]ற்றத்து தஞ்சாவூர்ப்புறம்படி நித்-
[18.] தவி[னோ]தப்பெருந்தெருவில் [ந]கரத்தார் உ-
[19.] டையார் ஸ்ரீராஜராஜதெவர்க்கு யாண்டு இரு-
[20.] பத்தொ[ன்]பதாவது பசான் முதல் கொண்ட கா-
[21.] [சு] அறுபதிற்றுக்காசு ஒன்றுக்கு ஆட்டை வட்டம்

## Second section.

[22.] அரைக்காற்காசு [பொ][லி]சையாக[க்]-
[23.] கட[வ] பொலிசைக்காசு எழரைக்கு
[24.] சந்த்ராதித்ய[வத்] உடையார் பண்டாரத்-
[25.] தெ நிசதம் இடக்கடவ வா[ழை]ப்பழ-
[26.] [ம்] இருபத்தைஞ்சு ||— [௩*] தஞ்சாவூ[ர்]-
[27.] க்கூற்றத்து தஞ்சாவூர்ப்புறம்படி மும்-
[28.] முடிசொழப்பெருந்தெருவில் நகரத்தார் உடையார்
[29.] ஸ்ரீராஜராஜதெவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவ-
[30.] து பசான் முதல் கொண்ட காசு நூற்றிருபதினால் காசு ஒ-
[31.] [ன்]றுக்கு ஆட்டை வட்டம் அரைக்காற்காசு பொலிசையாகக்க-
[32.] டவ [பொ]லிசைக்காசு பதினைஞ்சுக்கு சந்த்ராதித்யவத் உடையார் பண்[டா]-
[33.] ரத்தெ நிசதம் இடக்கடவ வாழைப்பழம் ஐம்பது ||— [௪*] தஞ்சாவூர்[க்]-

[34.] கூற்றத்து தஞ்சாவூர்ப்புறம்படி வீரசிகாமணிப்பெருந்தெருவில்
[35.] [ந]கரத்தார் உடையார் ஸ்ரீராஜராஜதெவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவ-
[36.] [து பசான்] முதல் கொண்ட க[ா]சு நூற்றிருபதினாற்காசு ஒன்றுக்கு ஆட்[டை]
[37.] வட்டம் அரைக்காற்காசு பொலி[சை]யூட்டாகக்கடவ பொலிசைக்காசு [ப]-
[38.] தினைஞ்சுக்கு சந்த்ராதித்யவத் [உ]டையார் பண்டாரத்தெ நிசதம் இடக்கடவ [வா]-
[39.] ழைப்பழம் ஐம்பது ||— [௫*] தஞ்சாவூர்க்கூற்றத்து தஞ்ச[ா]-
[40.] ஊர்ப்புறம்படி திரிபு[வந]மாதெவிப்பெரங்காடி நகர[த்]-
[41.] தார் உடையார் ஸ்ரீராஜராஜதெவற்கு யாண்டு இருபத்[தொ]-
[42.] ன்பதாவது பசாந் முதல் கொண்ட காசு அறுபதினாற்-
[43.] [கா]சு ஒன்றுக்கு ஆட்டை வட்டம் அரைக்காற்காசு பொ[ா]-
[44.] லிசையூட்டாகக்கடவ பொலிசைக்காசு எழரைக்கு [ச]-
[45.] ந்த்ராதித்யவத் உடையார் பண்டாரத்தெ நிசதம் இடக்கட-
[46.] வ வாழைப்பழம் இருபத்தைஞ்சு [௬*]

## கல்வெட்டுச் செய்தி

ராஜராஜசோழன் தஞ்சைப் பெரியகோவிலில் எழுந்தருளியிருந்த 'ஆலயத்துப் பிள்ளையார் கணபதியார்க்கு நாள்தோறும் 'வாழைப்பழ அமிர்து' படைத்தருள்வதற்காகக் கோயில் பண்டாரத்தில் முதற்பொருளை வைத்தமையும் பண்டாரத்தில் இருந்து சில அங்காடியினர் அப்பொருளை வட்டிக்குப் பெற்றமையையும் வட்டியாக நாள் தோறும் வாழைப் பழங்களை அளித்தமையையும் இக் கல்வெட்டு விளக்குகிறது.

ஆலயத்துப் பிள்ளையார்க்கு அமுது செய்தருளத் தினந்தோறும் 150 வாழைப் பழங்கள் வீதம் ஓராண்டுக்கு வேண்டிய வாழைப்பழங்கள் 54000.

காசு ஒன்றுக்கு 1200 வாழைப்பழம் வீதம் 54000 பழம் வாங்கத் தேவையானது 45 காசு.

ஷை பழம் வாங்கக் காசு ஒன்றுக்கு ஆண்டொன்றுக்கு அரைக்காற் காசு வட்டி பெறத்தக்க வீதமாக முதல் ராஜராஜன் முதற் பொருளாக வைத்த காசு 360

இம் முன்னூற்று அறுபது காசுகளும் ஷை வட்டி விகிதத்தில் வட்டிக்கு விடப் பெற்றன.

இதனுள் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர்ப் புறம்படி நித்த விநோதப் பெருந்தெருவில் நகரத்தார், இராஜராஜனின் 29-ஆம் ஆண்டு பசான்முதல் அறுபது காசுகள் வட்டிக்குக் கொண்டனர். 1/8 காசு பொலிசைவீதம் செலுத்தக் கடவ வட்டி 7½ காசு. இக்காசுக்காக இவர்கள் சந்திர சூரியர் உள்ளவரை நாள்தோறும் உடையார் பண்டாரத்தில் செலுத்த வேண்டிய வாழைப் பழங்கள் 25.

இதே ஆண்டில் இதே பகுதியில் இருந்த 'மும்முடி சோழப் பெருந்தெருவில்' இருந்த 'நகரத்தார்' பொலிசைக்குக் கொண்டது 120 காசுகள். ஆண்டொன்றுக்குச் செலுத்த வேண்டிய வட்டி 15 காசுகட்காக நடோறும் செலுத்தும் வாழைப் பழங்கள் 50.

இதேயாண்டில் புறம்படி வீரசிகாமணிப் பெருந்தெருவில் நகரத்தார் 120 காசுகள் கொண்டு 15 காசு வட்டிக்கு நாடொறும் செலுத்தவேண்டியது 50 பழங்கள்.

ஷை புறம்படி திரிபுவன மாதேவிப் பேரங்காடி நறரத்தார் கொண்ட காசு 60. நாடொறும் 7½ காசு வட்டிக்காகச் செலுத்தக் கடவ வாகைப் பழங்கள் 25.

இவ்வாறு இராஜராஜன் முதற்பொருளாகவைத்த 360 காசுகள் வட்டிக்களிக்கப்பட்டுத் தினந்தோறும் 150 வாழைப்பழங்கள் பெறப்பட்டு ஆலயத்துப் பிள்ளையாருக்கு அமுது செய்விக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

# 7. பின்னிணைப்பு

## 1. மும்முடிசோழப் பிரம்மமாராயன் கல்வெட்டுக்கள்

இங்கு மூன்று சாசனங்கள் பின்னிணைப்பாக இடம்பெறுகின்றன. இவற்றுள் முதல் கல்வெட்டுத் தஞ்சைப் பெரிய கோவிலின் தெற்குத் திருச்சுற்றில் வடக்குப் பார்த்த நிலையில் ஒருதூணில் வெட்டப்பட்டுள்ளது. (S I I. II No. 31) இரண்டாவது சாசனம் தென் திருச்சுற்றில் ஒருபுழையில் உள்ளது (எண். 33) மூன்றாவது சாசனம் மேலைத் திருச்சுற்றில் உள்ளதொரு புழையில் வெட்டப்பட்டுள்ளது (எண். 45)

இம்மூன்று சாசனங்களும் 'ஸ்ரீ கிருஷ்ணன் ராமனான மும்முடிசோழப் பிரும்ஹ மாராயன்' என்பவனால் தஞ்சைப் பெரிய கோயில் பிரஹாரமும் மதிலும் மதிலை ஒட்டிய மாளிகையும் (திருச்சுற்று மாளிகை) அமைக்கப்பட்டதாகக் கூறுவன. இப்பணி யாற்றிய இவன் இராஜராஜனின் சேனைத்தலைவன்; அமண்குடி எனப்பெறும் கேரளாந்தகச்சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்தவனாவான்.

ஏனைய அரசியல் அலுவலர் திருப்பணி பற்றிக் கூறும் பகுதியில் இருந்து இக் கல்வெட்டில் இவன்பணி சற்று வேறுபடுத்தி உரைக்கப் பட்டுள்ளது. இவன் முதல் ராஜராஜ சோழன் ஆணையை நிறைவேற்றியவனாகக் கூறப் படுகிறான். 'திருவாய்மொழிந் தருளத் திருச்சுற்று மாளிகை எடுப்பித்தான்' என்பது கல்வெட்டு. இவனை இயற்றுதற் கருத்தாவாகக் கொண்டு ஏவியவன் என்ற முறையில் இராஜராஜன் பெரும்பங்கு பெறுகிறான்.

மேலும் இச்சாசனங்கள் மூன்றிலும், ஏதத் விஸ்வ ந்ருபஸ்ரேணி மௌளிமாலோப லாளிதம் சாசனம் ராஜராஜ்ஸ்ய ராஜகேஸரி வர்மண: என்னும் வடமொழிச் சுலோகம் மட்டும் அமைந்துள்ளமை வரலாற்றுச் சிறப்புடைய தொன்றாகும்.

இத்திருச்சுற்று மாளிகை வாயில்களாகக் கேரளாந்தகன் திருவாயில், இராஜ ராஜன் திருவாயில்களைத் தன்னகத்துக்கொண்டது. கோயில் திருச்சுற்று மாளிகையில் ஆங்காங்கே தடுக்கப்பெற்று திசைத்தெய்வ ஆலயங்களும், பரிவாராலயத்துப் பிள்ளையா ராலயமும் அமைந்திருந்தன.

## Text.

[1.] ஸ்வஸ்தி ஸ்ரீ: [||*] ஸதத விந[த]-
[2.] வரஶ்ரேணிமௌளிஸ்ரஜோமொ-
[3.] வஜ்ராஜிதம் [|*] ஶாஸநம் ராஜராஜஸ்ய ர[ா]-
[4.] ஜகேஸரிவர்ம்மண: ||— [க*] உடையார் ஸ்ரீரா-
[5.] ஜராஜதெவர் திருவாய் மொழிந்த[ரு]ள இ[த்]திருச்[சு]-
[6.] ற்றுமாளிகைய் எடுப்பித்தான் ஸேநாபதி சொழ-
[7.] மண்டலத்து உய்யக்கொண்டார்[1] வளநாட்டு வெண்ணாட்டு
[8.] அமண்குடியான கெரளாந்த[க]ச்சதுர்வ்வேதிமங்கலத்-
[9.] து ஸ்ரீக்ருஷ்ணன் இராமனான மும்மடிசொழப்ரஹ்மமாராய[ன்] [உ*]

## Text.

[1.] ஸ்வஸ்தி ஸ்ரீ: [||*] ஸதத வி-
[2.] நதவரஶ்ரேணிமௌ-
[3.] ளிஸ்ரஜோமொவஜ்ராஜி-
[4.] தம் [|*] ஶாஸநம் ராஜரா-
[5.] ஜஸ்ய ராஜகேஸரிவ-
[6.] ர்ம்மண: [க*] உடையார் ஸ்ரீரா-
[7.] ஜராஜதெவ[ர் திரு]வ[ா]-
[8.] ய் மொ[ழி]ந்தருள இ[த்]திருச்சு-
[9.] ற்றுமாளிகை எடுப்பித்த[ா]-
[10.] ன் ஸேநாபதி செ[ா]ழமண்டல-
[11.] த்து உய்யக்கொண்டான்வ-
[12.] ளநாட்டு வெண்ணாட்டு அம-
[13.] ண்குடியான கெரளாந்தகச்ச-
[14.] துர்வ்வேதிமங்கலத்து ஸ்ரீக்ரு-
[15.] ஷ்ணன் இராமனான மும்ம-
[16.] டிசொழப்ரஹ்மமாராயன் [உ*]



தஞ்சைப் பெரிய கோயில் – அடித்தள வரைபடம்.

© பிரஞ்ச் இந்தியக் கலைக்கழகம்
பாண்டிச்சேரி.

## Text.

[1.] ஸ்வஸ்தி ஶ்ரீ: [||*] ஸாநந்த

[2.] விஶ்வ[பூப]ஶ்ரேணி-

[3.] ஶெ[ள]ஷீசாஶோவ-

[4.] [ஶோ]ர[ஜி]கே [|*] ஶாஸநம்

[5.] [ரா]ஜராஜஸ்ய ராஜ-

[6.] [கே]ஸரிவர்ம்மண: || [௨] [௧*]

[7.] [உ]டையார் ஶ்ரீராஜ-

[8.] [ரா]ஜதேவர் திருவாய்

[9.] [மொ]ழிந்தருள இத்தி-

[10.] [ரு]ச்சுற்றுமாளி[கை]க

[11.] எடுப்பித்தான்

[12.] ஸேநாபதி சோ-

[13.] ழமண்டலத்து உ-

[14.] ய்யக்கொண்டா-

[15.] ன்வளநாட்டு [வெ]-

[16.] ண்ணாட்டு அமண்[கு]-

[17.] டியான கௌராங்[த]-

[18.] கச்சதுர்வே[தி]ம[ங்]-

[19.] கலத்து ஶ்ரீக்ருஷ்[ண]

[20.] இராமனை மும்[ம]-

[21.] டிசோழப்ரஹ்மமா[ரா]-

[22.] யன் || ௨ ௨ [௨*]

## 2. சொற்பொருள் விளக்கம்

அக்கம் - நாணயம்; தானியம்

அக்கன் - தமக்கை

அக்ரம் - இறுதிப்பகுதி

அங்கித்தேவர் - அக்கினித்தெய்வம்

அடுத்தமுறை - வாரிசு

அடுத்து விளக்கின - வரிசையாகவைத்த

அடை குடிகள் - பெறும் குடிமக்கள்

அட்டித் திருவடி தொழுத - பொழிந்து திருவடி வணங்கிய

அம்பு முதுங் கரடு - கரடு முரடான முத்து

அரசி மாணிக்கம் - தலையான ராணிச்சிவப்பு

அர்த்த சம்பத்து - பொருட்செல்வம்

அஞ்சு அடுத்து - ஐந்தாக வரிசைப்படுத்தி

அணுதேசம் - கண்காணுநாடு

அனுவட்டம் - நீளமாக உருண்ட முத்து

ஆகாவிசாதி - மணிவகையுள் ஒன்று

ஆரியம் – சமஸ்கிருதம்

ஆடவல்லான் - நடராஜர்; இப்பெயரால் மரக்கால்; காசுக்கல்

ஆடுசார்த்தி - ஆட்டுடன்

ஆட்டை வட்டம் - ஒரு வருஷ முழுமைக்கும்

ஆதிபூமி - யாகசாலை

ஆலவிருஷம் – ஆலமரம்

ஆளிட்டு - வேறொரு ஆளை நியமித்து

ஆனையாள் - யானைப்பாகன்

ஆஸனம் - பீடம்

இடத்திருவடி நிலை - இடது ஸ்ரீ பாதத்தைவைக்கும் குறடு

இரண்டாம் தரம் - இரண்டாம் தரக்கூறு

இலைச்செப்பு - வெற்றிலைவைக்கும் தட்டு

இலைச்சுளி – இலைக்கருக்கு

இலைத்தட்டு – இலைவடிவில் அமையும் தட்டு

இறையிலி - வரி இல்லாத நிலம்

இறைகட்டின (நிலம்) – வரி இவ்வளவு என நிர்ணயிக்கப்பட்ட (நிலம்)

ஈசானமூர்த்தி - வடகிழக்குத் திசைக்குரிய தெய்வம்

ஈச்சொப்பிகை - ஈயை ஓட்ட உபயோகிக்கும் கைவடிவிலானபாத்திரம்

ஈழச்சேரி – ஈழவர் எனும் குடியினர் சேர்ந்து வாழிடம்

உசரம் - உயரம்

உடன் பிறந்தான் - சகோதரன்

உடையார் - உடமையாளர்; அரசன், இறைவன் பெயர் முன்னமையும் சிறப்புப்பெயர்

உத்துங்கதுங்கன் - இராஜராஜனின் சிறப்புப்பெயர்

உபபீடம் - ஸ்ரீவிமான அடித்தளம்

உமாபரமேச்வரி - உமாதேவி

உலகளந்தான் - நிலமளந்தமைகாரணமாக இராஜராஜன் பெற்ற சிறப்புப்பெயர்

உவைச்சு - கோயில் பூஜை

உட்படும் - ஒத்துக்கொள்ளும்

உள்ளாலை - மதிலின் உள்ளமையும் பகுதி

ஊடறுத்துப்போன - வயல் முதலானவற்றின் இடையில் ஊடுருவிச்சென்ற

ஊத்தை அட்டாமல் - கேடுறாமல்

ஊர்ந த்தம் - மக்கள் சேர்ந்துவாழுமிடம்

எடுபிச்ச - எடுப்பித்த கட்டிய

ஏற்றின – குடியேற்றுவித்த

ஒட்டுவட்டில் - லேசான குழிவுப்பாத்திரம்

ஒப்பன் - அப்பன்

ஒப்பு முத்து - தரமான முத்து

ஒரணை - ஜோடி

ஜகதிப்படை - ஸ்ரீவிமானத்து உறுப்பில் ஒன்று

ஸ்தூபித்தறி - விமானத்தின்மேல் ஸ்தூபியை நடஅமைந்த கல் கட்டுத்தறி

கங்கில் - இடைதாங்குகழி

கடமைக்குச் செலவுபெற - பணிபுரிய ஆகும் செலவுத்தொகை பெற்றுக்கொள்ள

கடவார் - உரிமை பொருந்தியவர்

கணிமுற்றுட்டு – சோதிடர்க்கான மான்ய நிலம்

கண்காணித் தட்டாண்மை - தட்டார்களுள் நிபுணத்வம்

கண்டநாண் – அட்டிகை

கபாலம் - மண்டை ஓடு; அதுபோன்ற பாத்ரம்

கபோதம் - கபோதகப் படை; ஸ்ரீவிமானத்துறுப்பு

கர்ணப்பிராவிருதர் - சிறுதுணியால் தலையும் காதும் மூடியவராக உள்ள குள்ளர்

கலசப்பானை - மூக்குடைய கெண்டி

கலசம் - தூபி

கவித்த - உள்ளடக்கிய

கழஞ்சு - 2. 1875 கிராம் எடை யுடைய பொன்னெடை கல்

கள்ளிப்பூ - கள்ளிப்பூப் போன்ற அணி

கறண்டிகைச் செப்பு – கண்ணாம்புக் கரண்டகம்

கற்கிடை - கல்சுடுமிடம்

கற்றளி - கற்கோயில்

கன்னான் - உலோகத் தொழில் செய்பவன்

காணி - உரிமை; காணியாட்சி

காணிக்கடன் - நிலஉரிமைக் கட்டணம்

காந்தர்வர் - இசைப்புலவர்

காந்தளூர்ச்சாலை - காந்தளூரில் இருந்த வேதக் கல்விச்சாலை அல்லது இராணுவசாலை

கால்மாட்டில் – கால்நடைச் செல்வம்

கால்மாற்று - ¼ அல் 1/42 தரக்கூறு

காவிதிமை செய்தல் – காவிக் கல்வேலை செய்தல்

காளம் - எக்காளம்

காளாஞ்சி - அர்க்யவட்டை

கானபாடி – கானம் பாடுவோர்

கிண்கிணிபெரும் நாண் – கிண்கிணியுடைய அரைஞாண்

கிடாரம் - வாயகன்ற பாத்ரம்

கிம்பிரி - மகரம்

கிழக்கடைய – கிழக்குத் திசைநிரம்ப

கின்னரர் - பாதி பறவை பாதி மானிடர் உடல் உடைய தேவர் இருவர்

கீழ்க் கணக்கு - உதவிக்கணக்கர்

கீழ்ப்புறன் – கீழ்ப்புறம்

குடுத்த – கொடுத்த

குணவியது – குணமுடையது

கும்பத்தகடு - மத்தகத் தகடு

குரவன் - ஞானாசிரியன்

குருவிந்தம் - தரக்குறைவுடைய சிவப்புமணி

குழல் - ஊதுகுழல்

குளிர்ந்தநீர் - ஸ்படிகநிற முடைய (மணி)

குறங்கு அறுத்து - இடையில் வெட்டி

குறுமடல் – விபூதிமடல் (சிறிது)

குறைபோந்து - முழுமைபெறாமல்

கூற்றம் - தாலூகாவுக்குச் சமமான நிலப்பரப்பு

கெண்டி - செம்பு

கேஸாந்தம் - முடிவரை

கைதவகை – தழை முதலானவை

கைவட்டகை - பிடியுடைய வட்டிகை

கொட்டகாரம் - (நெற்) களஞ்சியம்

கொட்டிமத்தளம் – சித்தமத்தளம்

கொண்ட - கைப்பற்றிய

கொம்பின் கொள்கை – தந்தப்பூண் கட்டிய கோல்

கோலினமை செய்வார் - ஏவலர்

கொள்கைத்தேவர் – ஸ்ரீபலிகொள்ளும்மூர்த்தி

கோமளம் - கோமேதகம்

சகடை - முரசு

சக்கம் - முத்து

சட்டை - செப்புப்பட்டை

சட்டுவம் - சிறுகரண்டி

சண்டேச்வரப் பிரசாததேவர் – சண்டேசானுக்கிரஹ தேவர்

சந்ராதித்தவத் – சந்ர சூரியர் உள்ளவரை

சப்பத்தி – தட்டையான முத்துவகை

சரடு - கயிறு

சன்னலியன் - சுண்ணம்பு நீறுவடிப்பவன்

சாலாபோகம் – கல்விச்சாலைகளுக்கான இறையிலி நிலம்

சாலியர் – நெசவாளர்

சிரோவர்த்தனை - சடைமுடி

சிவந்தநீர் - சிறப்புநிற முடைய(முத்து)

சிவபாதசேகரன் – சிவபெருமானுடைய ஸ்ரீபாதங்களைச்சூடிய ராஜராஜன்

சிறகு - புறம்

சிறுதனம் - கைப்பணம்

சின்னம் - நினைவாகத் தரப்படுவன

சுரபி - கறவைப்பசு

சுருக்கின - பதித்த

சூலம் - திரிசூலம்

செப்பு - செம்பு

சோனகச்சிடுக்கு - யவனப்பாணியில் அமைந்த பின்புறம் கூடுடைய அணி
தச்சாசார்யன் - தச்சருட் தலைவன்
தச்சர் - மரவேலை கல்வேலை செய்வோர்
தடவிக்கட்டிய - பொதிந்து இருக்கிய
தண்டவாணி - மாற்றறியும் உரையறி ஆணி
தண்ணிய – குறைந்த
தமருகம் – உடுக்கை
தமிழ் – தமிழ்ப்பாடல்
தய்யான் - தையற்காரன்
தலைமாறு - பதிலாக
தலைவாய் - முன்புறம்
தவளச்சத்ர மகுடம் - வெண்குடை மகுடம்
தளிகை - நைவேத்திய கலன்கள்
தளிச்சேரி - கோயிலுக்குரியார் சேர்ந்து வாழும் இடம்
தளிச்சேரிப்பெண்டிர் - ஆடல் மகளிர்
தன்னேற்றம் - தனக்குச் சார்பாக உள்ளார்
தக்ஷிணமேரு விடங்கர் – தஞ்சை சோமாஸ்கந்தர்; ஒரு நிறை கல்
தாமரைச் செயல் - தாமரை போலச் செய்யப்பட்ட (அணி)
தாரைத்தாள்கட்டில் - தாராபிஷேக பாத்ரம்
தானைத் திருப்பட்டிகை-இடுப்பில் அணியும் மணிகளையுடையகச்சு
திரு - சோதிடன்
திருநயனம் – கண்
திருநாமம் – பெயர்
திருப்பட்டிகை - இடைக்கச்சை
திருப்பரிகலம் – பாத்திரங்கள்
திருப்பள்ளித் தொங்கல் - மகரதோரணம் முதலானவை
திருப்பள்ளித் தொங்கல் மகுடம் – ஆரங்கள் தொங்கும் மகுடம்
திருப்புறக்குடை - முதுகுப்புறம் அமையும் அங்கி
திருமஞ்சனம் – அபிஷேகம்
திருமஞ்சனத்தார் வேளத்துப்பெண்டாட்டி – திருமஞ்சனப்பணி புரிவோருள் இருக்கும் பெண்பணியாளர்
திருமந்திரவோலை - அரசன் திருவாய் மொழிந்தருளுவனவற்றை ஓலையில் எழுதுவோன்
திருமேனி - இறைவனுக்கு எழுந்தருள்விக்கும் திருவுரு
திருவாய்மொழிந்தருளு(தல்) - ஆணையிடுதல்
துடர் - வளையம்
துணையன் - உதவியாள்

தூக்கம் – தொங்கட்டான்
தேவதானம் - சிவாலய இறையிலி
தொட்கு - தொட்டி
நக்கன் - சிவன், தளிச்சேரிப் பெண்டிர் பெயர் முன்னமையும் ஒட்டு
நடுவுரத்ன பட்டிகை – நடுவில் ரத்னம் பதித்த பட்டிகை
நவரத்னம் – சிவப்பு; முத்து; பவளம்; வயிரம் நீலம்; புட்பராகம்; கோமேதகம், வைடூரியம், மாணிக்கம் எனும் ஒன்பது வகை மணிகள்
நம்பிராட்டி – இறைவி
நாண் - கயிறு
நாளதிலே - அதேநாளில்
நிசதம் - தினந்தோறும்
நிம்பொளம் – இளம்பச்சை நிறமுடைய (மணி)
நியாயம் – முறையினர்
நியாயங்களிலார் – குழுவினர்
நிலையாய்த் தீக்ஷித்தார் – நிலைப்பணியாளர்
நிவந்தக்காரர் – அறக்கட்டளை மூலமாகச் சம்பளம் பெறுவோர்
நிவந்தம் - அறக்கட்டளை
நீர் கோ(த்தல்) - நீரில் மூழ்கி இருத்தல்
நெடுமடல் - விபூதி மடல்
பங்கு – பாகம்
படுகண் - மாட்டும் வளையம்
படிக்கம் – எச்சிற் படிக்கம்
பண்டாரம் – கருவூலம்
பண்டாரத்தில் கூடி முதலான – கருவூலத்து இட்டு முதற்பொருளாக்கிய
பண்டாரி - கருவூலக் காப்பாளர்
பத்மம் – தாமரை
பத்மாசனம் - தாமரை ஆசனம்
பந்தம் – இணைப்பு
பந்து - உறவினர்
பயிட்டம் - முத்து வகையில் ஒன்று
பரமஸ்வாமி – மகாதேவர்
பரிவார ஆலயம் – சுற்றாலயம்
பர்வதம் - மலைமுடி
பலகுழிவு – பல பள்ளங்கள்
பலம் - 35 கிராம் எடை
பழமுத்து – தொன்மையானமுத்து
பளிங்கு - ஸ்படிகம்

பறளை - பொட்டு
பன்மையார் - பலதுறையினர்
பாசமாலை - கழுத்தணியில் ஒன்று
பாசம் - கயிறு
பாடலியம் - வாத்தியக்கருவி இசைத்தல்
பாதவக்காணி - கோயிலார் தரும் உரிமை நிலம்
பாதாதிகோஸக்தம் - அடிமுதல் முடிவரை
பிங்களம் - தாம்பாளவகை
பிஞ்சு - முதிராதமுத்து
பிதா - தகப்பன்
பிரபை - திருவாசி
பிரசாதம் - அனுக்ரஹம்
பிருஷ்ட கண்டிகை - பின் அலங்காரம்
பீடம் - ஆசனம்
புச்சாதி சிகாந்தம் - வால்முதல் பிடரிவரை
புறம் - வெளி
பூமி சம்பத்து - பூ சொத்து
பெருந்தரம் - மேனிலை அரசலுவல்
பேரப்பன் - பெரியப்பன்
பேரால் - வகை ஒன்றுக்கு
பொக்கணம் - சோழியப்பை
பொத்தி - ஒருவகை ரத்னம்
பொலிசை - வட்டி
பொலிசை யூட்டு - வட்டிவருவாய்
பொன்னின் கொடி - பொற்துவஜம்
மடவிளாகம் - மடைவிளாகம்
மண்டை - கபால வடிவுடைய கிண்ணம்
மரகதம் - மரகதப் பச்சை
மஹா சாகை - பெருங்கிளை
மா - $\frac{1}{20}$
மாங்காய் நாண் - மாங்காமாலை
மாணி - பிரம்மச்சாரி
மாண் - மாணி
மாநவட்டில் - கஸ்தூரிக் கிண்ணம்
முத்தின் உழுத்து - முத்தணி கலன்
மூலரத்ன பண்டாரம் - இரத்தினக் கருவூலம்
மூழல் - மூடி

மோதிரம் - மோதிரம் போன்ற வளையங்கள்

வடுகக்காவலர் - பைராகிகள்

வண்ணத்தார் - வண்ணம் தீட்டுவோர்

வண்ணிகை - பலவர்ண முடைமை

வர்க்கம் - பரம்பரை

விண்ணப்பஞ் செய்த(ல்) - ஓதுதல்

வெள்ளாண் - பயிர்செய்யும் உரிமை

வேலி - $6\frac{2}{3}$ ஏக்கர் பரப்பு

வேளம் – காவல் புரியும் இடம்

ஸ்ரீகார்யம் - திருக்கோயில் நிர்வாகம்

ஸ்ரீபாகுவலயம் - தோளணி

ரத்ன நியாசம் - விக்ரஹ பீடத்தில் ரத்னக் கற்களைப் பதித்தல்

ரத்னத்தய்யான் - கல்பதிக்கும் வேலைப் பாடறிந்த தட்டான்

ராஜாவர்த்தம் - தலைமை பொருந்திய ரத்னக்கல்

ரிஷி - முனிவர்

லசுநி - இலையின் இறுதி

ஹளஹளம் - இரத்தின வகையுள் ஒன்று.

